# சத்திரிய சிகாமணி நல்லூர்

## (கீழப்பாவூர்)



முனைவர். சு. பார்வதி

ஸ்ரீ பராசக்தி பதிப்பகம்

# சத்திரிய சிகாமணி நல்லூர்

## (கீழப்பாவூர்)

**முனைவர். சு. பார்வதி**
தமிழ்த்துறை உயராய்வு மையம்.
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
குற்றாலம் - 627 802.

**ஸ்ரீ பராசக்தி பதிப்பகம்**
**கீழப்பாவூர்.**

வெளியீடு : **ஸ்ரீ பராசக்தி பதிப்பகம்**
22, படிச்சாமிக் கோவில் தெரு,
கீழப்பாவூர் அஞ்சல் - 627 806.
ஆலங்குளம் வட்டம்.
திருநெல்வேலி மாவட்டம்.
அலைபேசி : 99658 62447

நூற் பெயர் : சத்திரியசிகாமணிநல்லூர் (கீழப்பாவூர்)

ஆசிரியர் : **முனைவர்.சு.பார்வதி**

பதிப்பு : முதற்பதிப்பு, ஜூன் 2012

உரிமை : ஆசிரியருக்கு

மொழி : தமிழ்

எழுத்து : 11 புள்ளிகள்

பக்கங்கள் : 232

விலை : ரூ. 150

அச்சகம் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.

# வாழ்த்துரை

ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வரும் முனைவர். சு.பார்வதி அவர்கள் எழுதிய 'சத்திரிய சிகாமணி நல்லூர்' (கீழப்பாவூர்) என்ற நூல் இவ்வூரின் வரலாற்றையும் மன்னர்களின் ஆட்சிக் காலங்களையும் எடுத்துரைக்கின்றது. இந்நூல் கோயில் தோற்றம், கட்டடக்கலை, சிற்பக்கலை, கல்வெட்டுச் செய்திகள், அரசாங்க வருவாய் மற்றும் நிலங்கள் பற்றியக் கருத்துக்களையும் கூறுகின்றது. மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் இவ்வூர் இராணுவத் தளமாக விளங்கியமையைப் பார்க்க முடிகின்றது. பழைமை வாய்ந்தத் திருவாலீச்சுவரர் கோயில், ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் ஆகிய இருகோவில்களின் வரலாற்றை வெளிக்கொணர்ந்த முனைவர். சு.பார்வதி அவர்களுக்குப் பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**திரு.அர.சுதர்சன்,**
இணை ஆணையர்,
இந்துசமய அறநிலையத்துறை,
திருநெல்வேலி.

**முனைவர்.ச.வே.சுப்பிரமணியன்,**
மேனாள் இயக்குநர் - உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
மதிப்புறு இயக்குநர்,
உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்,
தமிழூர்,
அடைக்கலப்பட்டணம் அஞ்சல் - 627 808
நெல்லை மாவட்டம்

## வாழ்த்துரை

முனைவர்.சு.பார்வதி சிறந்த ஆய்வாளர். எதையும் நுணுகிப் பார்க்கும் ஆற்றலுடையவர். தான் பிறந்த ஊரில் உள்ள கோவில்களைப் பற்றிய ஆய்வு செய்தது அவர் செய்தச் செயல்களுள் நல்ல செயல். அவ்வூரில் சமய நல்லிணக்கம் என்ற நிலையில் சைவக் கோயிலும், வைணவக் கோயிலும் உள்ளன. இரண்டும் ஏறத்தாழ 1100 ஆண்டு களுக்கு முந்தியவை. கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் அனைத் தையும் படித்து, அதனடிப்படையில் கருத்துக்களைத் தந்துள்ளார்.

ஏற்கனவே, இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு தென்காசிப் பாண்டியர் பற்றி ஆய்வுசெய்து ஒரு கட்டுரை கொடுத்துள்ளார். கீழப்பாவூர் கோயில்களில் ஆட்சிப்புரிந்தப் பாண்டியரின் செயல்பாடுகளைச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்.

பொதுநிலையில் கோயில்களின் அமைப்பு, அவை தோன்றியக் காலங்கள், அக்கோயில்கள் வளர்ந்த முறை, கோயிலில் உள்ள கட்டடக்கலை மற்றும் சிற்பங்கள், அரசாங்கம் கொடுத்த இறையிலி நிலங்கள் போன்றவற்றையெல்லாம் பல நூல்களைப் படித்துத் தெரிந்துத் தந்துள்ளார். கோயில்களின் நிழற்படங்கள் சிலவற்றையும் தெளிவாக எடுத்துக் கொடுத்துள்ளார்.

காலந்தோறும் ஊர்ப்பெயர்கள் மாற்றம் அடைந்து கொண்டிருப்பது இயல்பு. மாற்றம் தான் உலகத்தைச் செயல்படுத்திக் கொண்டிருக்கின்றது. மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கும்.

முனைவர்.சு.பார்வதி ஏற்கனவே ஊர்ப்பெயர்கள் பற்றி ஆராய்ச்சியும் செய்தவர். அதனால், கீழப்பாவூர்க்குப் பழையப் பெயராகச் சத்திரிய சிகாமணி நல்லூர் என்று இருந்ததைக் காரணங்

காரியங்களுடன் விளக்கியுள்ளார். ஆங்கிலத்திலும் ஒரு சில பகுதி களைத் தந்துள்ளார்.

பொதுநிலையில் தமிழில் நூல்கள் எழுதினாலும், ஆங்கிலத் திலும் சில செய்திகளைத் தரும் போது அந்நூல், இந்திய அளவிலும், உலக அளவிலும் பரவுவதற்குக் காரணமாக அமைகிறது. அதனால் இரு மொழிகளில் நூல் எழுதுவது தமிழ் நாட்டைப் பற்றிப் பிற மொழியினர், பிற நாட்டினர் தெரிந்துக் கொள்வதற்கு வாய்ப்பாக அமையும்.

முனைவர்.சு.பார்வதி முயற்சியையும், எடுத்துக்கொண்ட காரியத்தைச் சிறப்பாகச் செய்கின்ற ஆற்றலையும் பாராட்டி மகிழ்கின்றேன். இதுபோன்ற நல்ல நூல்கள் பலவற்றை அவர் எழுத வேண்டும் என்று வேண்டிக்கொண்டு அவருக்கு எல்லா நலன்களையும் அவர் எழுதியுள்ள கோயில் தெய்வங்கள் தருவார்கள் என்று கடவுளர்களை வணங்கி முனைவர்.சு.பார்வதியை வாழ்த்துகின்றேன்.

தமிழ் இளமையைத் தரும், வளமையைத் தரும், பெருமையைத் தரும், கேட்டதை எல்லாம் தரும். அந்நிலையில் தமிழுக்குத் தொண்டு செய்யும் முனைவர்.சு.பார்வதி சிறப்பாக வாழ்வார்.

அன்புள்ள

(ச.வே.சுப்பிரமணியன்)

**Dr.M.D.Shampath,**
Director of Epigraphy (Retd)
Archaeological Survey of India,
Mysore

---

Kshatriyasikhamaninallur was the original name with which Pagur was referred to from eleventh century onwards. It was once an army headquarters. Munai-edir-mohar are those who revel at the front. Tennavan Apattudavigal were the king's own royal regiment. These army men along with the dandanayakan, tandirattar and tandirakaranattar have contributed in large measure for the temple building by their liberal grants and services. The rulers of the Pandya family patronized equally the Saivite and Vaishnavite temples at Kshatriyasikhamaninallur by donating lands in and around Pagur. Those lands are from the places of royal importance and called Aringigaipirattichaturvedi-mangalam and Telungukulakala chaturvedi-mangalam. The Tiruvalisvara temple and the Vishnu temple representing the Munai edir mohar vinnagar Alvar temple may be dated back to the time of Sadaiyavarman Srivallabha of acc.1101A.D. From the epigraphs of those temples we come to know that Krishnacult had come into existence and seem to have gained currency during the thirteenth century A.D.

It is interesting to note that different types of lands have been endowed. To the temples at Kshatriya sikhamaninallur. The author has enriched the work through the discovery of new epigraphs and the deciphered texts. A detailed study of these epigraphs made by her will reveal the temple architecture and sculpture and is a real contribution to understand the regional history and culture. This sort of regional study will go a long way to reconstruct the history of the region or bigger division as a whole.

Dr.S.Parvathi's efforts to bring at a connected history of the place Pagur deserves congratulation. This work will be very useful to the readers and historians.

**(M.D.SAMPATH)**

# என்னுரை

வரலாறு என்பது நடந்த நிகழ்வுகளைப் பதிவுச் செய்வதாகும். இப்பதிவில் முதலிடம் வகிப்பது கல்வெட்டாகும். அந்தந்தக் காலகட்ட வரலாற்று நிகழ்வுகளை அச்சில் தாங்கி நிற்கும் புதையல்கள்தான் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் ஆகியன. வரலாற்றைத் தாங்கி நிற்கும் பதிவுச் சின்னம் கோயில். ஆன்மீகத்தின் வளர்ச்சியில் வரலாற்றுப் பின்னணியை இணைத்து கட்டடக்கலை அமைப்பினை அழகுபெறச் செய்துக் கோபுரமாய் நாட்டின் சிறப்பையும் ஊரின் சிறப்பையும் தங்களின் சிறப்பையும் உயரச் செய்தவர்கள் மன்னர்கள். அவர்களின் வரலாற்றுக் குறியீடுதான் கோயில். கீழப்பாவூரின் வரலாற்றுப் பெயர் சத்திரிய சிகாமணி நல்லூர் ஆகும். இவ்வூர் இராணுவத்தளமாக மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் விளங்கியுள்ளது. வேளாண்மையும் சிறப்புற்றுள்ளது. இக்கோவிலின் வரலாற்றை உலகறியச் செய்யும் பொருட்டு சத்திரிய சிகாமணி நல்லூர் என்றப் பெயரில் (கீழப்பாவூர்) நூல் எழுதப்பட்டுள்ளது. இந்நூல், ஊரின் வரலாற்றை கல்வெட்டுச் செய்திகளின் ஆதாரம் கொண்டும், கட்டடக்கலை அமைப்புக் கொண்டும் எழுதப்பட்டுள்ளது. இந்நூலில் சிற்சில கிரந்த எழுத்துக்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றுக்குப் பதிலியாகத் கல்வெட்டுத் தமிழ் எழுத்துக்கள் இடம்பெற்றுள்ளன. கல்வெட்டுக் கலைச்சொற்கள் வரிகள் மற்றும் நிலங்களுக்கான விளக்கங்கள் கல்வெட்டுக் கலைச்சொல் அகராதிகளிலிருந்துத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

'சத்திரிய சிகாமணி நல்லூர்' (கீழப்பாவூர்) நூல் வெளியிட அனுமதி அளித்த இந்துசமய அறநிலையத்தாருக்கும் ஸ்ரீநரசிம்ம சுவாமி கைங்கர்யச் சபாவினருக்கும் எனது நன்றியை உரித்தாக்கு கின்றேன்.

எனது முயற்சியை வெற்றியாக்குவதற்கு அனுமதிக் கொடுத்த ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி செயலரும் திருநெல்வேலி இந்துசமய அறநிலையத்துறை இணை ஆணையருமான திரு.அர.சுதர்சன் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவர அனுமதியளித்தக் கோயில் நிர்வாக செயல் அலுவலர் திரு.ர.கணபதிமுருகன் அவர்களுக்கும் மற்றும் அலுவலர் களுக்கும் நன்றியைக் கூறிக்கொள்கின்றேன். ஒரு நூலினை ஆக்கம்

செய்வதற்கு ஊக்கப்படுத்தி என்னை தமிழுலக்கு அறிமுகப்படுத்தி வாழ்த்துரை வழங்கிய அறிஞர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களுக்கு எனது நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன்.

இந்நூலினை வடிவமைத்து வெளிவருவதற்குக் காரணகர்த் தாவாகவும், அணிந்துரையும் நல்கிய முனைவர்.எம்.டி.சம்பத் அவர் களுக்கும் முனைவர்.ச.பங்கஜம் அவர்களுக்கும் நன்றியைக் காணிக்கை ஆக்குகின்றேன். இந்த நூல் வெளிவருவதற்கும் எனது வளர்ச் சிக்கும் ஊன்று கோலாக இருந்துவரும் ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி முதல்வர் முனைவர்.சி.இராஜேஸ்வரி அவர்களுக்கு நன்றி உடையேன்.

இந்நூலுக்கு உதவிய ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி வரலாற்றுத் துறைத்தலைவர் (ஓய்வு) திருமதி.எஸ்.சரோஜா அவர்களுக்கு நன்றியைக் கூறிக்கொள்கின்றேன். ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, தமிழ்த்துறை உயராய்வு மையத்தின் தலைவர் முனைவர்.பா. வேலம்மாள் அவர்களுக்கும் மற்றும் பேராசிரியப் பெருமக்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

மேலும், இந்நூலின் ஆய்வுக்கு ஒத்துழைப்புக் கொடுத்த அர்ச்சகர் திரு.இரா.ஆனந்தன் அவர்களுக்கும், திரு.மகேஷ் அவர்களுக்கும் நன்றியைக் கூறிக்கொள்கின்றேன்.

எனது முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருக்கும் என் அம்மா திருமதி.சு.சிவகாமி அவர்களுக்கும், சகோதரர்கள் திரு.சு. மூர்த்தி, திரு.சு.தங்கராஜ் அவர்களுக்கும் மற்றும் குடும்பத்தாருக்கும் நன்றியை நவில்கின்றேன்.

கணினியில் அச்சுப்படுத்தி நூலினைக் கட்டமைத்துத் தந்த திருமதி.வே.நித்தியகல்யாணி, க. அருணாதேவி அவர்களுக்கும் நன்றியை இயம்பு கின்றேன். இநநூலினை வடிவமைத்துக் கொடுத்த சிவகாசி, சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ் (பி) லிட் உரிமையாளர் களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் வரலாற்று ஆய்வுத்தளத்திற்கு மைல்கல்லாக விளங்கும் என்ற நம்பிக்கையுடன்.

சு.பார்வதி

# பொருளடக்கம்

# 1. கீழப்பாவூர் - ஊர்ப்பெயராய்வும் எல்லைகளும்

திருநெல்வேலி மாவட்டம் ஆலங்குளம் வட்டத்தில் 15கி.மீ தொலைவில் திருநெல்வேலி நெடுஞ்சாலையின் இடையில் அமைந்துள்ளது கீழப்பாவூர். இவ்வூரில் திருவாலீச்சுவரர்கோயிலும், ஸ்ரீவெங்கடாசலபதி பெருமாள் கோயிலும் உள்ளன. இவ்விரண்டு கோயில்களும் மிகவும் பழமையானதாகும்.

கீழப்பாவூர், மேலப்பாவூர், பாவூர்சத்திரம் போன்ற மூன்று ஊர்களின் பொதுப்பெயர் பாகூராகும். பாவூரின் கிழக்குப்பகுதிக் கீழப்பாவூர் என்றும் மேற்குப்பகுதிப் மேலப்பாவூர் என்றும் மக்கள் பயணிக்கும்போது களைப்பாறும் மடம் அல்லது சத்திரம் நடுவே உள்ளதால் பாவூர்சத்திரம் என்றும் அழைக்கப்படுகின்றன. பாவூர் - பாவு + ஊர் எனக்கொண்டு நூல்களுக்கு பாவுஇடும் இடத்தில் சிறுகுடியாக இருந்துப் பின்னர் ஊராக வரிவடைந்து உள்ளது. பாகுக்காய்ச்சியதால் பாகூர் என்றும் வழங்கப்பட்டிருக்கின்றது. பாகு என்ற சொல் நெசவுத் தொழிலில் பாகுக் காய்ச்சுதலைக் குறிக்கும். நெசவுத்தொழிலில் பாகுவிடுதல் நடைபெற்றதனைக் குறிப்பதாகவும் இவ்வூர்ப் பெயர் வழங்கப்பட்டது. பதனீர் இறக்கம் அதிகமாக இவ்வூரில் இருந்துள்ளதாகவும் கருப்பட்டிற்காகப் பாகுக்காய்ச்சிய தால் இவ்வூர் ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் செவிவழிச் செய்திகள் தெரிவிக்கின்றன. எனவே பாகூர் என்பது பிற்காலத்தில் பாவூராக மருவி வழங்கப்பட்டிருக்கின்றது என்பது புலப்படுகின்றது.

குற்றாலத்தில், குற்றாலீஸ்வரர் கோயிலிலுள்ளக் கல்வெட்டு ஒன்றும் கீழப்பாவூரை பாகூர் என்றே குறிப்பிடுகின்றது. அக்கல வெட்டு, முதலாம் இராசராச சோழன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியப் பிறகுச் சிற்றரசர்களை நியமித்தான். அவர்கள் சோழர் பாண்டியச் சிற்றரசர்கள் என்ற பெயரில் சுமார் 200 ஆண்டுகளுக்கு மேல் குற்றாலம் சார்ந்தப் பகுதியில் ஆட்சிப் புரிந்துள்ளனர். முதலாம் இராசஇராசன் மகன் முதலாம் இராசேந்திரன். இவனும் பாண்டிய நாட்டில் சோழநாட்டுப் பிரதிநிதிகளைச் சோழப் பாண்டியர் என்றப் பட்டத்தோடு ஆளச் செய்துள்ளான். இவனுடைய இரண்டாம்

ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் குற்றாலம் கோயிலில் உள்ளது. அக்கல்வெட்டு,

> "பாகூரைச் சார்ந்த வெள்ளால தேவன்
> பட்டழகன் என்பவன் ஒரு நொந்தா
> விளக்கு குற்றாலத்து இறைவனுக்குக்
> கொடுத்தான்" (A.R.E. No. 479 of 1917, P. 44)

என்று கூறுகின்றது. திருவாலீச்சுவரர் கோயில், ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் கல்வெட்டுக்கள்இவ்வூரை 'முனையெதிர்மோகா 'பாகூர்', 'முனைமோகர்பாகூர்', 'குறுமறைநாட்டுப் பாகூர்' ஆகியப் பெயர்களில் குறிப்பிடுகின்றன. முனையெதிர் மோகர், முனைமோகர், தென்னவனாபத்துதவிகள் போன்றவைப் படைகளைக் குறிக்கும் பெயர்களாகும். இவ்விரண்டுப் படைகளும் பாண்டியர்களுடையப் படைகளின் பெயர்களாகும். இவ்வூர் இராணுவத் தளமாகச் சிறப்புற்று விளங்கியதனைக் கொண்டு இவ்வூருக்கு அப்பெயர்கள் வழங்கப் பட்டிருக்க வேண்டும் என்பதும் இங்கு நோக்கத்தக்கது. தென் ஆரிய நாடு, வடஆரிய நாடு, குறுமறைநாடு போன்ற நாட்டுப் பிரிவில் பாகூர் குறுமறை நாட்டிற்குள் உள்ளடங்கியதாகும். குறுமறை நாட்டுப் பிரிவும் முனைமோகர் படைபெயரும் இணைந்து கல்வெட்டில் 'குறுமறைநாட்டு முனைமோகர் பாகூர்' என்றும் 'குறுமறை நாட்டுப் பாகூர்' என்றும் வழங்கப்பட்டிருக்கின்றன என்பது புலப்படுகின்றது.

குறுமறைநாடு என்பது சிறிய மலைநிலத்தைக் குறிப்பதாகும். பல ஊர்களை உள்ளடக்கிய நாடாகும். தென்காசி காசிவிஸ்வநாதர் கோயில் கல்வெட்டில், 'கீழப்பாவூர் திருவாலீச்சுவரர் கோயிலுக்கு' என்று கூறப்பட்டுள்ளதனை அறிய முடிகின்றது. பிற்காலப் பாண்டியர் ஆட்சியில் இப்பெயர் அழைக்கப்பட்டிருக்கின்றது என்பதும் தெரி கின்றது.

கீழப்பாவூரின் வரலாற்றுப்பெயர் சத்திரியசிகாமணி நல்லூராகும். ஸ்ரீவெங்கடாசலபதி, திருவாலீச்சுவரர் ஆகிய இரண்டு கோயில்களின் கல்வெட்டுக்களும் 'குறுமறை நாட்டுப் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர்' என்று குறிப்பிடுகின்றன. சத்திரிய சிகா மணி என்பது முதலாம் இராசஇராசனின் விருதுப்பெயாராகும்.

"குறுமறை நாட்டுப் பாகூரான சத்திரிய சிகாமணி
நல்லூர் உடைஆர் திருக்கவாலீசுவரமுடைய நாயனருக்கு"
(திரு.கோ.க. எண். 1)

என்று திருவாலீச்சுவரர் கோயில் சடையவர்மன் ஸ்ரீ வல்லபன் கல்வெட்டும்

"குறுமறை நாட்டு பாகூரான சத்திரிய
சிகாமணி நல்லூர் முனையெதிர் மோகிற்கு"
(திரு.கோ.க. எண். 9)

என்று மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் கல்வெட்டும்,

"குறுமறை நாட்டுப் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர்"
(திரு.கோ.க.எண். 5)

"குறுமறை நாட்டுப் பாவூ சத்திரிய சிகாமணி நல்லூர்"
(திரு.கோ.க.எண். 6)

என்று முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு களும்

"குறுமறை நாட்டுப் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர்"
(திரு.கோ.க.எண். 3)

என்று சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டும் ஊரின் பெயர்களைத் தெரிவிக்கின்றன.

ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் கல்வெட்டுக்கள்,

"- யச் சிகாமணி நல்லூர் முனைகதிர் மோகர் விண்ணகர்"
(வெங்.கோ.க.எண். 3)

என்றும்

ஸ்ரீவிக்கிரம பாண்டியன் மெய்க்கீர்த்தியில்,
"சத்திரிய சிகாமணி நல்லூர் முனைவது மோகரான"
(வெ.கோ.க.எண். 6)

என்றும்

"ஸ்ரீபாண்டிநாட்டுக் குறுமறைநாட்டுப் பாகூரான சத்திரிய
சிகாமணிநல்லூர்" (A.R.E. 395/1917)

என்றும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

மன்னார்கோயில் இராஜகோபாலசாமி கோவிலின் குலசேகர ஆழ்வார் பிரகாரத்தின் தென்புறச் சுவரிலுள்ள, மாறவர்மன் ஸ்ரீசுந்தரபாண்டியனின் பதினொன்றாவது எதிராமாண்டு கல்வெட்டில், "குறுமறை நாட்டுப் பாகூரான சத்திரிய சிகாமணிநல்லூர்" முளைகதிர் மோகற்கு" (R.Thirumalai, Rajendra Vinnagar, PP-XII-XIII) என்று குறிப்பிடுவதிலிருந்து பாகூருக்குச் சத்திரிய சிகாமணி நல்லூர் என்றப் பெயர் இருந்துள்ளது என்பதனைக் காட்டுகின்றது. இப்பெயர் சோழராட்சியில் வழங்கப்பட்டுள்ளது என்பதும் தெரிகின்றது. இராச இராசனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று சத்திரியசிகாமணியாகும். சோழ மண்டலத்திலிருந்த வளநாடுகள் தொண்டைமண்டலம், சயங்கொண்ட சோழமண்டலம், ஈழமண்டலம், மும்முடிச்சோழமண்டலம், சத்திரியசிகாமணி மண்டலம், நுளம்பாடி, நிகரிலிச்சோழமண்டலம் போன்றவையாகும். அவற்றில் ஒன்று சத்திரிய சிகாமணி மண்டலமாகும். இராசஇராசன் ஈழத்தைக் கைப்பற்றியப் பின்னர் தன்னுடைய ஆட்சியில் அரசியல் அதிகாரிகளைக் கொண்டு ஆண்டுவந்தான். அவ்வதிகாரிகளுள் ஒருவனான நல்லூர்க்கிழவன் தாழிகுமரன் ஈழமண்டலத்தின் மேல் மாதோட்ட நகரத்தில் வேந்தன் பெயரால் இராசஇராசேச்சுரம் கோயில் ஒன்றைக் கட்டுவித்தச் செய்தியினைக் குறிக்கும் கல்வெட்டில்,

"சோழ மண்டலத்து க்ஷத்திரிய சிகாமணி
வளநாட்டு ......." (S.I.I. Vol. II No. 1412)

என்று குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது. கொங்காள்வார் மரபில் வந்த ஒருவனை எதிர்த்து இராசஇராசன் குடமலை நாட்டைத் தாக்கினான். பனசோகே இடத்தில் நடந்த இப்போருக்கு மனிஜா என்பவன் மிக்க வீரத்துடன் போர்புரிந்து வெற்றிபெறச் செய்தான் என்பதனைப் பாராட்டி அவனுக்கு 'க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வான்' என்ற பட்டத்தை வழங்கியுள்ளான். இராசராசன் தனது பட்டப்பெயரை இவனுக்கு வழங்கியுள்ளான் என்பது தெரிகின்றது. சத்திரிய சிகாமணி என்பது, அரசமரபிற்கு (சத்திரிய) முடிமணி போன்றவன் என்னும் பொருளில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று க.த.திருநாவுக்கரசு கூறுகின்றார் (க.த.திருநாவுக்கரசு, முதலாம் இராசராசசோழன், ப. 85).

சத்திரியசிகாமணி சோழமண்டலத்தில் ஒரு வளநாடாகவும் இராசஇராசனின் பட்டப்பெயராகவும், சோழர்களுக்கெல்லாம்

அரசர்களுக்கெல்லாம் மணிமுடியாகத் திகழ்ந்தவன் என்பதனையும் அறியமுடிகின்றது. 'சத்திரிய சிகாமணி நல்லூர்' என்ற பெயரில் நல்லூர் என்பது துணைப் பெயர்ச்சொல். நல்லூர் என்பது நல்ல + ஊர் ஆகும். தமிழ்நாட்டு ஊர்களை நல்லூர் என்றும் புத்தூர் என்றும் வகுத்துக் கூறுவர். தமிழ்நாட்டை ஆண்ட அரசர் பலர் தம் பெயர்கள் விளங்கு மாறு பல நல்லூர்களை உருவாக்கியுள்ளனர். அவற்றில் ஒன்று இவ்வூராகும்.

ஸ்தல அரசாங்க அமைப்பில் ஊர் என்றும் சபை என்றும் இருவகை அமைப்புகள் இருந்தன. ஊர் என்பது கிராமத்தையோ நகரத்தையோ குறிப்பதுடன் 'ஊர்' என்ற ஊராட்சி அமைப்பையும் குறிக்கும். இந்த ஊர் என்னும் ஆட்சி அமைப்பு அதிகாரிகளைக் கொண்டு கல்வெட்டுகளைப் பொறிக்கச் செய்வதுண்டு. ஊர் என்ற ஆட்சி அமைப்பின் நடவடிக்கையும் சபை நடவடிக்கையும் ஒரே ஊரில் நடந்தால் அவ்வூர் நல்லூர் என்று அழைக்கப்பட்டிருக்கின்றது என்பது தெரிகின்றது. கீழப்பாவூரில் ஊர் என்ற அமைப்பும், 'தந்திர விநியோகம்' என்ற சபையும் இருந்துள்ளதாலும் நல்ல விளைநிலங் களைக் கொண்டு வேளாண்மை சிறப்புற்று விளங்கியமையாலும் நல்லூர் என்றப் பெயர் ஏற்பட்டிருக்கின்றது. எனவே கீழப்பாவூரின் வரலாற்றுப் பெயர் 'சத்திரிய சிகாமணி நல்லூர்' என்று சிறப்புற்று விளங்கியத் தன்மையினைக் காண முடிகின்றது.

கீழப்பாவூர் ஒரு காலத்தில் குறுங்கானமாக இருந்துள்ளது. குரங்குகள் வாழும் குறுங்கானமாகத் தோற்றமளித்துள்ளது. கீழப்பாவூர் எல்லைகளாக அரிஞ்சிகைப் பிராட்டி சதுர்வேதி மங்கலமும் தெலிங்க குலகால சதுர்வேதி மங்கலமும் குறிக்கப் பெற்றுள்ளன. இவ்வூர்கள் கீழப்பாவூருக்குக் கிழக்கில் அமைந்துள்ளன. அரிஞ்சய சோழன் (கி.பி. 956 - 957) இராசஇராசனின் பாட்டான் ஆவான். அவனது மகள் பெயர் அரிஞ்சிகைப்பிராட்டி ஆவாள். இவன் அரிஞ்சய சோழனை நினைவு கூர்தற்பொருட்டு வடஆர்க்காடு மாவட்டத்தில் திருவல்லத்திற்கு வடக்கே மேற்பாடி எனும் ஊரில் அரிஞ்சியேச்சுரம் எனும் கோயிலைக் கட்டுவித்தான். அதுபோல் அரிஞ்சிகை பிராட்டி என்ற பாட்டன் மகள் பெயரில் அரிஞ்சிகை பிராட்டி சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட் டுள்ளான் என்பது தெரிகின்றது.

வெங்கடாசலபதி கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் கோழித்தோட்டம் நில எல்லையாக உள்ளது. கோழி என்பது இராச இராசனின் சேவற்கோழிப் போரினைக் குறிப்பதாகும். பாண்டிய நாட்டுப் போரில் தோல்வியடைந்துள்ளான். இராசஇராசனுக்கும் பாண்டியனுக்கும் சேவற்கோழிப் போர் நடைபெற்றதனை இக் கல்வெட்டில் உள்ளத் தோட்டத்தின் பெயரினை வைத்துக் கணிக்க முடிகின்றது. சேவற்கோழிப்போர்ப் பற்றியச் செய்திகள் தஞ்சை பெரிய கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள நெடியக் கல்வெட்டுக்களில் 37 இடங்களில் சேவற்கோழிப்போரில் வெற்றிப் பெற பல நிவந்தங்கள் செய்யப்பட்டதனைக் கூறுகின்றன. கோழிப்போரில் வெற்றிப் பெற்றப் பாண்டிய மன்னன் யாரென்றுத் தெரியவில்லை. இராசஇராசன் காலம் கி.பி. 985-1014 ஆகும். ஆகையால் இவ்வூர் 10-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாக இருக்க வேண்டும் என்பது கணிக்கப்படுகின்றது.

தெலிங்ககுலகாலன் இராசஇராசனின் பட்டப் பெயராகும். இராச இராசன் தெலுங்குச் சோழனாகிய வீமனை வென்று அவனது நாடுகளான சீட்புலி, பாகி ஆகியவற்றைத் தன்னாட்சிக்குக் கீழ்க் கொண்டு வந்தான். இந்த வெற்றியைத் தேடித் தந்தவன். கி.பி.991-ல் அவற்றைக் கைப்பற்றும் பொருட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துக் காரு குடியுடையான் பரமன் மழபாடியானான மும்முடிச்சோழன் ஆவான். இவனது தலைமையில் கோவிலுக்கு நிலம் தானமாக வழங்கிய திருவாலீச்சுவரர்கோயில் கல்வெட்டில், நிலத்தின் எல்லையாக வீரஇராஜேந்திரன் வாய்க்கால் குறிப்பிடப்பட்டுள்ளது. இராஜேந் திரனுக்குப் பிறகு வந்த சோழமன்னன் வீரஇராஜேந்திரன் ஆவான். இவனது காலம் கி.பி.1062-63ஆம் ஆண்டாகும். வாய்க்காலின் பெயர் வீரஇராஜேந்திரன் என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இப்பகுதி சோழரின் ஆதிக்கத்தில் இருந்ததாகத் தெரியவருகின்றது. இவனது காலத்தை வைத்துப் பார்க்கும்போது இவ்வூர் பத்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்திலேயே விளங்கியதாகத் தெரிகின்றது. எனவே இவ்வூர் 1100 வருடங்கள் பழமையானதாகும்.

தெலிங்கச் சோழனை வென்று வெற்றிப் பெற்றதால் தெலிங்க குலகால சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் வழங்கிற்று.

அறிஞ்சிகைப்பிராட்டிசதுர்வேதிமங்கலம் இன்று வீரகேரளம் புதூர் என்றும் தெலிங்ககுலகாலசதுர்வேதிமங்கலம் குறுங்கானம்

என்றும் அழைக்கப்பட்டு வருகின்றன. குறுங்கானம் என்று இப் போதும் வழங்கப்பட்டு வருகின்றது. கீழப்பாவூருக்கு வடக்கில் இவ்வூர் உள்ளது. இவ்வூருக்கு மேற்கே சித்ராநதி ஆறு உள்ளது. தெற்கே கண்ணமங்கலம் உள்ளது. இப்போது இது கண்டமங்கலம் என்று வழங்கப்படுகின்றது. இந்நான்கு ஊர்களும் கீழப்பாவூருக்கு எல்லைகளாக இருந்துள்ளன. நிலதானங்களைக் குறிப்பிடும்போது இவ்வூர்களுக்கு அருகிலுள்ள ஊர்களின் பெயர்கள் கல்வெட்டுக் களில் இடம்பெற்றுள்ளன.

கீழப்பாவூரில் திருவாலீச்சுவரர், ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலுக்கு அருகில் அரசன் கட்டியக் கோட்டை ஒன்று இருந்ததனை நினைவுகூர்தற் பொருட்டு கோட்டையூரும், கரைநிலத்து மூலையில் உள்ளதால் 'மூலக்கரையூரும்' கருமடை உள்ளதால் கருமடையூரும் ஆயன்மடை உள்ளதால் ஆயன்மடையூரும் மேற்குப்பக்கம் மேலூரும் இவ்வூரின் உட்பிரிவு ஊர்களாகக் காணப்படுகின்றன. கோட்டையூரில் கோட்டை இருந்ததற்கான எந்த அடையாளமும் காணப்படவில்லை. அரண்மனைக் கிணறு இருந்ததாகவும், தற்சமயம் அதனை மூடிவிட்டதாகவும் செவிவழித் தகவல் தெரிவிக்கின்றது.

keelapavoor Map



# 2. கீழப்பாவூர் கோயில்கள்

கி.பி.எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் குகைக் கோயில்களாகியக் குடைவரைக் கோயில்கள் கட்டும் மரபு வழக்கற்றுக் கட்டுமானக் கோயில்கள் தோன்றலாயின. கி.பி.9-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்துக் கற்கோயில்கள் பாண்டிய நாட்டில் தோன்றலாயின. இந்தியத் தீபகற்பகத்தின் தென்கோடியில் அமைந்துள்ளது பாண்டிய நாடு. மன்னராட்சியில் அரசர்களின் புகழைக் கோயிலும் கோயிலின் புகழ் அரசர்களாலும் பெருகி வந்தன. சிவனுக்குச் சிறப்புடையக் கோயில்கள் மொத்தம் 1008 ஆகும். அவற்றுள் திருவாலீச்சுவரர் கோயிலும் ஒன்றாகும். அதுமட்டுமல்லாது 108 திவ்வியத் தேசங்களாகப் போற்றப்பட்டு வருபவை ஆழ்வார் கோயிலாகும். அவற்றின் வழியில் ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலும் ஒன்றாகும். கீழப்பாவூரில் 400க்கும் மேற்பட்டப் பெருந்தெய்வம் மற்றும் சிறுதெய்வம் உட்பட்டக் கோயில்கள் காணப்படுகின்றன. அவற்றுள் வரலாற்றுச் சிறப்புமிக்கக் கோயில்கள் திருவாலீச்சுவரர், வெங்கடாசலபதி அக்கசாலை விநாயகர், மூர்க்கக விநாயகர் போன்றக் கோயில்கள் பிரசித்திப் பெற்றக் கோயில்களாகும்.

## திருவாலீச்சுவரர் கோயில் :

திருவாலீச்சுவரர் கோயில் மிகவும் பழமையானதாகும். ஈசனது கோயில் ஈச்சரம் என்று பெயர் பெறும். இங்கு வீற்றிருக்கும் இறைவன் திருவாலீச்சுவரர் ஆவார். திருவாலீச்சுவரம் தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களில் ஊர்ப்பெயராகவும் கோயில் பெயராகவும் வழங்கப்பட்டு வந்துள்ளது. லிங்கம் என்பது தூய்மையான அக்கினியைக் குறிக்கும். வேள்வியின் உயிர்நாடியாக விளங்கிய அந்தத் தீ பின்னர் கோயிலில் உயிர்நாடியாக விளங்கும் மூர்த்தமாக அமைந்தபோது அம்மூர்த்தத் திற்கே லிங்கம் என்ற பெயர் அமைந்தது என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்குகின்றது. லிங்கம் என்பது வடசொல்லாகும். லிம் என்பது நலத்தையும் ஆம் என்பது வெளிவருவதையும் குறிக்கும். லிங்கத்தின் அடிப்பாகம் படைக்கும் தெய்வமாகியப் பிரம்மனுக்கு உரியது என்றும், இரண்டாம் பாகமாகிய நடுப்பாகம் எட்டு பாகங்களைக் கொண்டதால் எட்டு சக்திகளையும் ஒன்பதாம் சக்தியையும் சேர்த்து நவசக்திகளால்

திருமாலைகாக்கும் தெய்வத்திற்கு உரியது என்றும் மேல்பாகமாகிய முன்பாகம் முக்கண் முதல்வனாகியச் சிவபெருமானுக்கு உரியது என்றும் வாழ்வியற்களஞ்சியம் விளக்கம் அளிக்கின்றது. கீழப்பாவூர் திருவாலீச்சுவரர் சுயம்புலிங்கமாகக் காணப்படுகின்றார். தாரு லிங்கம், கைலலிங்கம், லோகலிங்கம், இரத்தினலிங்கம், மணிலிங்கம், வானலிங்கம், இராஜலிங்கம், மணல்லிங்கம் ஆகிய லிங்கங்கள் காணப்படுகின்றன. இவற்றில் எல்லாவற்றையும் விடச் சிறந்த லிங்கம் சுயம்புலிங்கமே ஆகும். 1.பரார்த்தலிங்கம், 2.இஷ்டலிங்கம் என இருவகையாகப் பிரிக்கலாம். பரார்த்தலிங்கம் என்பதன் பொருள் சர்வசங்கமர் காலம் வரை சிவபெருமான் சக்திமிக்கவராக இருந்து ஆன்மாக்கள் அனைத்திற்கும் அனுக்கிரகம் செய்வதாகும். அது சுயம்புலிங்கம், கானாலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மானுடலிங்கம் என்று ஐந்து வகையாகப் பிரித்துக் கூறப்படுகின்றது. தானே எழுவது சுயம்புலிங்கம். ஞானியர்களுக்கும் சித்தர்களுக்கும் ஆண்டவன் ஒளியுருவில் காட்சி வழங்கிய இடத்தில்தான் சுயம்புலிங்கம் தோன்றும். ஞானியரோ, சித்தரோ தன் ஆன்மாவாகிய ஒளியினை அவ்வொளியில் கலந்துவிட வைப்பதால் சுயம்புலிங்க மானது சித்தர்கள் விளம்பும் உண்மைகண்டச் செம்பொருளாகும். சுயம்புலிங்கமாக விளங்கும் திருவாலீச்சுவரர் பெயர்கள், சடைய வர்மன் ஸ்ரீவல்லபன் கல்வெட்டில்,

> "குறுமறை நாட்டுப் பாகூர் சஷத்திரியர்
> சிகாமணிநல்லூர் உடைஆர் திருக்கவாலீ
> சுரமுடை....த்துக்கு"
>
> (திருவா.கோ.க.எண். 1)

என்றும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் இருபதாமாண்டு கல்வெட்டு,

> "குறுமறை நாட்டுப்பாகூர்ரான சத்திரிய சிகாமணி நல்லூர்
> முனைஅதி மொகர்க்குதண்ட
> நாயகம் செய்வார்கள்ளொமும் தந்திரத்து காரணவரொமும்
> தந்திரத்தொமும்
> இவ்வூர் திருக்கூவலீஸ்வரமு உடையார்"
>
> (திருவா.கோ.க.எண். 8)

என்றும் அவனுடைய இருபதாமாண்டின் எதிராமாண்டு கல்வெட்டு,

"குறுமறைநாட்டு பாகூரான சத்திரிய சிகாமணி
நல்லூர் முனைஎதிர்மொகர்க்கு தண்டநாயகம்
செய்வார்கள்ளொம் தந்திரத்துக்காரணவரொமு
தந்திரத்தொம் இவ்வூர்த் திருக்காவாலீஸ்வரம்
முடையனாயனருக்கு" (திருவா.கோ.க.எண். 4)

என்றும் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பத்தாவது ஆண்டு கல்வெட்டு,

"குறுமறை நாட்டுப் பாவூ சத்திரிய சிகாமணி
நல்லூர்.... திருக்கபாலீஸ்வ... நாயனாற்கு"
(திருவா.கோ.க.எண். 7)

என்றும் திருவாலீச்சுவரர் பெயர்களை ஊரின் பெயரோடு சேர்த்துச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளதனைக் காணமுடிகின்றன.

கபாலி என்றால் சிவன், உமை, வயிரவன், கபாலபாணி ஒரு பூதத்தலைவன், கபாலத்தையுடையச் சிவன் என்று கழகத்தமிழ் அகராதி பொருள் கூறுகின்றது. கபாலம் என்பது தலையோடாகும். சிவனைக் குறிக்கும் இச்சொல், மிக்க வலிமையுடையவன் என்பதால் கபாலம், ஏந்தியவன் திருக்கபாலீச்சுவரர் என்று அழைக்கப்பட்டிருக் கின்றார்.

கூவல் என்பது அழைத்தல், கிணறு, பள்ளம், கொல்லுதல் போன்றப் பொருளினையும் கூவரம் என்பது ஏர்க்கால் என்றப் பொருளினையும் கழகத்தமிழ் அகராதி விளக்கம் கூறுகின்றது. வேளாண்மை யையும், கீழப்பாவூர் போர்முனை என்பதால் கொல்லுதல் தொழிலைச் செய்பவன் என்றப் பொருளிலும் இறைவன் திருக்கூவலீச்சுவரர் என்று அழைக்கப்படுகின்றான்.

காவல் என்பதற்கு அரண், கவசம், காத்தல், சிறைச்சாலை, மதில், வேலி, காவற்கூட்டம், பாதுகாப்பு, காவலாளி, சிறை, பரண், காக்கப்படும் நாடு, ஏமம், ஓம்படை, கடி, கட்டு, கதவம், கதவு, கழுது, காப்பு, சேமம், சேவல் ஆகியப் பொருளினைக் கழகத்தமிழ் அகராதி தருகின்றது. கீழப்பாவூர் இராணுவத்தளமாக விளங்கியக் காரணத் தால் இவ்வூரினை காவல் செய்தவன் என்றப் பொருளில் திருக்காவலீச்சுவரர் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இது ஸ்ரீவல்லபன் கல்வெட்டில் திருக்கவாலீச்சுவரர் என்று குறிக்கப்

பட்டுள்ளது அல்லது திருக்கபாலீச்சுவரரைத் தான் திருக்கவாலீச்சு-வரர் என்று பகரத்திற்குப் பதிலாக 'வ'கரம் இடம்பெற்றிருக்க வேண்டும். இராமாயணத்து வாலி சிவனைத் தரிசித்த இடம் என்பதால் இறைவன் பெயர் திரு+வாலி+ஈச்சுவரர் என்பது திருவாலீச்சுவரர் என்றும் அழைக்கப்பட்டிருக்கக் கூடும். இதற்குச் சான்றாதாரமாக, சிவகாமி அம்பாளின் சன்னிதியிலுள்ள மகாமண்டபத்தின் வலப் பக்கத்திலுள்ள தூணில் வடக்குநோக்கி வாலி சிவனுக்குப் பூசை செய்யும் சிற்பம் காணப்படுகின்றது.

தென்காசியில் வாலியம் பொற்றையில் வாலி தவமிருந்து விசுவநாதரை வழிபட்டு வரம் பெற்றான் என்றச் செவிவழிப் புராணக் கதை இங்கு ஒப்புநோக்கத்தக்கது. திருவாலீச்சுவரர் விமான அமைப் பிலும் வாலி சிவனுக்குப் பூசை செய்யும் சிற்பக்காட்சி இடம் பெற்றுள்ள தனைக் காணமுடிகின்றது.

இறைவனின் பெயர்களை வைத்துப் பார்க்கும்போது போர் முனையாகிய இராணுவத் தளமாக இவ்வூர் விளங்கியமையால் பாதுகாப்புப் படை வீரர்கள் தங்கியிருந்து கோட்டை, குடி, படை, நிலம், பணம் முதலானவற்றைக் காத்துள்ளனர். ஆகையால் வாலிக்குச் சிறந்த வீரத்தைக் கொடுத்தது போல் இப்படையினருக்கும் வீரம் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் இறைவன் பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். தென்காசி காசிவிசுவநாதர் கோயிலில் காணப்படும் கல்வெட்டில் கீழப்பாவூர் திருவாலீச்சுவரர் என்று இறைவன் பெயர் இடம்பெற்றுள்ளது. எனவே இறைவனுக்குத் திருவாலீச்சுவரர் பெயர் வழங்கப்பட்டுள்ளதனையும் அறியமுடி கின்றது. இப்பெயர் கல்வெட்டுக்களில் காணப்படவில்லை. 'திருக்க-வாலீச்சுவரர்', 'திருக்கபாலீச்சுவரர்' போன்றப் பெயர்கள் திருவாலீச்-சுவரர் என்று ஒற்றுடன் கூடிய வல்லெழுத்து கெட்டும், வகரம் இடம் பெற்றும் வந்திருக்கலாம் என்பது புலப்படுகின்றது.

"முனையெதிர் மொகர்க்கு தண்டநாயகம் செய்வார்களோம்"
(திருவா.கோ.க.எண். 5)

"முனையெதிர் மொகர்க்கு தண்டலைநாயகம்
செய்வார்களோம்"
(திருவா.கோ.க.எண். 9)

"முனைகதி மொகற்கு தண்டநாயகம் செய்வார்களொம்"
(திருவா.கோ.க.எண். 3)

"முனை அதி மொகர்க்கு தண்டநாயகம் செய்வார்கள்ளொம்"
(திருவா.கோ.க.எண்.4)

"ஸ்ரீமுனையதி மொகற்கு தண்ட ..."
(திருவா.கோ.க.எண்.10)

"முனைவதி மொகரில் தண்டநாயகஞ் செய்வார்கள்ளொமு"
(திருவா.கோ.க.எண். 2)

போன்ற வரிகள் படையின் பெயரினையும்

"முனைவரி மொகற்கு தண்டநாயகப் பெருமாள் இடர்நீக்கி"
(திருவா.கோ.க.எண். 6)

என்று இறைவனின் பெயரினையும் திருவாலீச்சுவரர் கோயில் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. திருவாலீச்சுவரர் கோயிலின் தல விருட்சமாக அரசமரமும் அத்திமரமும் உள்ளன.

## ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் :

ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலில் பிரசன்னமாகக் கிழக்குப் பார்த்த முகத்துடன் ஸ்ரீதேவி பூதேவியுடன் ஸ்ரீவெங்கடாசலபதி வீற்றிருக்கின்றார். எம்பெருமான் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் க்ருதாயுகத்தில், பிரகலாதனின் நம்பிக்கையை நிலைநாட்டவும் வாக்கை நிறை வேற்றவும் இரண்யன் என்ற அசுரனை அழிப்பதற்காகவும் ஸ்ரீநரசிம்ம ராகவும், த்ரோதாயுகத்தில், இராவணன் போன்ற அசுரர்களை அழித்தும், மனிதனாக வாழ்ந்து இராஜபரிபாலனம் செய்த ஸ்ரீ இராமராகவும், த்வாபரயுத்தில், கம்சன், நரகாசூரன் போன்ற அசுரர் களை அழித்தும் பல லீலா விநோதங்களைச் செய்தும் நம் கடமையைச் செய்வதற்கு ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் பிரம்ம வித்தையை அருளி வித்த ஸ்ரீகிருஷ்ணராகவும் அவதாரம் எடுத்தவரே இந்த கலியுகத்தில் அர்ச்சாவதார (கற்சிலா விக்ரஹமாக) மூர்த்தியாக ஸ்ரீவெங்கடாசலபதி திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ளார். க்ருதயுகத்தில் தவமும் த்ரேதாயுகத்தில் யாகங்கள் செய்வதன் மூலமும் த்வாபரயுகத்தில் பூசைகள் செய்வதின் மூலமும் தான் எம்பெருமானை அடைய

முடியும். இந்தக் கலியுகத்தில் திருக்கோயில்களில் சென்று எம்பெரு-மானைத் தரிசனம் செய்தும் நாமசெபம் செய்தும் வெகுசுலபமாக அவனை அடைய முடியும் என்பதற்காகவே இந்த அவதாரம் எடுத்துள்ளார்.

வேங்கடம் - வேண் + கடம் ஆகும். பாவங்கள் அழிகின்ற இடம் என்றும் தீவினைகள் அழியும் இடம் என்றும் பகைவர்களை அழிக்கும் இடம் என்றும் பொருள்படும். வேணு என்றால் புல்லாங்குழல் என்பதாகும். புல்லாங்குழல் இசைக்கும் கண்ணனையும் குறிக்கும் 18 புராணங்களும் ஒன்று சேர்ந்து புகழ்வது ஸ்ரீவெங்கடாசலபதியையே. பிரம்மபுராணத்தில் முக்கியமாக ஸ்ரீவெங்கடாசலபதி மகாத்மியம் கூறப்பட்டுள்ளது. பெரும்பாலும் எல்லாத் திருக்கோயில்களிலும் உள்ளப் பெருமானின் வலது திருக்கரம் அபயஹஸ்தமாகவே இருக்கும். ஆனால் வெங்கடாசலபதியினிடம் மட்டுமே வலது திருக்-கரம் கீழ்நோக்கிப் பாதகமலங்களைக் காண்பித்தவாறு இருக்கும். ஏனென்றால் பக்தர்களே என்னுடையத் திருவடிகளைச் சரணடை யுங்கள் (மாம்ஏஹம் சரணம் வ்ரஜ-ஸ்ரீமத் பகவத் கீதை) என்று கூறுவது போல் இருக்கும். அப்படிச் சரணடைந்தவர்களைத் தன்னுடைய இடது கையை இடது தொடையில் அணைத்தவாறு உங்களையும் சேர்த்துக் கொள்வேன் என்று தன்னுடைய அர்ச்சாவதார (கற்சிலாவிக்ர-ஹத்தை) திருமேனியை காண்பித்து இந்தக் கலியுகத்தில் மோட்சம் அடையச் செய்வேன் என்றுக் கூறுகின்றார். எம்பெருமான் மோட்சத்-தையேத் தமக்குத் தரும்பொழுது மற்றப் பிரார்த்தனைகளை வெகு சுலபமாகத் தருவார் என்பதாகும்.

தமிழ்நாட்டில் விஷ்ணுவின் கோயில் விஷ்ணுகிரகம் என்ற சமஸ்கிருத சொல் தமிழில் விண்ணகரம் அல்லது விண்ணகர் என்று அழைக்கப்படுகின்றது. இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுக்கள் இறைவனின் பெயர்களை பாண்டியர்களின் படைகளுள் ஒன்றாகிய 'முனையெதிர் மோகர்', 'முனைமோகர்' என்று அழைக்கப்படும் பெயர் களை வைத்துக் குறிப்பிடுவதனைக் கல்வெட்டுக்களில் காணமுடி கின்றன. கோயிலின் பெயர், இறைவனின் பெயர், படையின் பெயர் என்றும் கல்வெட்டுக்கள் பிரித்துக் கூறுகின்றன. கோயிலின் பெயர் களை,

"இம்முனையெதிர் மொக விண்ணகர்"

(வெ.கோ.க.எண். 12)

"வார் முனையெதிர் மொக விண்ணகர்

(வெ.கோ.க.எண். 17)

என்றும்,

"முனைகதிர் மொகர் விண்ணகர்"

(வெ.கோ.க.எண். 3)

"...மொரா விண்ணகர்"

(வெ.கோ.க.எண். 3)

"முனைவது மொகர் விண்"

(வெ.கோ.க.எண். 36)

என்றும், இறைவனின் பெயர்களை,

"கொள்ள பெரியான் இவ்வூர் முனைதரு மொகர்
ஆழ்வார் கொயில் திருவாய்க்குல"

(வெ.கோ.க.எண். 10)

என்றும்,

"ணகரெம் பெருமானுக்கு முனை"

(வெ.கோ.க.எண். 23)

"முனைக்கு மொகர் விண்ணகர் எம்பெருமான்"

(வெ.கோ.க.எண்.)

"மொகர் விண்ணகர் எம்பெருமானுக்கு"

(வெ.கோ.க.எண். )

"எம்பெருமானுக்கு முனையெதிர் மொகர்க்கு"

(வெ.கோ.க.எண். 11)

என்றும்,

"... முனைகதிர் மொகர் விண்ணகர் எம்பெருமானுக்கு"

(வெ.கோ.க.எண். 3)

"நல்லூர் முனைகதிர் மொ----"

(வெ.கோ.க.எண். 19)

என்றும், படையின் பெயர்களை,

"முனைவது மொகரான ஆபத்து"

(வெ.கோ.க.எண். 2)

"இம்முனைகதிர்"

(வெ.கோ.க.எண். 30)

என்றும் , மெய்க்கீர்த்தியில்,

"முனைவது மொகரான தென்னவனாபத்து தவிகளொம்"

(வெ.கோ.க.எண். 6)

என்றும்,

" - ர்காரன் தென்னவனாபத்துதவிகள்"

(வெ.கோ.க.எண். 18)

"காரன தென்னவனாபத்துதவி"

(வெ.கோ.க.எண். 29)

என்றும் கூறுவதனைக் காணமுடிகின்றன.

முனை என்றால் துணிவு, நுனி, பகை, முதன்மை, முனையென் னேவல், போர்முனை, வெறுப்பு, பகைப்புலம், முற்படுதல், முன்முகம், தலைமை, கடலுள் செல்லும் நீண்டுக் கூரியத் தரைப்பாகம் என்று பொருள் கூறுகின்றது கழகத்தமிழ் அகராதி.

மோகர் என்பதற்கு 'உன்மத்தர், ஓவியக்காரர், மகர், மொகரா, முகர், இராசமுத்திரை' என்று பொருள் கூறுகின்றது கழகத்தமிழ் அகராதி.

முனையெதிர் பகைவர்களை எதிர்த்து நிற்பவர் என்று பொருள். வீரஆவேசத்துடன் போர்க்களத்தில் பகைவர்களை எதிர்த்துப் போரிடுபவர் என்றப் பொருளில் இறைவனுக்குப் பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. கோயிலின் பெயர் இறைவன் பெயர், படையின் பெயர் என்று பிரித்துக் கூறினாலும் ஒன்றாகச் சேர்த்துக் கூறினாலும் போர் செய்வதனையே குறிக்கின்றன. இறைவனின் பெயர்கள்

வெங்கடாசலபதியைக் குறிப்பிடுகின்றதா அல்லது நரசிம்மமூர்த்தி-யைக் குறிப்பிடுகின்றதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. நரசிம்மர் இரணியகசிபுவை எதிர்த்து அவனை வதம் செய்ததால் முனையெதிர் மோகர் என்றப் பெயர் வந்திருக்கக்கூடும். இத்தலத்தில் படை இருந்ததைக் கொண்டுப் பார்த்தால் போர்வீரர்களின் பெயரால் இறைவனுக்குப் பெயர் வழங்கியிருக்கலாம் என்பதும் அவர்கள் போர் புரிந்தக் காலத்தில் கோயில் எழும்பியிருக்கக்கூடும் என்பதும் போர் வீரர்கள் வைணவமதத்தைத் தழுவியிருக்கக் கூடும் என்பதும் புலப்படு கின்றன.

## ஸ்ரீநரசிம்மர் :

ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலில் ஸ்ரீநரசிம்மர் தனிச்சன்னிதி யில் இடம்பெற்றுள்ளார். மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்களில் பத்து அவதாரங்களும் முக்கியமானவையே ஆகும். ஒவ்வொரு அவதாரமும் ஒவ்வொரு தர்மத்தை நிலைநாட்டுவதற்காக எடுக்கப்பட்டது. அவற்றில் நரசிம்மஅவதாரம் இரண்யகசிபுவை அழிப்பதற்காகவும் தன் பக்தன் பிரகலாதனுடைய வாக்கை நிறைவேற்றுவதற்காகவும் நம்பிக் கையை நிலைநாட்டவும் எடுக்கப்பட்ட அவதாரமாகும். இது நான் காவது அவதாரம். தர்மம், அர்த்த, காமநிலைகளைக் கடந்து மோட்ச நிலையை அடைவதற்கு வழிவகுக்கின்றது. அப்படிப்பட்டச் சிறப்பு அவதாரமாய் புடைசிற்பமாய்ப் பதினாறு திருக்கரங்களுடன் மேற்குப் பார்த்துக் காட்சித் தருகின்றார் கீழப்பாவூர் உக்ரநரசிம்மர். நர - சிம்மன் - மனிதஉடலும் சிங்க முகமும் கூடியக் காட்சியே நரசிம்ம அவதாரம் என்று குறிப்பிடுவர். சுவாதி நட்சத்திரத்தன்று வழிபாடு செய்தால் நல்ல பலனைப் பெறலாம். சுவாதி நட்சத்திரம் வாயுவின் நட்சத்திரம். வாயுதேவர் எவ்வளவு வேகத்தில் வருகிறாரோ அதே போல் நரசிம்மரை வழிபாடு செய்தால் வாயுவேகத்தில் வந்துப் பாது காத்து அருள் செய்வார் என்பது நம்பிக்கையாகும்.

ஞானசக்தியாக ஸ்ரீநரசிம்மர் வீற்றிருக்கின்றார். லட்சுமி நரசிம்மர் அருளினால் பிரகலாதன், பராகர், நாரதர், புண்டரீகர், இராகவேந்திரர் போன்ற மகான்கள் ஞானசக்தியை அடைந்தனர். திருமங்கை ஆழ்வாருக்குப் பல இடங்களில் சுவாமி நரசிம்மராகவே அருளிச் செய்துள்ளார்.

"உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் சர்வதோகமும்
நருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும் ம்ருத்யும் நாமாம்யஹம்"

ம்ருத்யு - இயற்கையான மரணம். அபருத்யு - தானாக மரணத்தைத் தோற்றுவித்துக் கொள்வது. விபத்து மூலம் இறந்துபோவது அகலாமம்ருத்யு. இந்த மூன்று விதமானச் செயல்களைத் தவிர்க்கச் செய்வது ம்ருத்யுஞ்ஜெயர் (மரணத்தை வென்று தவிர்க்கக்கூடிய வல்லமை தர வல்லவர்) என்ற ஈஸ்வரனாலே செய்யப்பட்ட 'ஸ்ரீந்ருஸிம் ஹதாபினி உபநிஷத்' என்றும் வேதத்தின் சாரத்தில் இந்த ஸ்லோகத்தை ஒவ்வொரு பதத்திற்கும் ஒரு ஸ்லோகம் வீதம் துதிக்கப் பட்டு அதற்கு 'ஸ்ரீமந்தர ராஜபத ஸ்தோத்ரம்' என்று பெயர் சூட்டி நரசிம்-மரைத் துதிக்க வழி செய்யப்பட்டது.

## அக்கசாலை விநாயகர் :

அக்கசாலை அரசு வெளியிடும் பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களாலான நாணயங்களை அளவு, வடிவு, தரம், எடை ஆகியவற்றில் குறையாமல் அமைத்து அரச இலச்சினை ஒரு புறமும் நாணய மதிப்புக்குறி மறுபுறமும் அமையுமாறு முத்திரையிடும் தொழிற் சாலையாகும். கீழப்பாவூரில் அக்கசாலை விநாயகர் கோயில் காணப் படுகின்றது. இவ்வூர் இராணுவத்தளமாக விளங்கியதால் போருக்குத் தேவையான ஆயுதங்கள் விநாயகர் எழுந்தருளியுள்ளப் பகுதியில் செய்யப்பட்டுள்ளன. தச்சர்களால் இவ்வாயுதங்கள் செய்யப் பட்டுள்ளன. அக்கசாலை விநாயகர் கோயில் மிகவும் பிரசித்திப் பெற்ற தாகும். இக்கோயில் கிழக்கு நோக்கியுள்ளது. இவர் இரு கைகளுடன் மூசிகவாகனத்துடன் காணப்படுகின்றார்.

## மூர்க்கக விநாயகர் :

கீழப்பாவூரில் வீரஇராஜேந்திரன் வாய்க்காலுக்கு வடக்குப் புறத்தில் (கரைநிலத்துக்கு) மூர்க்கக விநாயகர் கோயில் அமைந்-துள்ளது. இக்கோயிலும் வரலாற்றுப் பிரசித்திப் பெற்றது. பஞ்சமதங் களாகியச் சைவம், காணபத்தியம், வைஷ்ணவம், சாக்தம், சௌரம் முறையே சிவன், கணபதி, விஷ்ணு, சக்தி, சூரியன் இடம்பெற்றுள்ள விநாயகத்தலமாகும். இக்கோயில் கிழக்கு நோக்கி உள்ளது.

கீழப்பாவூரில் ஸ்ரீமகாவிஷ்ணுவின் அவதாரமான இராமர் கோயிலும் ஸ்ரீகிருஷ்ணர் கோயிலும் நவநீதகிருஷ்ணன் கோயிலும் காணப்படுகின்றன. வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த காளி அவதாரமாகிய முப்புடாதி அம்மன் கோயிலும் உள்ளது.



மூர்க்க விநாயகர்



ஸ்ரீ வெங்கடாசலபதி
ஸ்ரீ தேவி - பூதேவி



திருவாலிச்சுவரர்



சிவகாமி அம்பாள்

# 3. கீழப்பாவூரில் ஆட்சிப்புரிந்தப் பாண்டியர்கள்

பாண்டியர்களின் வரலாற்றுமரபு மிகத் தொன்மையைக் காட்டு கின்றது. 'பண்டையேபார்' என்பதிலிருந்து பாண்டியர் என்றப் பெயர் வந்தது என்று கருதுவார் உளர். மெகஸ்தனிஸ் பாண்டியர்களை மேற்கு நாட்டு வரலாற்றுடன் இணைத்து 'ஹெராச்சிளிசின்' என்ற பெயர் வந்தது என்று கூறியுள்ளார். பாண்டியர்கள் மீனைச் சின்ன மாகக் கொண்டிருப்பதை வைத்து மீனவர் மன்னர் மரபினர் வழி வந்தவர் என்று கருதுவாரும் உளர். பாண்டிய நாட்டையாண்ட மன்னனாக இருந்த 'வைவசுவதமனு' பெருவெள்ளச் சேதத்தின்போது மக்களை மீட்டுச் சென்ற மரபில் மீனின் தொடர்பிருக்கின்றது. வரலாற்றுக் கால எல்லையைக் கடந்து வியாபித்திருப்பதால் பாண்டியர் களின் தோற்றம் பற்றிய வரலாற்றை உறுதிப்படுத்திக் கூறுவது எளிதன்று. பாண்டியர்களின் சின்னம் மீன் என்று மீன்படம் போட்டு மீனவனைக் (அரசனை) குறிப்பிடுகின்றது. பண்டை எழுத்துக்களில் 'ஒலி கொள்வடிவம்' (Phonograph) என்பதில் அடங்குவன ஆகும். பாண்டியர் இரட்டை மீனைத் தங்கள் இலச்சினையாகப் பெற்றிருந் தனர். 'மாமலைத் திங்கள் வாழியோன்' என்று சிலப்பதிகாரம் கூறுவதி லிருந்துப் பாண்டியர் தங்களைச் சந்திரகுலத்தில் பிறந்தவர் என்று கூறிக் கொண்டனர். கி.பி.600-625 வரை கடுங்கோவின் மகன் மாற-வர்மன் அவனி சூளாமணி (கி.பி.600-625) தந்தைக்குப் பின் ஆட்சி செய்தவன். இவன் காலம் முதல் பாண்டியர்கள் மாறவர்மன், சடைய-வர்மன் ஆகியப் பட்டங்களை ஒருவர் பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து வருவாராயினர்.

கீழப்பாவூர் திருவாலீச்சுவரர் கோயிலில் 20 கல்வெட்டுக் களும், ஸ்ரீவெங்கடாசலபதி கோவிலில் 42 (including fragmentary stones) கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. திருவாலீச்சுவரர் கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் கல்வெட்டுக்கள் ஐந்தும் மாறவர்மன் குலசேகர பாண்டியன் கல்வெட்டு ஒன்றும் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் கல்வெட்டு ஒன்றும் சடையவர்மன் குலசேகரப்

பாண்டியன் கல்வெட்டு இரண்டும் மாறவர்மன் என்றப் பட்டம் மட்டுமுடைய கல்வெட்டு ஒன்றும் கொல்லம் ஆண்டு கல்வெட்டு இரண்டும் ஆக பன்னிரண்டு கல்வெட்டுக்களில் காலம் காணப்படுகின்றன. அவற்றில் 9 கல்வெட்டுக்களில் அரசர்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. மூன்று கல்வெட்டுக்களில் ஆட்சியாண்டு இடம்பெறவில்லை. மூன்று கல்வெடடுக்களில் மன்னர்களின் பெயர்கள் இடம்பெறவில்லை.

ஸ்ரீவெங்கடாசலபதி கோவிலில் மொத்தம் 5 கல்வெட்டுகளில் மன்னர்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. மூன்று கல்வெட்டுக்களில் ஆட்சியாண்டு இடம்பெற்றுள்ளன. ஒரு கல்வெட்டில் மன்னன் பெயர் மட்டும் இடம்பெற்றுள்ளது. ஒரு கல்வெட்டில் பட்டப் பெயர் இல்லை. இரண்டு கோவில்களிலும் காணப்படும் மன்னர்கள் கால வரிசையைப் பார்த்தால் கி.பி.1101 முதல் கி.பி.1318 வரை கீழப்பாவூரில் ஆட்சிப் புரிந்துள்ளனர் என்பது தெரிகின்றது. அதாவது 12-ஆம் நூற்றாண்டு முதல் 15-ஆம் நூற்றாண்டு (கொல்லமாண்டு உட்பட) வரை மன்னர்களின் ஆட்சி இருந்துள்ளதனைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

- சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1101 - 1124)
- மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1145 - 1162)
- சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் (கி.பி. 1162 - 1177)
- முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216 - 1244)
- மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 1218 - 1232)
- மாறவர்மன் குலசேகரப்பாண்டியன் (கி.பி. 1268 - 1318)

## சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1101 - 1124) :

சடையவர்மன் ஸ்ரீவல்லபன் குலோத்துங்கசோழன் காலத்தி லிருந்தப் பாண்டிய அரசர்களுள் ஒருவன். இவன் மெய்க்கீர்த்தி 'திருமடந்தையும் செயமடந்தையும்' என்று தொடங்குகின்றது. இவன் கல்வெட்டுக்கள் திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களில் காணப்படு கின்றன. இவன் கி.பி.1101-இல் முடிசூட்டியுள்ளான். கி.பி.1124 வரை அரசாண்டான் என்பதனை இவனது கல்வெட்டுக்கள் மூலம் காலத்தை

நிர்ணயிக்க முடிகின்றது. திருவாலீச்சுவரர் கோவிலில் இவனது கல்வெட்டுத் திருவாலீச்சுவரர் சன்னிதியின் மேற்கு, தெற்குச் சுவர் களில் காணப்படும் குமுதத்தில் இடம்பெற்றுள்ளது சிறப்பாகும். ஸ்ரீவல்லபனின் தந்தை பெயர் குலசேகரன் என்பதாகக் கொள்ளலாம். இவனது மெய்க்கீர்த்தியால் இவனது தலைநகரம் மதுரை என்பதனை அறியமுடிகின்றது. இம்மன்னனின் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டாகும். இவன் மெய்க்கீர்த்தி போர்ச் செய்திகளையும் மரவில்லவர், இவனது முடிசூட்டு விழாவில் கலந்து கொண்டதையும் அவனது நாட்டு எல்லையினையும் கூறித் தொடங்குகின்றது. மக்கள் குறைதீர்க்க முகாம் செல்லும் இடத்தில் தங்குவதற்காகப் பல ஊர்களிலும் சிறிய அரண்மனைகளைக் கட்டியிருந்தார்கள். அவ்வரண்மனைகளில் அரசுக்கட்டில்களும் இருந்துள்ளன. அரண்மனையில் அவர்கள் இருந்த இடத்தின் பெயரையும், அமர்ந்து ஆணையிட்ட அரியணையின் பெயரையும் இவனது மெய்க்கீர்த்தி விளக்குவதனை காணமுடி கின்றது. "மாடக்குளக்கீழ் மதுரைகக் கொயிலு உள்ளாலை அழகிய பாண்டியன் கூடத்துப் பள்ளிபீடங் கலிங்கத்தரையனிலெழுந்தருளிருந்து நாளைம்பத்தஞ்சினால் குறுமறை நாட்டுப்பாகூர் க்ஷத்திரியர் சிகாமணி நல்லூர் உடைஆர் திருக்கவாலிசுரமுடையத்துக்கு இக் கோயிலில் தெவகன்மிகளும் சிரிமாயெச்சுரிகளும் விண்ணப்பஞ் செய்ய திருவாய் மலர்ந்தருளின" என்று கல்வெட்டுக் கூறுகின்றது. பாண்டியனது அரியணையின் பெயர் கலிங்கத்தரையன் ஆகும். "நாள் ஐம்பத்தஞ்சினால்" என்பதால் அவன் முடிசூட்டியக் காலத்திலிருந்து 55-ஆம் நாள் என்று கணக்கிட முடிகின்றது. கி.பி.1101-ல் முடிசூட்டி யுள்ளான். இவன் இக்கோயிலுக்கு நித்தல் நிமந்தங்களுக்கு நிலம் தானம் செய்த ஆண்டும், அவன் முடிசூட்டிய ஆண்டும் ஒன்றாகவே உள்ளது என்பது தெரியவருகின்றது. மதுரையிலிருந்துக் கொண்டு இதற்கான ஆணையைப் பிறப்பித்துள்ளான் என்பதையும் அறிய முடி கின்றது. இல்லையேல் ஐம்பத்தஞ்சு நாட்களுக்குள் இவ்வாணையை நிறைவேற்ற வேண்டும் என்பதாகவும் எடுத்துக் கொள்ளலாம். ஸ்ரீவல்லபனின் மிகப் பழமையான கல்வெட்டு யாண்டு 3-க்கு உரிய தாகும். கி.பி.1104-இல் 'திருமடந்தையும் ஜெய மடந்தையும்' மெய்க கீர்த்தி ஸ்ரீவல்லபனால் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். எனவே

கி.பி.1104-இல் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர் இவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பது புலப்படுகின்றது. இக்கல்வெட்டின் காலம் ஸ்ரீவல்லபனின் ஆட்சியாண்டு மூன்றாவதாக இருக்க வேண்டும். திருக்கவாலிச்சுவரருக்கு நித்தல் நிமந்தத்துக்கு நிலதானம் செய்ததையும், அந்நிலத்திற்குத் தன்னுடைய மகன் சுந்தர பாண்டியன் பெயரின் திருநாமமாக 'சுந்தரபாண்டியன் விளாகம்' என்று பெயர் சூட்டியதனையும் ஸ்ரீவல்லபன் மெய்க்கீர்த்தி மூலம் அறியமுடி கின்றன.

குருவித்துறைக்குக் கிழக்கே தென்கரை என்ற ஊர் உள்ளது. தென்கரை மூலஸ்தான முடையாரின் கோயிலின் மிகப் பழமையானக் கல்வெட்டு ஸ்ரீவல்லபனின் யாண்டு 3-க்கு உரியது. கி.பி.1103-ல் இக் கோயில் கட்டப்பட்டு தென்கல்லக நாட்டு சேந்தனேரி கட்டிக்கள்ளூர் ஸ்ரீமூலஸ்தானமுடையார் கோயில் என்று அழைக்கப்படுகின்றது. மன்னனின் 3-ஆம் ஆண்டில் கூத்தாடும் தேவரையும் இவர் நம்பிராட்டியாரையும் (நடராஜர்-சிவகாமி) எழுந்தருளிவித்ததாகச் சொல்லப்படுகின்றது. 1103-ல் எழுந்தருளிவிக்கப்பட்டக் கல்லாலான நடராஜப் பெருமானுக்கும் சிவசாமி அன்னையாருக்கும் நித்தியப் பூசைக்காக அளித்த நிவந்தங்கள் கூறப்படுகின்றன. இறைவனு டையப் பெயரும் ஸ்ரீவல்லபனின் அண்ணன் பெயரில் தென்கல்லக நாட்டு பராக்கிரம பாண்டியபுரத்து ஸ்ரீமூலஸ்தானமுடையார் என்று சொல்லப்பட்டு உள்ளது. இவற்றை சேதுராமன் தன் பாண்டியர் வரலாற்று நூலில் கூறியுள்ளார். இதன்படிக் கணிக்கும்போது ஸ்ரீ வல்லபன் காலக்கட்டத்தில் கீழப்பாவூரிலும் நடராசரையும் சிவகாமி அம்மையாரையும் எழுப்பப்பட்டிருக்கலாம் என்பதனைக் கணித்துக் கூறலாம். திருவாலீச்சுவரர் சன்னதி மகாமண்டபத்தில் உள்ள கல்வெட்டு தென்கல்லக நாடாழ்வாருக்குக் காராண்மையாக நிலம் கொடுத்தச் செய்தியினைக் குறிப்பிடுகின்றது. மேலும், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் 10-வது ஆண்டு கல்வெட்டுக் கல்லக நாடாழ்வாருக்கும் கல்லகநாடாழ்வார் தம்பிராநார் கூத்தாடும் தேவற்கும் நித்தல் நிமந்தத்திற்கு நிலதானம் கொடுக்கப்பட்டச் செய்தியும் காணப்படுகின்றது. கல்லக நாடாழ்வான் என்பது இறைவனின் பெயரைக் குறிக்கின்றது என்பது இங்கு நோக்கத்தக்கது.

## மாறவர்மன் ஸ்ரீவல்லபதேவன் (கி.பி.1145 - 1162) :

ஸ்ரீகோமாற பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் மாறவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டுக்கள் திருநெல்வேலி மாவட்டம், திருவாங்கூரின் தென்பகுதி ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. இவனது மெய்க்கீர்த்தி 'பூமகள் ஜெயமகள்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி 12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இவனது ஆட்சியாண்டு இரண்டாவது என்று இந்தியத் தொல்லியத் துறையினரால் (A.R.E.396/1917) ஆண்டறிக்கையில் கூறப்பட்டிருப்பதால் இவனது ஆட்சி 1147-இல் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூரில் இருந்திருக்க வேண்டும் என்பது தெரிகின்றது. இவனது கல்வெட்டுக்கள் சேரன்மகாதேவியில் (5 மற்றும் 16-ஆம் ஆட்சி யாண்டு) கிடைக்கின்றன. ஸ்ரீவெங்கடாசலபதி கோவிலில் முனையெதிர் மோகர் விண்ணகர் ஆழ்வார் கோயிலுக்கு நித்தல் நிமந்தத்துக்குத் திருவிடையாட்டமாக நிலதானம் கொடுத்தச் செய்தியினைக் குறிப்பிடும் கல்வெட்டு இங்குக் காணப்படுகின்றது.

## ஸ்ரீவல்லபன் :

ஸ்ரீவல்லபனின் 2-வது ஆட்சியாண்டின் மற்றொரு கல்வெட்டும் கீழப்பாவூரில் கிடைக்கப் பெற்றுள்ளது. அவற்றில் மாறவர்மன் சடையவர்மன் போன்றப் பட்டப்பெயர்கள் காணப்படவில்லை. இக்கல்வெட்டு ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலில் கிடைக்கப் பெற்றுள்ளது. கல்வெட்டு எழுத்தின் அமைதியைப் பார்க்கும்போது 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக உள்ளது.

சுவாமிக்கண்ணுப்பிள்ளை கருத்தின்படி 13-ஆம் நூற்றாண்டில் இரண்டு ஸ்ரீவல்லப பாண்டியர்கள் இருந்துள்ளனர். முதலாம் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் 1257இல் முடிசூட்டியதாகவும், 1291ல் முதலாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் முடிசூட்டியதாகவும் அவர் கூறுகின்றார். ஆனால் சேதுராமன் கருத்தின்படி 14-ஆம் நூற்றாண்டில் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் 1307-இல் அல்லது அதன்பிறகு முடிசூட்டினான் என்றும் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் 1308இல் முடிசூட்டினான் என்றும் அவர் கணித்துக் கூறுகின்றார். சுவாமிக்

கண்ணுப்பிள்ளை கருத்தினை எடுத்துக் கொண்டால், மாறவர்மன் ஸ்ரீவல்லபன்தான் பாண்டிமண்டலத்தை ஆட்சிப்புரிந்துள்ளான் என்றச் செய்தியும் காணப்படுகின்றது. எழுத்து அமைதி மற்றும் சுவாமிக் கண்ணுப்பிள்ளை கருத்தின்படி 13-ஆம் நூற்றாண்டாக இருக்க வேண்டும் எனக் கணிக்கலாம். சேதுராமன் கருத்தின்படி பார்த்தால் 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவனாக இருக்க வேண்டும். திருவாலீச் சுவரர் கோயிலில் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1101) கல்வெட்டின்படி பார்த்தால் சடையவர்மனாகவும் இருக்கலாம். எனவே இம்மன்னின் கல்வெட்டு மேலும் ஆய்வுக்குரியதாக உள்ளது. இம்மன்னன் இறைவனின் திருப்போனத்திற்கு நிலம் தானமாகக் கொடுக்கப்பட்டச் செய்திக் கல்வெட்டில் காணப்படுகின்றது.

## சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் (கி.பி. 1162 - 1177) :

கோச்சடையபன்மரான சக்கரவர்த்தி சடையவர்மன் குலசே கரப் பாண்டியனின் மெய்க்கீர்த்தி 'பூதல மடந்தை' எனத் தொடங்கும். மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1145 - 1162) ஆட்சிக்குப் பிறகுச் சடையவர்மன் குலசேகரன் திருநெல்வேலி பகுதியிலும் செங்கோட்டை பகுதியிலும் ஆட்சிப்புரிந்தது தெரியவருகின்றது. இம்மன்னனின் 12-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு கடையநல்லூரிலும் 5, 14-ஆம் ஆட்சி யாண்டு கல்வெட்டுக்கள் சேரன்மகாதேவியிலும் காணப்படுகின்றன. கீழப்பாவூர் திருவாலீச்சுவரர் கோயிலில் சடையவர்மன் குலசேகரனின் 2-வது ஆட்சியாண்டு கி.பி. (1164) மற்றும் 13-வதின் எதிராமாண்டு (கி.பி. 1176) ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவற்றைக் கொண்டு பார்த்தால் பாகூரானச் சத்திரிய சிகாமணி நல்லூர் இம்மன்னனின் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பது தெரியவரு கின்றது. இவ்வாண்டுக்குப் பிறகு 15-ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டுக் கள் (கி.பி.1177) குருவித்துறை மற்றும் செங்கோட் டையில் கிடைத் துள்ளன. இதனையும் கொண்டு நோக்கும்பொழுது 'பூதல மடந்தை' எனக் குறிக்கப்படும் சடையவர்மன் குலசேகரப் பாண்டியன் ஆவான். கீழப்பாவூர் கல்வெட்டு இம்மன்னனின் காலத்தைக் குறிப்பிடுவதற்கு உறுதுணையாக உள்ளது. இவனது

கல்வெட்டுக்கள் தண்டேச்சு வரருக்கும் பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர் முனையெதிர் மோகரான விண்ணகர் ஆழ்வாருக்கும் திருநெல்வேலியிலுள்ளச் சுத்தமல்லிமங்கலத்தில் சீவலயீச்சுவர முடைய நாயனார் கோயில் பிள்ளையார் அழகப் பெருமாள் எழுந்தருளி வித்ததற்கும் நாச்சியாற்கும் திருப்படிமாற்றுக்கு நிலதானம் செய்துள்ள தனைப் பதிவுச் செய்கின்றன.

## முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216 - 1244)

கோமாறபன்மரானதிரிபுவனசக்கரவர்த்திகள் என்றப் பட்டப் பெயருடைய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி.1216-இல் ஜூன் மாதம் 15-ஆம் தேதியிலிருந்து 29ஆம் தேதிக்குள் உள்ள ஏதோ ஒரு நாளில் முடிசூட்டியிருக்க வேண்டும் என்றுக் கருத்துத் தெரிவித்துள்ளார் சேதுராமன். இவனது மெய்க்கீர்த்தி 'பூமருவிய திருமடந்தையும்' என்றுத் தொடங்கும். மதுரை மாநகரில் முடிமன்னனாக இருந்து பாண்டிய நாட்டை ஆட்சிப் புரிந்தவன். இவன் முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியனின் மகன் ஆவான். குலசேகரன் முடிசூட்டிய 26 ஆண்டுகளுக்குப் பிறகு சுந்தரன் சிம்மாசனம் ஏறியுள்ளான். குலசேகரனின் திருநெல்வேலி கல்வெட்டு (83/1927) யாண்டு 19-க்கு உரியது (கி.பி1209). இதில் குலசேகரன் தனது தந்தையைப் பெரியதேவர் விக்கிரமபாண்டியதேவர் என்று குறிப்பிட்டுள்ளார். கோவனூர் (47/1926) சுந்தரபாண்டியனின் கல்வெட்டு இவனது பாட்டன் பெயரை பெரிய நாயனார் விக்கிரமபாண்டியன் என்று குறிப்பிடுகின்றார். சதுர்வேதிமங்கலம் கல்வெட்டு (298/1928) இராமநாதபுரம் திருக்களக்குடி கல்வெட்டு (84/1916) இரண்டிலும் அழகப்பெருமாளைச் சுந்தரபாண்டியனும் குலசேகரப்பாண்டியனும் மைத்துனன் என்கிறார்கள். இருவருக்கும் 26 ஆண்டுகள் இடைவெளி உள்ளதால் மைத்துனனாக இருக்க முடியாது என்றும் குலசேகரன் தன் சகோதரியின் மகளைத் திருமணம் புரிந்ததால் அழகப்பெருமாள் மைத்துனன் ஆனான் என்றும் சுந்தரபாண்டியனுக்கு அத்தை மகனான அழகப்பெருமாளும் மைத்துனனே ஆவான் என்றும் கணவனின் சகோதரனுக்கும் மனைவியின் சகோதரனுக்கும் அத்தையின் மகனுக்கும் மைத்துனன்

என்ற உறவுமுறை சொல்லப்படுவதை வில்லிபாரதத்தில் காணலாம் என்றும் சேதுராமன் பாண்டியர் வரலாறு எனும் நூலில் கூறியுள்ளார். எனவே குலசேகரனின் மகனே சுந்தரபாண்டியன் ஆவான் என்பது தெரிகின்றது.

திருவாலீச்சுவரர் கோயிலில் சுந்தரபாண்டியன் கல்வெட்டுக்கள் மொத்தம் 5 காணப்படுகின்றன. இவற்றில் மூன்று கல்வெட்டுக்கள் ஆட்சியாண்டு உள்ளதாகவும் இரண்டு கல்வெட்டுக்கள் ஆட்சியாண்டு இல்லாததாகவும் காணப்படுகின்றன.

சோணாடு வழங்கியச் சுந்தரபாண்டியத் தேவரின் பத்தாவது ஆண்டு கல்வெட்டு (கி.பி.1226) இவ்வூர் முனையெதிர் மோகர் விண்ணகர் நாயனார் கோவிலுக்கும் பெருமாளானக் கல்லக நாடாழ்வார் எழுத்தருளிவித்ததற்கும் கல்லக நாடாழ்வார் தம்பிரனார் கூத்தாடும் தேவற்கு அமுதுபடி சாத்துப்படி உட்பட்ட பலபடி நிமந்தங் களுக்கும் திருக்களிற்றுப்படியிலே நீர்வார்த்துக் கொடுத்ததனைக் கூறுகின்றது.

சுந்தரபாண்டியனின் இருபதாவது (கி.பி.1236) ஆண்டு கல்வெட்டு, மூன்றாம் குலோத்துங்கச்சோழன் இறந்தப்பிறகு 1218-இல் இவன் சோழநாட்டின் மீது படையெடுத்து உறையூறையும் தஞ்சாவூரையும் எரியூட்டினான். கூடம், மாமதில், கோபுரங்கள், ஆடரங்குகள், மாளிகைகள், மண்டபங்கள் போன்றப் பலவற்றை இடித்துத் தள்ளினான். பின்பு, ஆயிரத்தளியில் சோழனின் அபிஷேக மண்டபத்து வீராபிஷேகமும் செய்துகொண்டான். புலியூருக்குச் சென்று நடராசப் பெருமாளை வணங்கிவிட்டு, வெற்றிகளை அடைந்தவன் பொன்னமராவதிக்குத் திரும்பினான். தன் நாட்டை இழந்தச் சோழனை வரவழைத்துச் சோழ நாட்டையும் மணிமுடியையும் சோழனுக்கே திருப்பியளித்தான். சோழநாட்டினைக் கைப்பற்றியமை, அந்நாட்டை வழங்கியமை, பின்பு வீராபிஷேகம் செய்தமை போன்ற மூன்று நிகழ்வுகளையும் திரும்பப் பெற்றுக் கொண்டவன் மூன்றாம் இராஜராஜ சோழன் ஆவான். 'சோணாடு கொண்டருளி முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் பண்ணி அருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தெவற்கு' என்று கல்வெட்டுக் கூறுகின்றது. மேலும் பாகூரான

சத்திரிய சிகாமணி நல்லூர் முனையெதிர்மோகர் விண்ணகர் ஆழ்வாருக்கும் திருக்காவாலீச்சுவரம் உடைய நாயனாருக்கும் வியஞ்-சனங்களுக்கு இறையிலித் தேவதானமாக நிலம் விலைபிரமாணம் பண்ணிக்கொடுத்தச் செய்திகள் காணப்படுகின்றன.

இருபதாவதினெதிராவதின் எதிராமாண்டு கல்வெட்டு (கி.பி. 1238) சுந்தரபாண்டியனுக்கும் மூன்றாம் இராஜராஜ சோழனுக்கும் சில ஆண்டுகளுக்குப் பிறகு முரண்பாடு தோன்றியது. அச்சோழமன்னன் திறை செலுத்த மறுத்தமையால் கி.பி.1231-ஆம் ஆண்டில் சோழநாட்டின் மேல் மீண்டும் படையெடுத்துச் சென்று இராஜராஜ சோழனோடு பெரும்போர் புரிந்து வெற்றி எய்தினான். தோல்வியுற்றச் சோழமன்னன் தன் நாட்டை இழந்து உரிமை சுற்றத்தினருடன் வடபுலம் சென்றபோது வடஆர்க்காடு சில்லா வந்தவாசித் தாலுகா விலுள்ள தெள்ளாறு என்ற ஊரில் பல்லவர் குலக் குறுநில மன்னனாகிய முதற்கோப்பெருங்சிங்கனால் பிடிக்கப்பெற்றுச் சேந்த-மங்கலத்திலிருந்தக் கோட்டையில் உள்ள சிறையில் வைக்கப்பட்டான். வெற்றிப் பெற்றச் சுந்தரபாண்டியன் சோழர்களின் தலைநகரம் பழையாறையாகிய முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் செய்துக் கொண்டான். இந்த இரண்டாவது படையெடுப்பைக் கூறும் பொருட்டு, 'சோணாடு கொண்டு முடிகண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜயா அபிஷேகமும் பண்ணியருளிய சுந்தர பாண்டிய தேவற்கு' என்று பதிவும் செய்துள்ளதனை அறிய முடிகின்றது. குறுமறைநாட்டுப் பாவூரானசத்திரிய சிகாமணி நல்லூர் முனையெதிர்மோகர் விண்ணகர் பெருமாளுக்கும், திருக்கபாலிச் சுவரருக்கும் உய்ய வந்தனப்பனான குலசேகராமானாற்கும் விலை பிரமானம் பண்ணிக் கொடுத்தப் பரிசு நிலமாகவும் தேவதானமாகவும் திருச்சூலக்கல்நாட்டிக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொடுத்தச் செய்திகள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டு மூலம் இக்கோவி-லுக்குச் செப்பேடு இருப்பதும் தெரிய வருகின்றது.

சுந்தரபாண்டியனின் மற்றொரு கல்வெட்டில் பாகூரான சத்திரியசிகாமணி நல்லூர் குஞ்சீரியானத் திருமடத்துக்கு நிலதானம் வழங்கியுள்ளச் செய்திக் காணப்படுகின்றது.

சுந்தரபாண்டியனின் மற்றொரு கல்வெட்டு 30 நாட்களுக்கு இறைவனுக்கு வேண்டிய நைவேத்தியத்திற்கு வேண்டிய தானியங் களையும் சந்திராதித்தர் உள்ளவரை நிலங்களையும் கொடுத்தச் செய்திகள் காணப்படுகின்றன. அதனைத் திருக்களிற்றுப்படியிலே வைத்து நீர்வார்த்தும் அளந்தும் கொடுத்துள்ளனர் என்பதும் தெரி கின்றது.

## மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (1218 - 1232) :

ஸ்ரீகோமார பன்மர் என்பது பாண்டியனின் விருதுப் பெயராகும். மாறவர்மன் பாண்டியரின் வம்சப் பெயராகும். இவன் மாறவர்மன் சுந்தரனுக்குத் தம்பி ஆவான். அவனது ஆட்சிக்காலம் கி.பி.1218-1232 ஆகும். விக்கிரமபாண்டியன் பெயரில் பல மன்னர்கள் இருந்துள்ளனர். 'திருமகள் ஜயமகள்' என்றுத் தொடங்கும் மெய்க்கீர்த்தியை உடைய மாறவர்மன் விக்கிரமபாண்டியன் 1218-இல் முடிசூட்டியவன் ஆவான். கீழப்பாவூரில் உள்ள ஸ்ரீவெங்கடாசலபதி கோவிலிலுள்ள மெய்க்கீர்த்தியில் ஆண்டு குறிப்பிடப்படவில்லை. இவ்வாண்டினைக் சேர்மாதேவியில் உள்ள கல்வெட்டு கணிக்கச் செய்கின்றது.

சேர்மாதேவி மாறவர்மன் விக்கிரமப் பாண்டியன் வானிலைக் குறிப்புகளை நோக்கும்பொழுது கி.பி.1230 ஜூன் 27ந் தேதியைச் சுட்டிக் காட்டுகின்றது. இக்கல்வெட்டில் அவனுடைய மெய்க்கீர்த்தி 'திருமகள் ஜெயமகள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 1231-இல் நடந்தச் சோழபாண்டியர் போரில் சுந்தரபாண்டியனுக்கு உதவி புரிந்தான் என்பது தெரிகின்றது.

இவ்வாண்டில்தான் இராமசாமி கோயிலிலுள்ள கல்வெட்டுப் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். இப்போரைக் குறிப்பிடும் செய்தி மெய்க்கீர்த்தியில் காணப்படுகின்றது. அதாவது, சோணாடு கொண் டருளிய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனது சோழநாட்டுப் படை-யெடுப்பின்போது விக்கிரமபாண்டியன் சத்திரியசிகாமணி நல்லூரிலிருந்து முனைவது மோகரானத் தென்னவனாபத்துதவி களொம் படையுடன் சென்றுப் போருக்கு உதவியிருக்கின்றான்.

சேரனும் வளவனும் திறையிட்டதாகவும் சொல்லப்படுகின்றது. கி.பி.1218-இல் சோழநாட்டை, மூன்றாம் இராசஇராசசோழனைப் போரில் வென்று அந்நாட்டைக் கைப்பற்றியுள்ளான் சுந்தரபாண்டியன். சில திங்களுக்குள் இச்சோழ நாட்டை பாண்டியன் அவனிடமே திருப்பிக் கொடுத்தான். காரணம் போசள மன்னனாகிய இரண்டாம் வல்லாளதேவனும் அவன் மகன் வீரநரசிம்மனும் அச்சோழ அரசனுக்கு உதவிப்புரிந்ததே ஆகும். சில ஆண்டுகளுக்குப் பிறகு இப்பாண்டி வேந்தனுக்கும் மூன்றாம் இராசஇராசசோழனுக்கும் முரண்பாடு தோன்றிப் பகை உருவாகித் திறைகொடுக்க மறுத்ததால் கி.பி.1231-ஆம் ஆண்டில் சுந்தரபாண்டியன் மீண்டும் படையெடுத்துச் சென்று மூன்றாம் இராசஇராசசோழனோடு பெரும்போர் புரிந்து வெற்றி எய்தினான். இப்போருக்கு விக்கிரமபாாண்டியன் படையுதவி செய்து போருக்கு உதவியுள்ளான். இப்போரைக் குறிப்பிடும் செய்திச் சேரன் மாதேவியில் காணப்படும் விக்கிரமப் பாண்டியன் மெய்க்கீர்த்தியிலும் காணப்படுகின்றது. ஆகையால் கீழப்பாவூரில் குறிப்பிடப்பட்டப் போர்ச் செய்திக் கொண்ட மெய்க்கீர்த்தி சேரன்மாதேவியிலும் குறிப்பிடப் பட்டுள்ளதால் இவ்விரண்டு கல்வெட்டுகளும் சமகாலத்தவை ஆகும். ஆகையால் இக்கல்வெட்டு ஆண்டு 1231 ஆகும். எனவே கீழப்பாவூர் மெய்க்கீர்த்தி கல்வெட்டு ஆண்டும் 1231 ஆகும்.

சேரன்மாதேவி 13-வது ஆட்சியாண்டு கல்வெட்டில் காணப்படும் செய்தி மிகவும் சான்றாதாரமாக உள்ளது. இக் கல்வெட்டின் வாயிலாக விக்கிரமபாண்டியன் 13-வது ஆட்சியாண்டுக் காலத்தில் நரசிம்மருக்கும் மகாலெட்சுமிக்கும் கோவில்கள் கட்டப் பட்டுள்ளதனையும் அறியமுடிகின்றன. கீழப்பாவூரில் நரசிம்மபெரு மாளின் வழிபாடு 13-ஆம் நூற்றாண்டில் தோன்றியிருக்க வேண்டும் என்பது புலப்படுகின்றது.

அம்மெய்க்கீர்த்தியில், பாண்டியநாட்டில் இச்சுந்தரபாண்டியன் அரசாண்டுக் கொண்டிருந்தக் காலத்தில் பகையால் இன்னலுற்ற வடகொங்கு மன்னன் சுந்தரபாண்டியனிடம் அடைக்கலம் புகுந்துத் தனக்கு உதவி வேண்டிக்கொண்டான். பிறகுத் தென்கொங்கு மன்னனும் அவனது பெரும்படையுடன் வந்து பாண்டியனை வணங்கினான். இருவரையும் சுந்தரபாண்டியன் வரவேற்றுச் சில

நாட்களுக்குப் பின்னர் அவ்விருவரையும் தன் முடிபினை ஏற்றுக் கொள்ளும்படி செய்து அவர்கள் முரண்பாட்டை ஒழித்துள்ளான். கொங்கு வேந்தர்களுக்கும் பாண்டியர்களுக்கும் 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் உறவும் நட்பும் நிலைப்பெற்றிருந்தமை விளக்கப்பட்டுள்ளன. கீழப்பாவூரில் வெங்கடாசலபதி கோயிலில் காணப்படும் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள ஸ்ரீவிக்கிரமபாண்டியனின் 7-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் மெய்க்கீர்த்தி காணப்படாததால் இக்கல்வெட்டு சோழர் பாண்டியர் போர்க்காலத்திற்கு முற்பட்டதாக இருக்க வேண்டும். அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள விக்கிரமப் பாண்டியன் ஆட்சி யாண்டு 1218+7(7-வது ஆண்டு)=1225 ஆகும். அமுதுபடி சாத்துப் படிக்கு நிலதானம் கொடுத்துள்ளதனை அவனது கல்வெட்டுக் கூறுகின்றது.

## மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி.1268-1318)

முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் கி.பி.1268 முதல் கி.பி.1311 வரையில் அரசாண்டவன் ஆவான். இவனைக் 'கொல்லங் கொண்ட பாண்டியன்' என்றும் 'புவனேவீரன்' என்றும் அழைப்பர். கி.பி.1274-இல் சேரநாட்டின் மேல் படையெடுத்துக் கொல்லத்தை வென்றதால் 'கொல்லம் கொண்ட பாண்டியன்' என்னும் பட்டம் பெற்றான். சோழநாடு, நடுநாடு, தொண்டைநாடுகளிலுள்ளப் பல ஊர் களில் இவனது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. முதலாம் சடைய வர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் பாண்டியர் பேரரசின் கீழ் அடங்கி யிருந்த எல்லா நாடுகளும் இவனுடைய ஆட்சிக்காலத்திலும் அங்ஙனமே உட்பட்டிருந்ததால் அம்மன்னனைப்போல் இவனும் 'எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீகுலசேகரப் பாண்டியன்' என்று அழைக்கப்பட்டுள்ளான். இவன் தந்தையே இப்பட்டத்தை வழங்கி யுள்ளான். எனவே, கீழப்பாவூரில் கிடைத்துள்ள மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 7-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டில், 'ஸ்ரீமேல் கிற்திக்கு மேல் ஸ்ரீகோமற பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீகுலசேகரதெவற்கு' என்று பொறிக்கப்பட்டுள்ளது. ஆட்சியாண்டு 7 என்றும், ஆவணி மாதமும் கல்வெட்டில் இடம்

பெற்றுள்ளதால் கி.பி.1275-இல் ஆவணிமாதம் (செப்டம்பர்) இவ்வூரில் அவனது ஆட்சி இருந்துள்ளது என்பது தெளிவாகின்றது. இவனது கல்வெட்டுக் குறுமறைநாட்டுப்பாகூரான சத்திரிய சிகாமணி நல்லூர் முனையெதிர் மோகற்குத் தண்டலை நாயகஞ் செய்வார்களொம் கீழேமடத்துத் சந்தான முதலியார் புஷ்பவன ஸிவற்கு இறையிலிப் பிரமாணம் பண்ணிக்கொடுத்தப் பரிசாவதுத் திருநெல்வேலியிலே வடக்கில் திருவீதியில் சைவபெருமாள் மடத்துக்கு மடப்புறவிறையிலி யாக நிலதானம் செய்துள்ளதனை எடுத்துக் கூறுகின்றது.

பாண்டியர்கள் ஆட்சி 12-ஆம் நூற்றாண்டு முதல் 15-ஆம் நூற்றாண்டு வரை இருந்துள்ளதனைப் பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுக்கள் மூலம் அறியமுடிகின்றன.

# 4. கல்வெட்டுக்கள்

அரசனோ, கிராமசபையரோ, பிறரோ செய்யும் அறநிலைகள் கட்டளைகள் செப்புப்பட்டயமாகவும் கல்வெட்டாகவும் ஊர் ஆவணக் களரியில் ஓலைப்பத்திரமாகவும் செய்யப்படுவதாகும். நம் நாட்டின் தொன்மையை அறியும் வரலாற்றுச் சான்றுகளில் ஒன்று கல்வெட் டாகும். இதனை சிலாசனம் (அ) கல்வெட்டு என்று கூறப்படுகின்றது. வரலாற்றை உள்ளதை உள்ளபடியே காட்டும். உண்மையை மட்டுமே வெளிப்படுத்தும். மன்னனின் புகழ், போர், மெய்க்கீர்த்தி, வரி, நில-தானம், நீர்நிலை போன்றச் சமூக, அரசியல், பண்பாட்டு வழியிலான அனைத்தையும் விளக்கும் கருவூலம் கல்வெட்டாகும். வரலாற்றுக் களஞ்சியமாகத் திகழ்வதுமாகும்.

திருவாலீச்சுவரர் கோவில் கல்வெட்டுக்கள், ஸ்ரீவெங்கடா-சலபதி கோவில் கல்வெட்டுக்கள், மடை கல்வெட்டுக்கள் போன்ற மூன்றிடங்களில் கிடைத்தக் கல்வெட்டுக்களும், செய்திகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

1. திருவாலீச்சுவரர் கல்வெட்டுக்கள் மொத்தம் - 20
2. ஸ்ரீவெங்கடாசலபதி கோவில் கல்வெட்டுக்கள் மொத்தம் - 42
3. மடை கல்வெட்டுக்கள் - 2

திருவாலீச்சுவரர் கோயிலில் புதியதாகக் கிடைத்துள்ளக் கல்வெட்டுக்கள் 15. ஏற்கனவே கண்டுபிடித்தக் கல்வெட்டுக்கள் 5. (A.R.E. 390-394/1917) சில கல்வெட்டுக்கள் துண்டுக் கல்வெட்டுக் களாக உள்ளன. ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலில் புதியதாகக் கிடைத் துள்ளக் கல்வெட்டுக்கள் 40. ஏற்கனவே கண்டுபிடித்தக் கல்வெட்டுக்கள் 2. (A.R.E. 395-396/1917) இக்கல்வெட்டுக்கள் அனைத்தும் துண்டுக் கல்வெட்டுக்களாக உள்ளன. சில துண்டுக் கல்வெட்டுக்கள் இணைத்தும் படிக்கப்பட்டுள்ளன. இந்தியத் தொல்லியத்துறையினரால் இணைத்துப்படிக்கப்பட்டக் கல்வெட்டுக்-கள் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன. மடை கல்வெட்டுக்கள் இரண்டும் புதியதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

# 1. திருவாலீச்சுவரர் கோயில் கல்வெட்டுக்கள் :

## கல்வெட்டு எண். 1 (A.R.E. 393/1917)

| | | | |
|---|---|---|---|
| 1. | கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோவில் மேற்கில் - தெற்குச்சுவர் (குமுதம்) |
| 2. | வம்சம் | - | பாண்டியர் |
| 3. | அரசன் பெயர் | - | சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1101-1124) |
| 4. | ஆட்சியாண்டு | - | - |
| 5. | காலம் | - | 12-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

'திருமடந்தையும் ஜெயமடந்தையும்' என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகின்றது. சடையவர்மன் ஸ்ரீவல்லபன் இக்கோவிலுக்குக் கொடைக் கொடுக்கும்பொழுது மாடக்குளக்கீழ் மதுரைக் கோயிலி லுள்ள அழகியபாண்டியன்கூடத்துப் பள்ளிபீடம் கலிங்கத்தரையனிலே எழுந்தருளியிருந்து நாளைம்பத்தஞ்சினால் குறுமறைநாட்டுப்பாகூர் சத்திரியர் சிகாமணி நல்லூர் உடையார் திருக்கவாலீச்சுவரமுடையார் கோயிலுக்குத் தேவகன்மிகளும், சிரிமாயேசுரர்களும் விண்ணப்பம் செய்யத் திருவாய் மலர்ந்தருளி இறைவனின் நித்தல் நிமந்தங் களுக்குத் தேவதானமாகக் குறுங்கானமானத் தெலிங்ககுலகாலசதுர் வேதிமங்கலத்துத் தென்பால் பட்டமங்கலத்தில் நால்வேலியென்று பெயர் கூவப்பட்டு வழங்கியதாகக் கூறப்பட்டுள்ளது. அந்நிலத்துக்குப் பெருநான்கெல்லைகளாகக் கிழக்கும் தெற்கெல்லை வெள்ளை காலுக்கு வடக்கும் மேற்கெல்லை இக்காலில் அணைக்குக் கிழக்கும் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நிலங்களின் இறை சுருக்கிப் பழம் பெயரினைத் தவிர்த்து இன்னாயனாருக்குக் காராண்மை மெய்யாட்சி, அந்தராயன் உட்பட இறையிலித் தேவதானமாக்கிச் சுந்தரபாண்டியன் விளாகம் என்றத் திருநாமத்தால் வேறு முதலாக்கி இக்கோயிலில் பள்ளி கொண்டாள்வாருக்கு இந்நிலத்தில் ஐந்துமாவும் இறையிலித் தேவதானமாக மற்றும் எப்பேறப்பட்டனவும் தவிர்த்துக் கொடுத்தச்

செய்திகள் கூறப்பட்டுள்ளன. இதற்குச் சான்றாகக் காலிங்கராயன் கையொப்பம் இட்டுள்ளான். இக்கல்வெட்டு செய்தியின்படி நிலத்தின் பெயர் 'சுந்தரபாண்டியன் விளாகம்' என்று சொல்லப்பட்டு இருக்கின்றது. 'சுந்தரபாண்டியன்' என்ற பெயர் அபிஷேக நாமமாக இருக்க வேண்டும். ஸ்ரீவல்லபன் மகன் சுந்தரபாண்டியன் ஆவான். அவனது பெயரால் நிலம் குறிக்கப்பட்டுள்ளது. அவன் கி.பி. 1104லிருந்து 1131 வரை ஆட்சிப்புரிந்தச் சுந்தரபாண்டியன் மானாபரணன் ஆவான். ஸ்ரீவல்லபன் கல்வெட்டுத் திருவாலீச்சுவரர் சன்னிதியின் வெளிப்புறச் சுவரில் மேற்கு மற்றும் தெற்குச்சுவர்களின் குமுதத்தில் இடம் பெற்றுள்ளது என்பது சிறப்பாகும்.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமடந்தையும் செயமடந்தையும் திருப்புயத்து தன்னருளி திருப்ப யிருநிலம் பெருமை எய்த எண்டிசையு ங்குடை நிழற்ற மன்னவர்கள் வந்தின ஞ்ச மாவில் வரும் முடிசூடில் தென் குமரியும் வடகெங்கை திரைகடலை ங்கொலுடன் வளர்மன்னிய விரஸிங்காஸனத்து உலக முழுதுடையாளொடும் மாமுதல் மதிக்குலம் விளங் -
2. கு மாடக்குளக்கிழ் மதுரைக்கோயிலுஉள் ஸெஅழகியபாண்டியன் கூடத்துப்பள்ளிபிடங்கலிங்கத்தரையனிலெழுந்தருளிருந்து நாளெம் பத்தஞ்சினால் குறுமறை நாட்டுப்பாகூர்ா க்ஷத்ரியர் சிகாமணி நல்லூர் உடைஆர் திருக்கவாலிசுரமுடை - த்துக்கு இக்கொயிலில் தேவகன் மிகளும் சிரிமாயெசுரர்களும் விண்ணப்பஞ்செய்ய திருவாய் மலர்ந்தருளின
3. நிந்தனமந்தங்களுக்கு இட்ட தேவதான குறுங்கானமான தெலிங்ககுல கால சதுர்வெதி மங்கலத்து தென்பால் பிழந்த ட மங்கலத்து நால்வெலி யென்று பெர்கூவப்பட்ட நிலத்து பெருனான் கெல்லையாவது கிழக் - கும் தெற்கெல்லை வெள்ளைகாலுக்கு வடக்கு மெற்கெல்லை இக்காலில் அணெக்குக்கிழக்குட் -

பட்டனிலம் இறை சுருக்கி பழம்பெர்தவித்து இன்னாயனாற்கு காராண்மை மெய்யாச்சி அன்தராயம் உட்பட இறையிலி தெவதாம் மாக்கி சுந்தரபாண்டியன் விளாகமென்னும் திருநாமத்தால் வெறு

முதலாக்கி இக்கொயில் பள்ளிகொண்டாள்வாருக்கு இநிலத்தில் ஐஞ்சுமாவும் இறைதபம - இறெ்யிலி தெவதானமாக மற்றும் எப்பெர்பட்டனவும் தவித்துகுடுத்தொம் இப்படிக்கு - க(ா்)லிங்கராயந் எழுத்து -









# கல்வெட்டு எண். 2

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் தெற்குச் சுவா
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - சடையவர்மன் ஸ்ரீகுலசேகரப் பாண்டியன்
4. ஆட்சியாண்டு - ஒன்றாவதின் எதிராமாண்டு 1+1 (கி.பி 1162+2=1164)
5. காலம் - 12-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

றுமறைநாட்டுப் பாகூரானச் சத்திரியசிகாமணிநல்லூரில் உள்ள முனையெதிர் மேகருக்குத் தண்டநாயகம் செய்வார்களைப் பற்றி எடுத்துக் கூறுகின்றது. மற்ற விபரங்கள் தெளிவாகக் குறிப்பிடப் படவில்லை.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸ்ரீ கொச்சடையபன்ம -------
2. திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலசெகரெ ------
3. ற்கு யாண்டு க வதின் நெதிராமாண்டு குறு ---------
4. மறைநாட்டு பாகூரான க்ஷத்ரிய சிகாமணி ந --------
5. னைபதிமொகரில் தண்டநாயகஞ்* செய்*வார்கற் களொமு ------



## கல்வெட்டு எண். 3

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோவில் தெற்குச் சுவர் மேற்குப் பாகம் |
| 2. வம்சம் | - | பாண்டியர் |
| 3. அரசன் பெயர் | - | சடையவர்மன் குலசேகரப்பாண்டியன் |

4. ஆட்சியாண்டு - பதின்மூன்றாவதின் எதிராமாண்டு 13+1-வது (கி.பி. 1162+13+1=1176)

5. காலம் - 12-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

கோச்சடைய பன்மரானத் திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீகுல சேகரபாண்டியனின் பதின்மூன்றாவதின் எதிராமாண்டு கல்வெட்டு, குறுமறைநாட்டுப் பாகூரானச் சத்திரியசிகாமணிநல்லூர் முனை யெதிர் மோகருக்குத் தண்டை நாயகம் செய்வார், தந்திரத்தார், தந்திரக்காரணவர் இவ்வனைவரும் தண்டேசுவரர் பெயரில் காராண்மை மெய்யாட்சி இறையிலித் தேவதானமாக நிலம் கொடுத்துள்ளச் செய்திக் குறிப்பிடப்பட்டுள்ளது. கீழ் வெம்பநாட்டு திருநெல்வேலியில் சுத்தமல்லி மங்கலத்து சீவலேச்சுவரமுடைய நாயனார் கோயிலில் பிள்ளையார் அழகன்பெருமாள் எழுந்தருளிவித்த நாயகருக்கும் நாச்சியாருக்கும் திருப்படிமாற்றுக்கு இவர்களின் ஜீவிதமாக உள்ள இரண்டு மா நிலங்களைத் தேவதானமாக வழங் கியுள்ளச் செய்திக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நிலம் சேந்தனேரியில் கணபதி வாய்க்காலுக்குத் தெற்கிலும் கண்ணாறுக்குக் கிழக்கிலும் செய்நிலன் இரண்டு மா சந்திராதித்தர் உள்ளவரை தானம் செய்யப் பட்டுள்ளது. இத்தானத்தை வேலூர் சீரிளங்கோ மணவாளப் பாண்டிய மூவேந்தர் இரட்சயாகக் கூறப்பட்டுள்ளது.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொற்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலெலசெகரதெவற்கு யாண்டு ய ஆவதின் எதிர் -----------
2. தண்டெஸ்வரதெவற்கு குறுமறைநாட்டு பாகூரான க்ஷத்ரிய சிகாமணி நல்லூர் முனெகதி மொகற்கு தண்ட நாயகம் செய்வா
3. ர்களொமும் தந்திரத்திற்காணவரொமும் தந்திரத்தொமும் கிழ் வெம்ப நாட்டு திருநெல்வெலியில் சுத்தமலிமங்கலத்து சீவலயீ ----
4. ஸ்வரமுடைய நாயனார் கொயிலில் பிள்ளையார் அழகப்பெருமாள் எழுந்தருளிவித்த நாயகற்கும் நாச்சியாற்கும் திருபடிமாற்றுக்கு நாங்கள்

5. விட்டுக்குடுத்த ரூ எங்கள் சிவிதம் செந்தனெரியில் கணவதி வயகா -
6. லுகு தெற்கு கண்ணாறு கிழக்கு முதற்செ ரூ செ ரூ ப இநிலம் இரண்-
7. டுமாவும் சந்திராதித்தவற் செல்வதாக காராண்மை மெய்யாட்சி உட்
8. ப்பட்ட இறையிலிதெவதானம் கல்வெட்டி குடுத்தொம் தந்திரத் தொம் இ -
9. ப்படிக்கு தந்திரவகைகணக்கு வெளூர் சிரிளங்கொ மணவாள -----
10. யபாண்டிய முவெந்தவ ரசெஷ //



## கல்வெட்டு எண். 4 :

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோவில் தெற்குச்சுவர்-கிழக்குப்பாகம்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்
4. ஆட்சியாண்டு - 10வது (கி.பி. 1216+10=1226)
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

கோமாற பன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் சோழணாடு வழங்கியருளிய ஸ்ரீசுந்தரபாண்டியனின் பத்தாவது ஆண்டு கல்வெட்டு, குறுமறை நாட்டுப்பாகூரானச் சத்திரியசிகாமணிநல்லூர் முனையெதிர் மோகருக்குத் தண்டைநாயகம் செய்வார்களொமும் தந்திரத்துக் காரணவரும் மற்றும் தந்திரத்தாரும் எங்களை வேண்டின

இடத்து நாங்கள் ஊராய் இசைந்துக் கல்லகநாடாழ்வார்க்குக் காராண்மையாக நிலம் வழங்கப்பட்டதைக் கூறுகின்றது. இவ்வூர் திருக்கூவலீச்சுவரமுடைய நாயனார் கோயிலுக்குக் கல்லகநாடாழ் வார் எழுந்தருளிவித்தக் கல்லகநாடாழ்வார் தம்பிரானார் கூத்தாடும் தேவருக்கு அமுதுபடி சாத்துப்படி நிமந்தங்களுக்கு நிலம் தானமாக வழங்கப்பட்டது. இவ்வூருக்கு மேற்கே கல்லக நாடாழ்வார் கண்ட குளமும் பாழும் காடும் இந்நாயனாருக்குக் கடமையும் இனக்குக் காராண்மையுமாகத் திருக்களிற்றுப்படியிலே நீரும் வார்த்துக் கொடுத்துப் பூமிக்கு பெருநான்கு எல்லைகளாகக் கிழக்கெல்லை சிற்றாற்றுக்குத் தெற்கு நோக்கிப் பெரும்பாறையூடறுத்துத் தெற்கு நோக்கிப்போன நுரம்புக்கு மேற்கும் தெற்கெல்லை திருச்சாலைக் குடிக்குப் போகின்றப் பெருவழிக்கு வடக்கும் மேற்கெல்லை திருக் குற்றால உடையநாயனார் தேவதானம் ஆன கண்ணமங்கலத்துக் குளத்தில் கீழ்க்கொம்பில் மறுவாய்க்கு வடக்கும் பரம்பிட்ட வயலில் கீழ் வரம்பு எல்லையாக வடமேற்காக வயலின் வடக்கிலும் இக்கண்ண மங்கலத்து குடியிருப்பில் கிணறும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், அமுதக்கண்ணாறு, சிற்றாறு போன்ற ஆறுகளும், பாபாறைக் கோயூற்று ஊர்ப்பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளன. 'திருக்களிற்றுப்படி' என்றச் சொல்லும் இடம்பெற்றுள்ளது.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொமாறபன்மரான திரிபுவனச்சக்கரவத்திகள் சொளணாடு வழங்கி ----
2. ய ஸ்ரீ சுந்தரபாண்டிய தெவற்க்கு யாண்டு பத்தாவது குறுமறை நா --
3. ட்டுப்பாகூர்ரான க்ஷத்ரிய சிகாமணி நல்லுாா் முனை அதிமொகர்க்கு தண் -
4. டநாயகம் செய்வார்கள்ளொமும் தந்திரத்து காரணவரொமும் த -
5. ந்திரத்தொமும் இவ்வூற் திருகூவலீஸ்வரம் உடையார் கொயிலு ----
6. க்குமெல்படியூர்த் தண்டநாயகம் பெருமாளான கல்லக---- ழுந்தருளி ----
7. வித்த ---- கநாடாழ்வார் தம்பிராநார் கூத்தாடும் ----- தெவற்க்கு அமுதுபடிசாத்து -

8. ப்படி உள்பலபடி நிமந்தங்களுக்கு இவ்வூர் படிமெல்பால் இக் கல்லகநாடாழ்

9. வார்கண்ட குளமும் பாளும் காடும் இநாயநாற்கு கடமை

10. யும் இனக்கு காராண்மையும் ஆகத் தர வெணுமென்று ----------

11. யங்களெ இவர் வெண்டியிடத்து நாங்கள் ஊராயிசெந்து இ -

12. க்கல்லக நாடாழ்வாற்கு காராண்மையும் இன்நாயநாற்கு கடமையும்

13. திருகளிற்றுபடியிலெ நிரும்வாத்து குடுத்த பூமிக்கு பெருநாந் கெல்லெயாவது கிழக்கு எல்லெ சிற்றாற்றிகிந்று

14. தெற்கு நொக்கிப்பெரும் பாறெயூடறுத்து தெற்கு நொக்கிப் பொனநூரம்புக் ----

15. குமெற்கும் தெற்கெல்லெ திருச்சாலெக்குடிக்கு பொகிற பெரு வழிக்கு வடக்கும்

16. மெற்கெல்லெ திருக்குற்றால உடைய நாயநார் தெவதானம் ஆன

17. க ்ண்ணமங்கலத்துக்குளத்தி*ல் கிழ்கொம்பில் மறுவாய்க்கு வட ...

18. பரம்பிட்ட வயலில் கீழ்வரம்பெல்லெயாக வடமெற்காக ---------

19. இக்கண்ணமங்கலத்து வயலில் வடக்கில் குடி இருப்பில் கிணறு ----

20. ந்துவைத்து தெற்கு நொக்கிப்பொய் அமுத கண்ணாற்றில் பாபாறைக்கொ ----

21. யூற்றூடெய் ----க்கு னொக்கிப் பொய் சிற்றாற்றிலெய் விழுந்து



## கல்வெட்டு எண். 5 (A.R.E. 390 / 1917) :

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் வடக்குச் சுவர் கிழக்குப்பாகம்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - மாறவர்மன் ஸ்ரீசுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1238)
4. ஆட்சியாண்டு - 20-வது (கி.பி. 1216+20=1236)
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

கோமாறபன்மராக திரிபுவனசக்கரவர்த்திகள் சோணாடு கொண்டருளிய முடிகொண்டசோழபுரத்து வீராபிஷேகம் பண்ணிய ருளிய ஸ்ரீசுந்தர பாண்டியனின் இருபதாவது ஆண்டு கல்வெட்டு, குறுமறை நாட்டுப் பாகூரானச் சத்திரியசிகாமணிநல்லூரிலுள்ள முனையெதிர்மோகருக்குத் தண்டநாயகம் செய்வார்களொமும் தந்திரத்துக் காரணவர்களும் தந்திரத்தாரும் இவ்வூர்த் திருக்கா வாலிச்சுவரமுடைய நாயனாருக்கும் பெருமாளுக்கும் பிராமணர்க்கும் வேண்டும் வியஞ்சனங்களுக்கும் திருப்படி மாற்றுக்கும் இறையிலித் தேவதானமாக விற்றுக்கொடுத்ததற்குப் பெருநான்கெல்லையாவது, தென்மேற்கில் சாலியகுளத்துக்குப்பின் முட்டித்தொண்டுக்கு மேற்கும் தெற்கெல்லை மறவாதாரைவழிக்கு வடக்கெல்லை இக்குளத்து நீர்நக்கலுக்குக் கிழக்கும் வடக்கெல்லையாக மடத்துக்காலும் ஆகிய இந்நான்கு எல்லைக்குட்பட்டக் குளமும் நீர்நிலமும் புன்செயும் நத்தமும் நத்தப்பாழும் மேல்நோக்கினமரமும் கீழ்நோக்கினக் கிணறும் மின்படுபள்ளமும் தென்படுபொதும்பும் உடும்பொடாமை தவளியும் மற்றும் இவைபோன்ற எப்பேர்ப்பட்டனவும் அகப்பட இந்நான்கு எல்லைக்குள்ளும் இறையிலித் தன்மதானமாகத் தண்டேச்சுவரர் விலையாக விற்றுக்கொடுத்தச் செய்தியும் விலைக்குறவிற்றுப் பொருளறக்கொண்டு விற்று, விலைப்பிராமணம் பண்ணிக் கொடுத்தச் செய்தியும் கூறப்பட்டுள்ளன.

## மூலசாஸனம் :

1. ஸ்வஸ்திஸ்ரீ கொமாற பன்மரான திரிபுவனசக்கரவத்திகள் -
2. சொணாடு கொண்டருளி முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷெகமும் பண்ணி -
3. யருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தெவற்கு யாண்டு இருபதாவது குறுமறை நா -
4. ட்டு பாகூரான க்ஷத்ரியசிகாமணிநல்லூர் முனைஎதிர்மொகர்க்கு தண்டநாய -
5. கம்செய்வா*ர்கள்ளொம் தந்திரத்துக்காரணவரொமு தந்திரத் தொம் இவ்வூர்த்திருக்காவாலீஸ்வர*
6. ம்முடையனாயனாருக்கு இப்படிக் குடுத்தொம் பெருமாளுக்கும் பிராமணர்க்கும் திருப்படி......
7. --------- மும் வெண்டும் வஞ்சனத்துக்கு இன்னாயனார்
8. இறையிலி தெவதானமாகவிற்றுக்குடுத்
9. ததுக்கு பெருநான்கெல்லையாவது இவ்*வூர் தன்மெல்பால் சாலிய குளத்துக்கு......
10. பின் முட்டித்தொண்டுக்கு மெற்கு தெற்கெல்லெ மறவாதாரை வழிக்கு வடக்கு......
11. .... ல்லெல இக்குளத்து நீர்நக்கலுக்கு கிழக்கும் வடக்கெல்லெ மடத்து காலும்......
12. இன்னான்கெல்லெக்குட்பட குளமும் நீர்நிலமும் புன்செயும் நத்தமு நத்தபாழும் மெலநொ -----------
13. .........கினமரமுங் கினொக்கினகிணறு மின்படுபள்ளமுந் தென்படுபொதும்பும் உடும்பொடா
14. மைதவளியும் மற்றும் எப்பெர்பட்டனவும் அகப்பட இன்இன்னான்* கெல்லெலக்குள்ளு இறையிலி
15. தன்மதானமாக தண்டெஸ்வரவிலெயாகவிற்று அறக்குடுத்த விலெக்குறவிற்றுப் பொருளறக்கொ
16. ண்டு விற்று விலைப்பிரமாணம் பண்ணிகுடுத்தெந் முனைவதி மொகற்கு தந்டநாயகஞ் செ
17. ய்வா ----------



## கல்வெட்டு எண். 6 (A.R.E. 394 / 1917) :

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் தெற்குச் சுவர் மேற்குப்பாகம்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்
4. ஆட்சியாண்டு - இருபதாவதின் எதிராமாண்டின் எதிரா மாண்டு முதலாமாண்டு (1216+20+1+1=1238)
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும், விஜயா பிஷேகமும் பண்ணியருளியச் சுந்தரபாண்டியனின் இருபதாவதின் எதிராமாண்டின் எதிராமாண்டு கல்வெட்டு, குறுமறை நாட்டுப்பா கூரானச் சத்திரியசிகாமணிநல்லூர் முனைவரி மோகருக்குத் தண்ட நாயகப் பெருமாள் இடர்நீக்கி பாள் இளங்கோவரையனும் கல்லக

நாடுடையானும் இவ்விருவரும் தந்திரத்தோமும் உய்ய வந்தான் அப்பனான குலசேகரமானாற்கு விலைபிரமாணம் பண்ணிக்குடுத்தப் பரிசின்படி, தைச்சன் குளத்திற்குப் பெருநான்கெல்லையாவது கீழ்பாற்கெல்லை குளமும் மேலெல்லை கரைக்கு மேற்கும் தென் னெல்லை வெள்ளைகாலுக்கு வடக்கும் மேற்கெல்லை முசிறி குளத்துக்குப் பாய்கின்ற வாய்க்காலுக்குக் கிழக்கும் வடவெல்லை தென்னெல்லை கீழ்மேலாக கால்வரம்புக்குத் தெற்கும் ஆக இசைந்தப் பெருநான்கெல்லைகளும் கூறப்பட்டுள்ளன. நத்தத்துக்கு எல்லை கீழ்மேல் மூன்று மா நிலம்கொண்டும் தென்வடக்கில் மூன்று மா நிலம் கல் நாட்டிய நத்தமும் ஆக குளித்தமும் எப்பேர்பட்டனவும் விலைக்கு விற்று விலைபிரமாணம் பண்ணிக் கொடுத்தச் செய்திகள் கூறப் பட்டுள்ளன. சந்திராதித்தவர் இருக்கும் வரை நிலங்கள் எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நிலங்களை விற்று அந்நிலங்களைத் தேவ தானமாகத் திருக்கபாலீச்சுவரமுடைய நாயனாருக்கு நான்கு எல்லை களிலும் திரிசூலக்கல் நாட்டி வழங்கியதாகக் கல்வெட்டுக் கூறு கின்றது மற்றும் காராண்மை, கடமை போன்ற வரிகளும் முக்கலம் போன்ற அளவைகளும் குறிக்கப்பட்டுள்ளன.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொ....... ன திரிபுவனச்
2. சக்கரவத்திகள் சொணாடு கொண்டு முடி* -
3. காண்டசொழபுரத்து வீரா அபிஷெகமு -
4. விஜயர் அபிஷெகமும் பண்ணி யருளிசுந்தர -
5. பாண்டியதெவற்கு யாண்டு உய வ னெதிர்
6. ரவதினெதிராமாண்டு குறுமறை நா -
7. ட்டுப்பாவூ க்ஷத்ரிய சிகாமணி நல்லூர் -
8. முனெவரிமொகற்கு தண்ட நாயகப் பெருமாள் இடர்நிக்
9. கி பாள் இளங்கொவனாயனும் பெம்மான்னான க -
10. ல்லக நாடுடையானும் இவ்வி --------
11. -------ண்வரும் தந்திர தொம்மா---------
12. ஊயவந்தானப்பனான குலசெகர-----ாக மானாற்கு வி -
13. லைப்பிரமாணம் பண்ணிக்குடுத்த பரிசாவது எங்கள்

14. ----ன்யி தெச்சன்குளத்துக்குப் பெருநான்கெ
15. கல்லையாவது கிழ்பாற்கெல்லை நெ
16. குளத்து மெலெல்லெ -------
17. கரைகக்கு மெற்கும் தென்னெல்லை
18. வெள்ளைகாலுக்கு வடக்கும் மேற்
19. கெல்லெ முசுறிகுளத்தும்டுெக்குள -
20. க்கு பாய்கிறகாலுக்குக் கிழக்கும்
21. கெல்லெ முசுறிகுளத்தில் த்கெ
22. தன்னெல்லெயான கிழமெலாகப்பெ
23. பாந்த கால்வரம்புக்குத் தெற்கும் ஆ
24. இவ்விசைந்த பெருநான்கெல்லெக் -
25. குளகப்பட்ட ----------- மாவும் ----------
26. --------------- க்கொண்ட நத்தத்து
27. க்கு எல்லை கிழ்மெல் முன்று மாநிலம் நீ
28. ங்கொண்டு தென்வடல் முன்றுமா -
29. கொண்டு கல்நாட்டின நத்தமும் ஆக
30. ளங்------------ரு னான்கெல்லெக்குள்ளகப்பட்டகுளி
31. த்தமும் எப்பெறப்பட்டனவும் விலைக்கு ற விற்
32. றெக்கொண்டு விலெப் பிரமாணம் பண்ணிக்குடு -
33. - குக் காராண்மையும் இவ்வூர் னாயனார் திருக்கபாலீஸ்வர -
34. - நாயனாற்கு தெவதானமாக விற் -
35. --- மாணம்பண்ணி னான்கெலலெகளிலு ந்திருச்சூலக்க -
36. - டி இன்னாயனார் கொயிலிலெ கல்லிலுஞ்செம்
37. - வெட்டிக்கொண்டு இனாயனா
38. பயிர் ----------- பாத்து ----
39. தநிலத்துக்கும் ---------
40. முக்கலமும் ஆறு ---------
41. ாசும் கடமை கெ -----------
42. ----வும் காராண்மை
43. வர் வங்கிஷத்துக் -----------
44. ாதித்தவரை(கு)டி
45. (கா)ராண்மை ஆ -----------
46. ------------------------
47. ன்றுபாதி கடமை ----------

48. க்கவும் குள(த்தகம்) ---------------
49. றிவிளைஞ்ச நிலத்து -----------
50. ------------------------------
51. ப்படி சம்மதித்து வி ----------
52. ணப்படியெகல்வெ --------
53. மக்கு இப்படி கெ ---------







## கல்வெட்டு எண். 7 :

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோவில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் வடக்குச் சுவர்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

பாகூரானச் சத்திரியசிகாமணிநல்லூரில் உள்ள திருமடத்துக்குத் தந்திரத்தார் தானமாக வழங்கப்பட்ட நிலத்தைப் பற்றியும் எல்லைகள் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

## மூலசாசனம் :

1. --------- வழங்கு அருளிய ஸ்ரீசுந்தர --------
2. --------- கூரான க்ஷத்ரிய சிகாமணி நல்லூ---------
3. --------- குஞ்சீரியான திருமடத்துக்கு ----------
4. --------- னெவரும் தந்திரத்தொத்தொமும் ---------
5. ---------- த்துக்கு பெருனான்கெல்லெலெ யாவது -------



# கல்வெட்டு எண். 8

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் கிழக்குச் சுவர்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

சத்திரியசிகாமணிநல்லூர் என்றப் பெயர் இக்கல்வெட்டில் வந்துள்ளது. 'நாள் முப்பதுக்கும்' என்றச் சொல் குறிப்பிடப்பட்டுள்ள தால் 30 நாட்களுக்கு இறைவனுக்கு வேண்டிய நைவேத்தியத்திற்கு வேண்டியத் தானியங்களை அளந்திருக்க வேண்டும். இவ்வளவின் பெயர் 'திருக்களிற்றுப்படி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. திருக் களிற்றுப்படியிலே நீர்வார்த்துச் சந்திராதித்தர் உள்ளவரை அனுபவிக்க நிலதானம் செய்யப்பட்டதாகவும் தெரிகின்றது.

## மூலசாசனம் :

1. ----- ச்சக்கர வத்திக்ள சொணாடு கொ ----------
2. ------- ன க்ஷத்ரிய சிகாமணி நல்லூர் ---------
3. ------ களுக்கு நாள் முப்பதுக்கும் சந்திராதி ---------
4. ----------- தொமும் திருகளிற்றுப்படியிலெ ---------
5. --------- ன்றுவடக்கு -----------
6. ------ க்கும் ------------
7. ஆறும் ரு இன்னாயநற்கு
8. ------ வடக்கும் ------



## கல்வெட்டு எண். 9 (A.R.E. 391 / 1917) :

| | | | |
|---|---|---|---|
| 1. | கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோயில் வடக்குச் சுவர் மேற்குப்பக்கம் |
| 2. | வம்சம் | - | பாண்டியர் |
| 3. | அரசன் பெயர் | - | மாறவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி.1268-1311) |
| 4. | ஆட்சியாண்டு | - | 7-வது (கி.பி.1268+7=1275) ஆவணி மாதம் |
| 5. | காலம் | - | 13-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

கோமாற பன்மரான திரிபுவனசக்கரவர்த்திகள் ஸ்ரீகுலசேகர பாண்டியனின் ஏழாவது ஆண்டு கல்வெட்டு, குறுமறைநாட்டுப் பாகூரானச் சத்திரிய சிகாமணி நல்லூரைச் சார்ந்தப் படைவகுப்பினர் 'முனையெதிர் மோகர்' என்று குறிப்பிடுகின்றது. முனையெதிர் மோகருக்குத் தண்டலை நாயகம் செய்வார்களொம், கீழே மடத்து

சந்தான முதலியார் புஷ்பவனஸிவற்கு தர்மதான இறையிலிப் பிரமாண மாகப் பண்ணிக்கொடுத்தச் செய்திக் காணப்படுகின்றது. இப்பிர மாணத்தின்படி திருநெல்வேலியில் வடக்குத் திருவீதியில் சைவப் பெருமாள்மடத்துக்கு மடப்புறஇறையிலியாக நிலம் வழங்கப் பட்டுள்ளது. இந்நிலத்தில் புரவில்கார் ஒரு பூவுக்குப் பயிர் ஏற்றிக் கொள்ளவிட்ட, வீரஇராஜேந்திரன் வாய்க்காலுக்குத் தெற்குப் பெருந் தேவி வதிக்கு மேற்கு முதல் கண்ணாறு நாலஞ்செய்க்குகுறை நிலம் முக்காணி அரைமா அரைக்காணி முந்திரிகையும் பசான ஒரு பூவுக்கு விட்ட நிலன் முக்காணி, அரைக்காணி முந்திரிகையும் ஒருபூவுக்கு இட்ட கிழக்கு முதல் கண்ணாற்று நாலாஞ் செய்யின் கிழக்கே நிலன் அரைமா அரைக்காணி முந்திரிகைக் கீழரையும், அஞ்சாஞ் செய்நிலன் முக்காணி அரைக்காணி, முந்திரிகையும் ஆறாஞ் செய்நிலன் முக்காணி அரைக்காணி முந்திரிகையும் ஏழாஞ்செய் மேற்கடைய நிலன் காணி, அரைக்காணி முந்திரிகைக் கீழரையும் ஆக மொத்தம் நிலம் மூன்று மா முந்திரிகையும், பசானம் ஒரு பூவுக்கு இறையிலி நிலம் ஐந்து மாவும் ஆக நிலம் ஆறு மா முக்காணி அரைக்காணி, முந்திரிகையில் காருக்கு இறையிலிநிலம் ஒரு மா முக்காணி அரைக்காணி முந்திரிகை ஆக இப்பசானத்திற்கு இறையிலி நிலம் ஐந்து மாவும் ஆக, ஆறு மா முக்காணி அரைக்காணி முந்திரிகையும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நிலங்களின் எல்லைகளைக் குறிப்பிடு வதற்காகத் திருச்சூல ஸ்தாபனமும் பண்ணிக் கொடுக்கப்பட்டுள்ளது. மடப்புற இறையிலியாகக் கொடுத்த நிலம் சந்திராதித்தர் உள்ளவரை என்று எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளது. இப்பிரமாணத்திற்கு கோழிய வரையனெழுத்து, குலசேகர விழுப்பரையனெழுத்து, பாஞ்சாலிய னெழுத்து, கல்லக நாடாழ்வானெழுத்து, இளங்குளவேளூர் கோவரையனெழுத்து, குலசேகர இளங்கோவரையனெழுத்து, சுந்தரபாண்டிய கல்லகநாடாழ்வானெழுத்து, தமிழ்த்தாரையனெழுத்து, சிங்களவனெழுத்து போன்றப் பல்வேறு அரசுப் அதிகாரிகளும், அரசுபிரிவினரும் கையொப்பமிட்டு உள்ளனர் என்பது தெரிகின்றது.

## மூலசாசனம் :

1. ஸ்ரீமெய்கிர்த்திக்கு மெய் ஸ்ரீ கொமாறப -

2. ன்மரான திரிபுவனசசக்கரவத்திகள்
3. எம்மண்டலமுங் கொண்டருளி -
4. ய ஸ்ரீ குலசெகரதெவற்கு யாண் -
5. டு ஏழாவது ஆவணிமாஸம் குறும -
6. றைநாட்டுப் பாகூரான க்ஷத்ரிய சிகாம -
7. ணி நல்லூர் முனையெதிர் மொகிற்கு த்த -
8. ண்டலெ நாயகஞ் செய்வார்களொம் கி -
9. ழெ மடத்து ஸந்தான முதலியார் புஷ்பவன
10. ஸிவற்கு தந்மரான இறையிலி பிரமாணம் பண்ணிக்குடுத்த
11. பரிசாவது திருநெல்வெலியில் வடக்கில் திருவிதியில்
12. செவபெருமான் மடத்துக்கு மடப்புறவி றெயிலியா
13. க நாங்களிட்ட நிலனாவது எங்களூற்புரவில்கார் ஒருபூவுக்
14. குப்பயிரெற்றிகொள்ள இட்ட விரராஜெந்திர வாய்க்கா -
15. லுக்குத் தெற்க்கு உரிய பெருந்தெவிவதிக்கு மெற்கு முதற்க -
16. ண்ணாறு நாலாஞ் செய்க்குறெ நிலன் முக்காணி
17. அரெக்காணி முந்திரி கெயும் மரு செய் ---------- செய் ம் ஆ
18. க லி . . . . . ஒரு பூவுக்கு இட்டநிலன் தெற்கு கி -
19. ழக்கு முதல் கண்ணாற்று நாலாஞ் செய்யில் கிழக்கடெய்
20. நிலன் அரெமா வரைக்காணி முந்திரிகெ க்கிழரெயும்
21. அஞ்சாஞ் செய் நிலன் முக்காணி அரைக்காணி முந்திரிகெ
22. யும் ஆறாஞ்செய்நிலன் முக்காணி அரைக்காணி முந்திரிகெ -
23. கயும் ஏழாஞ்செயி மெற்கடெய நிலன் காணி அரெக்
24. காணி முந்திரிகெக் கிழரெயும் ஆக நிலன் மூன்றுமாமு -
25. ந்திரிகெயும் இத்தானபடியாய்ப்பசானதுக்குப்பயி
26. ------------------------------------------------------------
27. அரைக்காணி முந்திரிகெயு -
28. ம் பசானஒருபூவுக்கு இறையிலி
29. நிலம் அஞ்சுமாவும் ஆக நில -
30. ம் ஆறு மாமுக்காணியு அரெகா -
31. ணிமுந்திரிகையில் காருக்கிறையி -
32. லிநிலம் ஒருமா முக்காணி அரைக்காணி முந்திரிகை யி
33. பசானத்துக்கு இறையிலி நிலம் அஞ்சு மா
34. வும்ஆக நிலம் ஆறுமாமுக்காணி அரைக்காணி
35. முந்திரிகெயும் மடபுற யிறெயிலியாக த்திரு
36. ச்சூல ஸ்தாபனமும் பண்ணிக்குடுத்துக் கல்லிலும்
37. ம்வெடபுரக்குடுத்தமையில் இந்நாள் முதல் மடப் -

38. புற இறையிலியாகக் சந்திராதித்யவத் ...
39. ----லாக அனுபவிப்பாராகவும்
40. தர்ம்மதான இறையிலி பிரமாணம் பண்ணிக்குடுத்
41. தொம் முனையெதிர் மொகற்க்கு த்தண்டல நாயகஞ்
42. செய்வார்களொம் முதலியார் புஷ்பவனஸிவற்கு இவை
43. சொழிய வரையனெழுத்து குலசெகர விழுப்ப ரெயனெ. . .ாக . . .
44. ழுத்து பாஞ்சாலியனெழுத்து இவெ பழெய வாணம் ------ ாக்கு
45. பிஎழுத்து இவை கல்லகநாடாழ்வானெழுத்து இவெ இளங்குள---
 -வெளூர்
46. கொவரெய னெழுத்து இவை குலசெகர இளங்கொவரெ
47. யனெழுத்து இவை ---------- கொவயெ ழுத்து இ -
48. வெசுந்தரபாண்டியக் கல்லகநாடாழ்வா னெழுத்து ------ாதிாக்க --
49. இவெ குல செகரக்கல்லக நாடாழ்வானெழுத்து குலசெகர----
 ணக்கு
50. ச்சொழி யவனரயனெழுத்து தமிழதரெய னெழுத்து --- சிங்கள ---
51. இவை -----க்கு வெளூர் கிழவனெழுத்து இவை ----த்திரக்க -----
 ராயன்





## கல்வெட்டு எண். 10 :

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோவில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் தெற்குச்சுவர்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - 10-வது
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

மாறவர்மன் என்ற விருதுப் பெயர் இக்கல்வெட்டில் காணப்படுகின்றது. நல்லூரில் (சத்திய சிகாமணி நல்லூரில்) உள்ள மடத்திற்கு மடப்புற இறையிலியாகத் தானம் வழங்கப்பட்டுள்ளது. முனையெதிர் மோகருக்குத்தண்ட நாயகம் செய்வார்கள் கொடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொமாறபன்மரான திரி
2. ண்டியதெவற்குயாண்டு பத்தா ------
3. ல்லூர் உடையார் ---- வனம் ---- தன்ம --------
4. குமு . . . . ஸ்ரீ முனையதி மொகற்கு தண்டநி --------
5. மும் இம்மடத்துத் தெக்கு ----------- மடப்புற --------
6. ------------------------ லெக்கு ----------



# கல்வெட்டு எண். 11

| | | | |
|---|---|---|---|
| 1. | கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோவில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் கிழக்குச் சுவர் |
| 2. | வம்சம் | - | - |
| 3. | அரசன் பெயர் | - | - |
| 4. | ஆட்சியாண்டு | - | 9 + 1 |
| 5. | காலம் | - | 13-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

மதனீச்சுவரமுடையார் கோவில் இக்கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த இறைவனுக்கு நிமந்தத்துக்காக நிலங்களைத் தான மாகக் கொடுத்தச் செய்திக் குறிக்கப்பட்டுள்ளது. 'நம்பீயிராமனான வீரபாண்டி' என்றப் பெயர் வருகின்றது. எல்லைகளும் கூறப் பட்டுள்ளன.

### மூலசாசனம் :

1. ------ வற்கு யாண்டு ஆதினெதிராமா ---------
2. ------ சாவனமதனீஸ்வரமுடையார் கொ --------
3. -------- தகம் நம்பியிராமனான வீரபாண் -----------
4. -------- த்த நிமந்ததுக்கு இவ்வூர்க் தந்திர --------
5. -------- கிழெல்லெ வடக்கு நொக்கி பொகி -----------
6. ------- லெ ஆற் -----------------



# கல்வெட்டு எண். 12

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் கிழக்குச் சுவர் தெற்குப்பாகம்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 12-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

திருவாலீச்சுவரருக்குக் கோவிலுக்கு நிலங்களைத் தானமாகக் கொடுக்கப்பட்டச் செய்திக் குறிப்பிடப்பட்டுள்ளது. நஞ்சை, புஞ்சை நிலத்தில் பயிரேற்றி நெல் அளந்ததாகவும் மற்றும் இன்னாயனாருக்குக் கடமையாகக் காடும் நத்தமும் நத்தப்பாழும் நன்செய், புன்செய்யும் மேல்நோக்கின மரமும் கீழ்நோக்கினக்கிணறும் மற்றும் எப்பேற்பட்டனவும் இன்னாயனாரின் கடமை பயிறுக்கும் பயிர்பாத்து பயிர்கொண்ட நிலத்துக்கும் இறைப்படி நிலம் ஒரு மாவும் மாத்தா நிலம், முக்கலம் முக்காணி ஆறுமாவும் ஒருகூறும், இருகலமும் காசு நாலுமாவும் இரண்டு கூறுமாக இம்மூன்று கூறுகள் கொடுத்ததாகவும் சொல்லப்பட்டுள்ளன. நிலத்துக்கு மாத்தாய் அரைமா அச்சும் தோட்டமாய்ப் பிரான்நிலத்துக்கு மேற்கு மரம் உட்பட ஒருமா அச்சும் சந்திராத்தர் உள்ளவரை அனுபவிக்கச் சம்மதித்துத் திருக்களிற்றுப் படியிலே நீர்வார்த்துக் கொடுத்தச் செய்தியும் காணப்படுகின்றது. இவை வேளாகிழவன் எழுத்தாக கையொப்பமிட்டதையும் தெரிவிக்கின்றது. இறைவனின் பெயர் 'கல்லக நாடாழ்வார் தம்பிரான்' என்று கூறப்பட்டுள்ளது. தானம் வழங்கியதற்குக் காரணமானத் தண்ட நாயகம் செய்வார்களையும், தந்திரத்தாரையும் தந்திரக்காரணவரையும் கூறுகின்றது. இக்கல்வெட்டு இரண்டு புறங்களிலும் சிதைந்து உள்ளதால் பொருள் முழுமையாகத் தெரியவில்லை. அச்சு என்ற சொல் இடம்பெற்றுள்ளது. அந்தக்காலத்தில் சலாமணியாக இருந்தக் காசைக் குறிக்கின்றது. அச்சு என்ற சொல் கொங்கு நாட்டிலுள்ளப் பல்வேறு கல்வெட்டுகளில் காணப்படுகின்றது.

## மூலசாசனம் :

1. ---------க்கு கிழக்கும் உட் -----------
2. ---------ன்கெல்லைக்குட்பட கு---- ணாங்காடுங் கானாவங் -----
3. ------- த்தமும் நத்தப்பாழும் நன்செய் புன்செய்யும் மெனொ -----
4. ------ மரமுங் கீள்நொக்கினகிணறு மற்று மெப்பெர் --------
5. ------ நாடாழ்வாற்குக ---------- -
6. --------- இந்நாயனாற்கு கடமையுமாக நாங்கள் குடுத்தமை -----
7. -------யில் இந்நாயனாற்கு இவர் கடமை பயிறுக்கு --------
8. -------- ம்படி பயிர்பாத்து பயிர்கொண்ட நிலத்து -------
9. ------- க்கு இறைப்படி நிலமொருமாவுக்கு மாத்தா ----------
10. ------- நிலமுக்கல முக்காணி ஆறு மாவும் ஒரு கூறும் இருகலமும் ---
11. -------- காசுநாலுமாவும் இரண்டு கூறுமாக இம்மூன்று கூற் ---------
12. -------- லகாத்திலெய் கடமை யிறுப்பாராகவும் புன்செய் பயிற் ------
13. -------- சென்ற நிலம் பயிர்பாத்து முதற்கூடின் நிலத்துக்கு மாத்தாய் ------
14. -------- அரைமா அச்சுந்தொட்டமாய்ப் பிரான் நிலத்துக்குமெ --------
15. -------- மரம்உட்பட ஒருமா அச்சு இய்ப்பாராக இவூரும்மி -----
16. ------- சஷித்தாருஞ் சந்திராதித்தவரை ----------
17. --------- னுபொவித்து இந்நாயனாற்கு இக்கடமை ---- கி -----
18. ------- றுத்துக்கொள்வாராகவும் இப்படி சம்மதித்து -----
19. ------ திருக்களிற்றுப்படியிலெ நிர்வாத்து க்கல்வெ
20. -------- ட்டிக்குடுத்தொந் தண்டநாயகஞ் செய்வார்களொம்
21. ------ முந் தந்திரத்து காரணவரொமுந் தந்திரத்தொ ------------
22. -------- முங் கல்லக நாடாழ்வாந் தம்பிரானாற்குங் கல் -
23. ----- லக நாடாழ்வாற்கும் இப்படி சம்மதித்துக் ------ கல்லவெ -
24. -------- டிக்குடுத்தமைக்கு ஊருக்குச் சமைந்து தந்திரத்துக்கு -------
25. ------ கைக்கணக்கு இவை வெளாகிழவன் எழுத்து ------



## கல்வெட்டு எண். 13

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் மகாமண்டபம்-கிழக்குச்சுவர்-வடக்குப்பாகம்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

காரண்மையாக நிலம் கொடுக்கப்பட்டச் செய்திக் குறிப்பிடப் பட்டுள்ளது. கடமை, காராண்மை போன்ற வரிகளும் முக்கலன், மா போன்ற அளவைகளும் காணப்படுகின்றன. பரிதகால் விலையும் கூறப் பட்டுள்ளது.

## மூலசாசனம் :

1. ---- ன் கல்லக நாடாழ்வார் -----------
2. ---- து வருகிற வரதிபுண் நாடா --------
3. ----- க் கலன் இருமா வரை ---------
4. --- க நாடாழ்வாற்கு காராண்மை ---------
5. ----- கல்லக நாடாழ்வான் --------
6. ------ கு க்கடமையும் நாங்கள் --------
7. -----க்கடமை பரிதகால் விலை
8. முதல் 16 வரை உள்ளவை சிதைந்துக் காணப்படுகின்றன.
17. --------- தந்திரத்தொம் -----------
18. ----- கல்லக நாடாழ்வார்க்கு -----------



## கல்வெட்டு எண். 14

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர்கோயில் அம்மன் சன்னிதிகிழக்குச்சுவர் |
| 2. வம்சம் | - | - |
| 3. அரசன் பெயர் | - | - |
| 4. ஆட்சியாண்டு | - | - |
| 5. காலம் | - | 13-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

இறைவனுக்குத் தண்டைநாயகம் நீர்வார்த்துச் செய்துக் கொடுத்த நிலதானத்தினை இக்கல்வெட்டுக் கூறுகின்றது.

## மூலசாசனம் :

1. ----- னச்சக்கரவத்திகள் -----------
2. -------- துகுறுமறைநாட் --------
3. -------- முடையார் கொயி ----------
4. ---------- கஞ்செய்வாருந்தந் ----------
5. -------- ........வாத்து குடுத் ..... ----------



## கல்வெட்டு எண். 15

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர்கோயில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் தெற்குச் சுவர்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

இறைவனுக்குத் தானம் கொடுத்தச் செய்தி இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. தந்திரத்தார் குறிப்பிடப்பட்டுள்ளார். தானம் கொடுத்ததுத் தானியமாக இருக்கவேண்டும். ஏனெனில் திருக் களிற்றுப் படியிலே வைத்து நீர்வார்த்துக் கொடுத்ததுக் குறிப்பிடப் பட்டுள்ளது மூலம் உறுதிப்படுத்துகிறது.

## மூலசாசனம் :

1. ---- ளிற்றுப்படியிலெ நீர்வாத்து --------
2. ------ பரவச் செய்வார்களொமும் தந்திரத்துக்கு -------
3. ------ ற்க்கு இப்படிக்கிவை தந்திரத்து ----------



## கல்வெட்டு எண். 16 :

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோயில் அம்மன் சன்னிதி - ஜகதி |
| 2. வம்சம் | - | - |
| 3. அரசன் பெயர் | - | - |
| 4. ஆட்சியாண்டு | - | - |
| 5. காலம் | - | 13-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

அம்பாள் சன்னதியின் ஜகதியில் இடம்பெற்றுள்ள இக்கல் வெட்டுச் சிதைந்துக் காணப்படுவதால் பொருள் புலன்படவில்லை. பெரிய உடையவரான முதலியார் பெயரும் பெருமாள் பெயரும் இடம் பெற்றுள்ளன.

## மூலசாசனம் :

1. - தந்திரத்து பெருமாள் ஆகுவாணான சி -
2. - த்....தன...முழுதிருகந்திவமுதி -
3. - வித்து இவருடையாக கொயிலும் -
4. - பெரிய உடையாரான முதலியார் -
5. - 12 வரிகள் சிதைந்துக் காணப்படுகின்றன. எழுத்துக்கள் முழுவதும் சிதைந்துவிட்டன.



# கல்வெட்டு எண். 17

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் அம்மன் சன்னிதி - அர்த்தமண்டபம் கிழக்குச் சுவர்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

மாத்துக்கு நிலம் கொடுக்கப்பட்டச் செய்தியையும், நிலத்தினை நீர்வார்த்துக் கொடுத்ததுச் செய்தியையும் எல்லைகளையும் இக்கல்வெட்டுக் கூறுகின்றது. மேற்படி விபரங்கள் கல்வெட்டுச் சிதைவால் புலன்படவில்லை.

## மூலசாசனம் :

1. - சம ---தங்---க்குத்---டு -
2. - வெதி ---மாத்துக்குடுத்த ரூ -
3. - தரைக்கும் -
4. - க்கு ---லவெல் -
5. -ம---ன---வடக்கும் -
6. - கு நீருவாத்தச் சமத்து -



# கல்வெட்டு எண். 18

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் மகா மண்டபம்-கிழக்குச்சுவர் தெற்குப் பாகம்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 14-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

காரணவர், தந்திரத்தார் ஆகியோர் இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளனர். மேலும் திருக்களிற்றுப்படி என்றச் சொல்லும் குறிப்பிடப்பட்டுள்ளது. காணி, முக்கலம் போன்ற நிலஅளவுகள் காணப்படுகின்றன. நிலஎல்லைகளும் கூறப்பட்டுள்ளன.

## மூலசாசனம் :

1. ------பமு............ச்ச......ங்த்தில் தந்திரத்து ---------
2. --------------------------------
3. ---யளத்தில் --------
4. -----ானதப் ------------
5. ----ணவருந் தந்திரத்தொ ---------
6. ----- வார்த்துக் குடுத்ததெ உ
7. ----- காணி முக்கலத்தில் --------
8. -------- வாத்து ----------------------
9. -------------------------------
10. --------------------------------
11. ---- ாகவலகாரட -----
12. --------------------------------
13. ---ந்திருக்களிற்றுப்படியிலெ ய -----
14. -----து இவ்வூர் வடக்கு ------

 

## கல்வெட்டு எண். 19 (A.R.E. 392/1917)

1. கல்வெட்டு இடம் - திருவாலிச்சுவரர் கோயில் மேற்குச் சுவர் தெற்குப்பக்கம்
2. வம்சம் - -
3. அரசன் பெயர் - -
4. ஆட்சியாண்டு - கி.பி. (560+824=1384 A.D) கொல்லம் ஆண்டு
5. காலம் - 14-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

திருவாலிச்சுவரர் கோயிலில், திருவாலிச்சுவரர் கருவறை யின் தெற்கில் திருமதிற்சுவர் இடிந்து விழுந்து (சரிகையில்) விட்டதால் கி.பி.1384-ல் திருநெல்வேலியிலுள்ள வேம்புள நாட்டுக் கீழ்நாட்டைச் சேர்ந்தக் குறிச்சி என்ற ஊரைச்சேர்ந்தக் காத்தான் வளத்தராயன் என்பவன் திருப்பணி செய்வித்ததாகக் கல்வெட்டுக் கூறுகின்றது.

## மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லம் ருளசாய-வது
2. இந்நாயனார் கொயில் கர்ப -
3. கிரகம் தெற்கில்த் திருமதிள் சரிவெ
4. கயில் இதுபறித்து த்திருப்ப -

5. ணி செய்வித்தான் வெண்பு -
6. ள நாட்டுக் கிழ்நாட்டுக்குறு -
7. ச்சிக்காத்தான் வளத்தராயன் -
8. சுபமஸ்து //-



## கல்வெட்டு எண். 20

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | திருவாலிச்சுவரர் கோயில் தெற்குச் சுவர் மேற்குப் பாகம் |
| 2. வம்சம் | - | - |
| 3. அரசன் பெயர் | - | - |
| 4. ஆட்சியாண்டு | - | - |
| 5. காலம் | - | கொல்லமாண்டு (கி.பி. 590+824 =1414A.D) |

## கல்வெட்டுச் செய்திகள் :

திருவாலீச்சுவரர் கோயிலின் மகாமண்டபம் தெற்கில் திருமதில், திருநிலைக்கால் போன்ற அனைத்துக்கும் திருப்பணிச் செய்வித்ததாகக் கூறப்பட்டுள்ளன. திருப்பணிச் செய்வித்தவன் பெயர் தெளிவாகத் தெரியவில்லை. வீதிவிடங்கப் பெருமாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் வீதியில் உலா வரும் நடராசப் பெருமாளைக் குறிப்பிடுகின்றது. இப்பெருமாள் சிலை செப்புப்படிமத்தில் இருக் கின்றது என்பதனையும் கூறுகின்றது.

மூலசாசனம் :

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லம் ரு ய
2. நாயனார் கொயில் மஹா மண்டபம்
3. தெற்கில் திருமதிள் திருநிலைக்கால்
4. --------------------------------
5. ---------- திருப்பணி செய்வித்தான் ------------
6. ---------- த்தான ------னா-----இருகனா ---------கள் --------
7. --------னைவிலெ மந்திரி இன்னாயனா ருக்கு ------------
8. லான விதி விடங்கப் பெருமாள்
9. சுபமஸ்து



## 2. ஸ்ரீ வெங்கடாசலபதி கோயில் கல்வெட்டுக்கள்

### கல்வெட்டு எண். 1

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் |
| 2. வம்சம் | - | பாண்டியர் |
| 3. அரசன் பெயர் | - | மாறவர்மன் ஸ்ரீவல்லவதேவன் |
| 4. ஆட்சியாண்டு | - | - |
| 5. காலம் | - | 12-ஆம் நூற்றாண்டு |

### கல்வெட்டுச் செய்திகள் :

கோமாரபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவல்லவ தேவன் கல்வெட்டாகும். முனையெதிர் மோகர் விண்ணகர் பெருமான்

நித்தல் நிமந்தத்துக்குத் திருவிடையாட்டமாக நிலங்கள் வழங்கப் பட்டது. தண்டைநாயகம் செய்வார்களும் தந்திரத்துக்காரர்களும் நிலங்கள் வழங்கப்பட்டச் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. நிலங்களின் பெயர்களும் அளவும் எல்லைகளும் கூறப்பட்டுள்ளன.

## மூலசாசனம் :

1. ---- ஸ்ரீஎகாமாற பம்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ வல்லவ தெவற்கு யா ----
2. ---- மொகற்கு தண்டைநாயகம் செய்வார்களொமும் தந்திரத்துக்காரன்
3. ---- திரு இடையாட்டம் இட்டு குடுத்த நிலம் காடேற்றுக்கு .......... பெருநான் -
4. ---- க்கு தெக்கும் இ நான்கெல்லெலக்கு உள்ப்பட்ட நிலமும் மெல் நொக்கின மரமு -
5. ---- ஒருமா வரையும் குற்றிம்மை ரூ ஒருமாவும் ஆக இருநிலமும் நீர்வா ............

**Original reading from lines 1 6 is as follows.**

1. ......... கொமாற பம்மரான திரிபுவனச்
   சக்கரவர்த்திகள் ஸ்ரீவல்லப தெவற்கு யா
   உயவது குறுமறை ................சஷத்ரிய சிகாமணி
   நல்லூர் முனைகதி மொகர் விண்ணகர்
   எம் பரு மா -

2. - மொகற்கு தண்டைநாயகஞ் செய்வார்
   கள்ளொமும் தந்திரத்து ......... வாரொமும்
   ........ ரத்தெ.....ன்று .......க்கு நித்ல் நிமந்த
   துக்கு எங்கள் நில உளிட்ட கு

3. - திருவிடையாட்டம் இட்டுக்குடுத்த நிலம்
காடேற்றுக்குக் கெல்லை ஆவது
கிழக்கெல்லை பாழிக்கு மெல்க்கும் ........
எல்லை கரை நிலத்துக்கு வடக்கும்
மெக்கு எல்லை பள்ளிக்கு* கிழக்கு .......
வட - எ

4. - க்கு தெக்கும் ....... இ நான்கெல்லைக்கு
உள்ப்பட்ட நிலமும் மெல் நோ .......ம்
கீள் நொக்கின ....... கிணறும் மற்றும்
எப்பெறப்பட்டனவும் ....... நீர்வார்த்துக் குடுத்து
குடப்பள்ளி ரூ ஒரு மாவும் பள்ளிச்ச

5. ஒரு மா வரையும் குற்றிமடை ரூ ஒரு மாவும்
குடுத்தொம் தண்டைநாயக ...... செய்
வொமும் தந்திரத்துக்காரன்டாரொமும்
தந்திரத்தொ ............

6. மொ கர் விண்ணகர் எம்பெரு - (A.R.E.396/1917)



## கல்வெட்டு எண். 2

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் |
| 2. வம்சம் | - | - |
| 3. அரசன் பெயர் | - | - |
| 4. ஆட்சியாண்டு | - | - |
| 5. காலம் | - | 12-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

இரண்டு மா நிலங்களை விலைக்கு வாங்கி அதிலிருந்து வரும் கடமையை ஸ்ரீபண்டாரத்தில் ஒடுக்கி முனையெதிர்மோகர் கோவில் திருவாய்க்குலத்துப் பிள்ளைக்குத் தானமாக வழங்கப்பட்டச் செய்திக் காணப்படுகின்றது.

## மூலசாசனம் :

1. - பாழ்க்குடெ தற்கு ப்பெருனான்கெல்லெலெக் குள்பட்ட
2. - யாரில் விலெகொண்ட நிலம் இரண்டு மாவும் -
3. ட..... படரு நிலங்களால் வந்த கடமை நாங்கள் -
4. - இட்ட இரப்பெராயிர முடையான் ஸ்ரீபண்டாரத்திலெ -
5. - டைத்துக்குக் குடுத்தொம் முனெவது மொகரான ஆபத்து -
6. - ரயக்குலத்துப்பிள்ளை படைத்தலெவர் நாயகற்கு -



## கல்வெட்டு எண். 3

| | | | |
|---|---|---|---|
| 1. | கல்வெட்டு இடம் | - | ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் |
| 2. | வம்சம் | - | - |
| 3. | அரசன் பெயர் | - | - |
| 4. | ஆட்சியாண்டு | - | - |
| 5. | காலம் | - | 12-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள்

பாகூரானச்சத்திரியசிகாமணிநல்லூர் முனையெதிர் மோகர் எம்பெருமான் நித்தல் நிமந்தத்துக்குக் கரைநிலமும் குடப்பள்ளி நிலம் ஒருமாவும் பள்ளிச்சந்தமாக வழங்கப்பட்டதைக் குறிக்கின்றது.

## மூலசாசனம் :

1. - யச் சிகாமணிநல்லூர் முனெ(ெ)திர* மொகர் விண்ணகர் எம்பெருமானுக்கு
2. - க்கு நித்தல் நிமந்தத் துக்கு எங்கள்ளிலி உள்......வடக்கு -
3. - எல்லெல கரை நிலத்துக்கு வடக்கும் மெக்கு எல்லெல . . . கிழக்கு வடஎ -
4. - நீர்வாத்துக் குடுத்து குடப்பள்ள ரூ ஒரு மாவும் பள்ளிச்ச -
5. - செய்வொமும் தந்திரதுக்காரணவரொமும் தந்திரத்தொ -
6. ................ மொரா விண்ணகர் எம்பெரு -



## கல்வெட்டு எண். 4 (1, 2)

| | | |
|---|---|---|
| 1. கல்வெட்டு இடம் | - | ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் |
| 2. வம்சம் | - | பாண்டியர் |
| 3. அரசன் பெயர் | - | ஸ்ரீவல்லபதேவன் |
| 4. ஆட்சியாண்டு | - | 2-வது |
| 5. காலம் | - | 13-ஆம் நூற்றாண்டு |

## கல்வெட்டுச் செய்திகள் :

குறுமறைநாடு இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனைமுழி ஊர்க்குளமும் மற்றும் ஆறு, மடை முதலியவையும் எல்லை களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆறு மா நிலம் தானமாக வழங்கியச் செய்தியும் காணப்படுகின்றது.

## மூலசாசனம் :

## கல்வெட்டு எண். 4 (1)

2. --------- வனச்சகரவத்திகள் ஸ்ரீவல்லப தெவர்க்கு யாண் ------
3. --------- ட்டமாய் வருகிற ஆணை முழிஊர்க்குளங் ---------
4. --------- ல்லெ ஆற்றுக்குத் தெற்கும் ஆக இந்நா ---------
5. --------- வராயன் மடை முன் நிலம் இரண்டு மா ---------



## கல்வெட்டு எண். 4 (2)

1. --------- டு உ வது குறுமறைநாட் ---------
2. --------- கொண்டு பொகை ---------
3. --------- ன் கெலலெலக்குப்ப ---------
4. --------- வும் ஆக நிலம் ஆறு ---------



# கல்வெட்டு எண். 5

1. கல்வெட்டு இடம் - ஸ்ரீவெங்கடாசலபதி கோயில்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - முதலாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி.1218-1232)
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள் :

முதலாம்மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் இக்கல்வெட்டு மெய்க்கீர்த்தியின் முதல்பகுதிக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாகூர் பாண்டியநாட்டுக் குறுமறைநாட்டில் இருந்துள்ளது என்பது தெரிகின்றது.

## மூலசாசனம் :

1. --------- ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் ஜயமகள் திருப்புய ---------
2. --------- நெடு நில முழுவ துந் தர்ம வெண்குடை நிழலிற்றழை --------
3. --------- ங்க நதிப்பெருஞ்சடை முடிநாதன்கூடிய மதிகுலத்திகழ் -----
4. --------- ஸ்ரீபாண்டி நாட்டு குறுமறை நாட்டுப் பாகூரான ---------



# கல்வெட்டு எண். 6

1. கல்வெட்டு இடம் - ஸ்ரீவெங்கடாசலபதி கோயில்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - மாறவர்மன் ஸ்ரீவிக்கிரம பாண்டியன் (கி.பி.1218 - 1232)
4. ஆட்சியாண்டு - -
5. காலம் - 12-ஆம் நூற்றாண்டு

# கல்வெட்டுச் செய்திகள்

மாறவர்மன் திரிபுவனசக்கர்வாத்திகள் என்றழைக்கப்படுகின்ற விக்கிரமபாண்டியன் இக்கல்வெட்டில் இடம்பெற்றுள்ளான். இவன் சுந்தரபாண்டியனுக்குத் தம்பியாவான். சுந்தரபாண்டியனிடம் சேரனும் வளவனும் திறை செலுத்தியச் செய்தியும் வடபுல மன்னர்கள் இவனிடம் அடைக்கலமானச் செய்தியும் காணப்படுகின்றன. 'திரு மகள் ஜயமகள்' என்றுத் தொடங்கும் மெய்க்கீர்த்தியை உடைய மாறவர்மன் விக்கிரம பாண்டியன் 1218-இல் முடி சூட்டியவன் ஆவான். சோணாடு கொண்டருளியச் சுந்தர பாண்டியனுக்குச் சத்திரிய சிகாமணி நல்லூர் என்று அழைக்கப்படும் கீழப்பாவூரிலிருந்து தென்னவனாபத்து தவிகள் என்ற பெயர் கொண்டப் படையுடன் சென்று கி.பி.1231-ஆம் ஆண்டில் நடந்தப் போருக்குப் படை உதவி செய்தான் என்பது பெறப்படுகின்றது. திரிபுவன சக்கரவர்த்திகள் என்றப் பட்டம் புனைந்துகொண்ட முதல்மன்னன் முதலாம் குலோத்துங்கச்சோழனே ஆவான். 1073 முதல் இப்பெயர் கல்வெட்டு களில் வழங்கலாயிற்று. இப்பட்டப் பெயரை பின்னர் வந்த அரசர்களும் தம் பெயர்களுடன் புனைந்து கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது.

# மூலசாசனம்

1. திரப்பப் பொருகடலாடை நிலமகள் புணரக் -
   கடவுள் மெருவிற் கயல்விளெயாட வடபுல -
   மன்னர்வ ----

2. பச்செங் கொடைப்பக் கருங்கலி துரந்து
வெத விதியினிதியினிலவச் செரனும் வளவனுந்
திறை குணந்திளற் -

3. மணிமுடி விளங்கிய மணியணி வீரஸி0
ஹாஸனத்து வீற்றிருந்தருளிய கொமாற -
பன்மரான திரிபுவனச் சக்ரவத்திகள்
ஸ்ரீவிக்ரம -------

4. சுஷத்ரிய சிகாமணி நல்லூர் முனைவது
மொகரான தென்னவனா பத்துதவிகளொம்
இவ்வூர்ப்படை -

**Original reading from lines 1 4 is as follows.**

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் ஜயமகள்
திருப்பு - திருப்பப் பொருகடலாடை
நிலமகள் புணரக் கடவுள் மெருவிற்
கயல் விளையாட வடபுல மன்னர் -

2. ழ் நெடு நில முழுதும் தர்ம வெண்குடை
நிழலிற்ற-ப்பச் செங்கொடைப்பக் கருங்கலி
துரந்து வெதவிதியினிதினிலவச் சேரனும்
வளவனும் திறை குணந்தின -

3. ங்க ந் சுட பெருஞ்சடை முடிநாதன் சூடிய
மதிக்குலத்திக் - மணிமுடி விளங்கிய
மணியணிவீரஸிங்காஸனத்து
வீற்றிருந்தருளிய கொமாற பன்மரான
திரிபுவனச் சக்கர வத்திகள் ஸ்ரீவிக்ரம -

4. வது ஸ்ரீ பாண்டி நாட்டுக் குறுமறை
நாட்டுப் பாகூரான - சுஷத்ரிய சிகாமணி
நல்லூர் முனைவது மொகரான
தென்னவனாபத்துதவிகளொம் (A.R.E. 395/1917)



## கல்வெட்டு எண். 7

1. கல்வெட்டு இடம் - ஸ்ரீவெங்கடாசலபதி கோயில்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - மாறவர்மன் ஸ்ரீவிக்கிரம பாண்டியன் (கி.பி.1218 - 1232)
4. ஆட்சியாண்டு - 7-வது (1218+7=1225)
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள்

மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் ஏழாவது ஆட்சியாண்டில் நைவேத்தியமாகிய அமுதுபடிக்கும் கோயில் விக்கிரங்களுக்குச் செய்யும் சாத்துப்படிக்கும் இறைவனுக்குப் படைக்கும் பிரசாதமாகிய நிவேதன உணவுக்குரிய வருவாய் இறை நிவேதனம் அலங்காரம் உட்பட்டவைகளுக்குரியக் கறிவகைகள் உள்ளிட்ட நாள்வழிபாட்டுத் தேவைகளுக்காகச் சிவிதமாய் கடமை, தண்டி நிலங்களை இன்னாட்டு அரிஞ்சிகைபிராட்டி சதுர்வேதிமங்கலத்துக்கு மேற்கில் தானம் செய்துக்கொடுத்ததையும் பேராயிரமுடையானாகிய வணிகர் குழு இக்கோவிலுள்ள ஸ்ரீபண்டார அறையிலிருந்து எடுத்துக் கொடுத் ததையும் இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றன.

## மூலசாசனம்

1. ---- றான திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீவிக்ரம -----
   பாண்டியத் தெவற்கு யாண்டுஎவது ஸ்ரீபாண்டி -----
2. ---- கு அமுதுபடி சாத்துப்படிக்கு எங்கள் சிவிதமாய்க் -----
   கடமை தண்டி ----
3. ---- நிலமும் இன்னாட்டு அறிஞ்சிகைப் பிராட்டிச் -----
   சதுர்வெதி மங்கலத்து மெற் ----

4. ---- பெராயிரமுடையான் இன்னாயனாா
ஸ்ரீபண்டார அறையிலெ எடுத்திட ----



## கல்வெட்டு எண். 8

1. கல்வெட்டு இடம் - ஸ்ரீவெங்கடாசலபதி கோயில்
2. வம்சம் - பாண்டியர்
3. அரசன் பெயர் - மாறவர்மன் ஸ்ரீவிக்கிரம பாண்டியன்
4. ஆட்சியாண்டு - கி.பி.1218 - 1232
5. காலம் - 13-ஆம் நூற்றாண்டு

## கல்வெட்டுச் செய்திகள்

தென்னவனாபத்துதவிகளொம் விக்கிரமப்பாண்டியன் இறைவனுக்கு நிவேதனம் செய்யும் அமுதாமகியத் திருப்போனகத்திற்கு அரிஞ்சிகைப் பிராட்டி சதுர்வேதி மங்கலத்தில் வாரிசு உரிமை நிலமாகியக் காணியினை ஒரு நறுங்காசு கொடுத்து, பொன்னமடத்தார் கேட்டுக் கொண்டதன்படி திருவாய்வாய்க்குலத்துப் பிள்ளைக்கு நிலதானம் செய்ததனைக் காட்டுகின்றது. இக்கல்வெட்டு மூலம் நற்காசும் கொடுத்து உள்ளான் என்பது தெரிகின்றது.

## மூலசாசனம்

1. - நிலமும் அறிஞ்சிகைப் பிராட்டி சதுர்வெதி ----
2. - க்கு காணியும் பொன்னமடத்தார் பலாமற் ----
3. - கொண்டபடியெய் திருவாய்க்குலத்துப் பிள் ----
4. - ஒருநறு ங்காசு .....மீது வருவானாகரூபய ----

The *bhitti* contains *devakoshthas* on the south, west flanked by pilasters containing, *kumbha, tadi, phalaka* with *adhahpadma* moulding. the niche is surmounted by makaratorana arch with *kudu* arch without any embellishment.

The *devakoshthas* are long, narrow and shallow without any space to house the images. The niches of the *ardhamandapa* are builtin. The cantoning pilasters and the other pilasters bear the tenon corbels. Above the pilasters and over the *bhitti* portion, one can find the *uttara, vajana, urdhvapadma* moulding and above this the *prastara* (cornice) containing the *kapota* moulding with *kodikkarukku* at the corners and *kudu* arches with *simhamukha* finial. The central circle contains the heads of human figures.

The south, west and north walls are studded with inscriptions of Pandya rulers Maravarman Sundara Pandya and Kulasekhara Pandya. Nearly ten records have been noticed. East wall of the *mandapa* contains a record. The niches are reminiscent of the Pandya period.

The *mahamandapa* walls contain niches on the south and north sides surmounted by makara torana arches. The *kudu* circle inside this arch houses the relief figures. The wall portions are inscribed. From the available records it may be inferred that the main shrine dedicated to Siva has come into existence somewhere around 12[th] century. The niches show the Pandyan style of construction.



The goddess Sivakami shrine *Vimana* consists of *garbhagriha, ardhamandapa* preceeded by *mahamandapa*. The vimana is square on plan from *upana* upto *prastara*. The *vimana* is built of stone while the superstructure is of brick and mortar.

The vimana consists of base, *bhitti* and the *salasikhara* (wagon topped roof). The base consists of *upana*, inscribed *jagati* which are concealed while the other parts are *tripatta kumuda, kantha* with *galapadas, prati,* again *kantha* with *galapadas* and the *pattika* with adhahpadma moulding. The *bhitti* of the *vimana* contains 3 *devakoshthas* one each on the west, on the north and south sides. The proceeding *ardhamandapa* contains one niche each on the south and north sides. The niches are long, narrow and shallow without any space for housing the images. The pilasters flanking the niches show similar features that are seen in the pilaster of the main vimana of Tiruvalisvara shrine. The niches are surmounted by *salasikhara*.

This *dvitala vimana* is surmounted by *sala* si*k*hara ending in a finial. The goddess shrine is situated to the south of the main *vimana* (Siva's shrine).

This *vimana devatas* show standing goddess images while the *grivadevatas* are shown seated. The whole temple couplex is encircled by a *tirumadil*.

## Main shrine

The mahamandapa is supported by pillars with plain capitals and medallions. Sculptures of Surya, Chandra, Saturn, Nandikesvarar, Subrahmanya, and Ganesha are found installed in the mahamandapa-Kalabhairava is found in a separate shrine in the prakara. The image of Dvarapalaka seems to be of the Pandya period.

In the kudu arches of the devakoshthas of the walls, relief figures of Vallabha Ganesa, Ashtabhuja Durga and linga are seen depicted: The *mukhamandapa* proceeding the *mahamandapa* is supported by plain pillars.

# Date of the temple

This Siva temple has yielded nearly 19 epigraphs. All the records belong to the Pandya period. Of these, twelve are dated records. The earliest inscription belongs to the reign period of Sadaiyavarman Srivallabha who ascended the throne in c. 1101A.D. The main vimana wherein the record is engraved refer to this record. Hence, the temple should have come into existence prior to this date i.e., in the 11th century or so. In the succeeding years this temple had received the royal patronage. This is evident from the availability of the epigraphs of Sadaiyavarman Kulasekhara (acc. 1162 A.D), Maravarman Sundarapandya I (acc. 1216 A.D) and Maravarman Kulasekhara (acc. 1268 A.D). In 1384 A.D., the south wall of the garbhagriha fell into disrepair, the shrine was rebuilt by the Valattaraiyan. After 30 years from this date i.e., 1414 A.D., the mahamandapa, the doorjamb, etc., have been renovated. On account of frequent renovations the records are built into the walls of the ardhamandapa, etc in a disorderly way.



**Thiruvalisvarar Temple**

# Venkatachalapati temple at Kilappavur

There are two shrines in the Vishnu temple complex found west of the village, one dedicated to Venkatachalapati and the other to Nrisimha. The shrine of Nrisimha which fell into disuse has been taken up for construction recently. As per the original plan it is now built. The temple faces east. Square on plan the *vimana* is proceeded by an *ardhamandapa* and *mahamandapa.* The vimana consists of *adhishthana, bhitti, prastara* upto which portion the stone construction can be seen, over and above this, it is built of brick and mortar. The *ardhamandapa* show similar features. The *adhishthana* consists of *upana, jagati, tripatta kumuda, kantha* with *galapadas* and *prati.* The wall portion do not contain any *devakoshthas.* The *prastara* consists *uttara, vajana, kapota* with *kudu* arches. The superstructure is of brick and mortar.

The main deity is a standing Nrisimha in bas-relief shown in the form of killing Hiranyakasipu. The deity is a sixteen armed relief figure with various attributes that are characteristic of Nrisimha in the act of killing the asura. Manned lion features can be seen in the face of this relief. There is a *tirtha* behind the Nrisimha temple.

The temple contains a number of fragmentary subscriptions belonging to the Pandya period. A few epigraphs begin with the meykirtti of the ruling kings. With the help of these records the structure of the original temple may be dated back to 11$^{th}$ century A.D.

There is a big lake to the north of this temple which can be identified with Munai-edir-mohar-per-eri which is also called Melappavur-eri.

## Date of the temple of Munai-edir-mogar Jvinnagar

Of the 2 records available from the Vishnu temple, five are dated records. The earlier of these belongs to the reign period of

Maravarman Srivallabha, whose 20th year record (1165 A.D) refer to the temple of Vinnagar Alvar which may probably refer either to the temple of Venkatachalapathi or Narasimha. There is a record of one Srivallabha dated in his 2nd year, whose identity is not clear. He may be identified with Sadaiyavarman Srivallabha whose undated inscription mentioning the meykirtti Tirumadandaiyum Jayamadandaiyum, etc. of this king is found recorded on the west and south walls of Tiruvalisvara temple in the village Bagur alias Kshatriyasi-khamaninallur. If this identification is accepted, it may be suggested that the Vishnu temple also must have come into existence before 1103 A.D., the date of Srivallabha inscription from the Vishnu temple. This has been calculated taking into account the accession date of Sadaiyavarman Srivallabha. The title Sadaiyavarman in the record of Srivallabha from Vishnu temple is missing. The other three records available from the Vishnu temple belong to the reign period of Maravarman Vikrama Pandya of acc. 1218 A.D.



திருவாலீச்சுவரர் கோயிலின் தோற்றம்



திருவாலீச்சுவரர் விமானத் தோற்றம்



அம்மன் சன்னதி



அம்மன் சன்னதியின் தேவகோஷ்டங்கள்



அம்மன் சன்னதி - விமானத் தோற்றம்



மகரத் தோரணமுள்ளே அஷ்டபுஜ துர்க்கை



மகரத் தோரணத்தில் உச்சிஷ்ட விநாயகர் வல்லபையுடன்



திருவாலீச்சுவரர் மண்டபத்தோற்றம்



திருவாலீச்சுவரர் கோயில் அமைப்பு



ஸ்ரீ வெங்கடாசலபதி கோயில் பழையத் தோற்றம்

# 6. திருவாலீச்சுவரர் கோயில் சிற்பங்களும் செப்புப்படிமங்களும்

## 1. கிரியாலிங்கம் :

திருவாலீச்சுவரர் கிரியாலிங்கமாக விளங்குகின்றார். ஆவுடையார் மேற்பகுதியிலும் பூமிக்குக் கீழேயிருந்துத் தரைமட்ட மாகத் தோன்றியதால் சுயம்புலிங்கமாகக் கிழக்கு நோக்கி காணப்படு கின்றார்.

## 2. சிவகாமி அம்பாள் :

இறைவியின் கோயில் பொதுவாக இறைவனின் சன்னிதிக்கு வடபுறத்தில் மேற்கு நோக்கி இருக்கும். ஆனால் இறைவனைப் பூசித்துத் திருமணம் கொண்டருளியத் தலங்களில் இறைவன் கோயிலுக்குப் பக்கத்தில் தெற்குப்பகுதியில் கிழக்கு நோக்கி அமர்ந் திருக்கும். சிவகாமி அம்பாள் இறைவனைத் தவமிருந்துத் திருமணம் புரிந்து கொண்டதால் தனிச் சன்னிதியில் தெற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி நின்றக் கோலத்தில் காட்சித் தருகின்றாள். வலது கை கருங்குவளையான நீலோற்பலமும், இடது கை லோல ஹஸ்தத்துடனும் காணப்படுகின்றன. அம்பாளின் தலையில் கரண்ட மகுடமும், காதில் குண்டலமும் கழுத்தில் ஆரமும் காணப்படுகின்றன.

## விநாயகர் :

விநாயகர் திருவாலீச்சுவரர் சன்னிதியில் மகாமண்டபத்தின் தெற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி அமர்ந்தக் கோலத்தில் நான்கு கைகளைக் கொண்டு விளங்குகின்றாா. மேல் வலது கையில் பாசமும் மேல் இடது கையில் அங்குசமும் கீழ் வலது கையில் தந்தமும் கீழ் இடது கையில் லட்டுகமும் கொண்டுள்ளார்.

## சண்முகநாதன் :

சண்முகநாதன், திருவாலீச்சுவரர் சன்னிதியில் மகாமண்டபத்தின் வடக்குப் பகுதியில் கிழக்கு நோக்கி நின்றத் திருக்கோலத்தில் காட்சித் தருகின்றார். மயில்வாகனத்துடன் நான்கு கைகள் கொண்டுத் திகழ்கின்றார். மேல் வலது கையில் சக்கி ஆயுதமும் மேல் இடது கையில் வஜ்ரமும் கீழ் வலது கையில் அபயமும் கீழ் இடது கையில் வரத அஸ்தமும் கொண்டு விளங்குகின்றார்.

## சூரியன் :

திருவாலீச்சுவரர் சன்னிதியில் மகாமண்டபத்தின் கிழக்குப் பகுதியில் மேற்கு நோக்கி நின்றத் திருக்கோலத்தில் சூரியன் வீற்றிருக்கின்றார். இரண்டு கைகள் காணப்படுகின்றன. இடதுகை வரத அஸ்தத்துடனும், வலதுகை அபய அஸ்தத்துடனும் உள்ளன. தலையில் கரண்ட மகுடமும், காதில் பத்திரக்குண்டலும் அணிந்துள்ளார். சூரியனுக்குப் பிரபை உள்ளது.

## சந்திரன் :

சந்திரன் திருவாலீச்சுவரர் சன்னதியில் கிழக்குப் பகுதியில் மேற்கு நோக்கி சிரசுக்குப் பின்புறத்தில் சந்திராசிலாரூபத்துடன் நின்றத் திருக்கோலத்தில் காணப்படுகின்றார். நான்கு கைகளை உடையவராகத் திகழ்கின்றார். மேல் வலது கையில் அமிர்த கலசமும் மேல் இடது கையில் பாசமும் வைத்துள்ளார். தலையில் கரண்ட மகுடமும் காதில் பத்திர குண்டலமும் அணிந்துள்ளார்.

## நந்திகேஸ்வரர் :

நந்திகேஸ்வரர் மகாமண்டபத்தின் தெற்குப் பகுதியில் வடக்கு நோக்கி நின்றத் திருக்கோலத்தில் காட்சித் தருகின்றார். இவருக்கு அதிகார நந்தி என்ற பெயரும் உள்ளது. நான்கு கைகளை உடையவராக உள்ளார். மேல் வலது கையில் அங்குசமும் மேல் இடது கையில் மானும் கீழ் இரண்டுக் கரங்கள் அஞ்சலி முத்திரையுடனும் காணப்படு

கின்றன. தலையில் கரண்ட மகுடமும் காதில் மகர குண்டலமும் அணிந்துள்ளார்.

## சனிஸ்வரர் :

மகாமண்டபத்தின் வடக்குப் பகுதியில் தெற்கு நோக்கி சனிஸ்வரர் நின்றத் திருக்கோலத்தில் உள்ளார். இவர் வலது கையில் தண்டமும் இடது கையில் கடி ஹஸ்தமும் வாகனமாகக் காகத்தையும் கொண்டுள்ளார்.

## சக்திகணபதி :

அம்மன் சன்னதிக்கு முன் உள்ள மகாமண்டபத்தில் தெற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி உள்ளார்.

இச்சிற்பங்கள் எல்லாம் பிற்காலப் பாண்டியர்களால் தோற்று விக்கப்பட்டச் சிற்பங்களாக உள்ளன.

## துவார பாலகர் :

துவார பாலகர், திருவாலீச்சுவரர் சன்னிதியிலுள்ள முன்மகா மண்டபத்தின் நுழைவாயிலில் கிழக்கு நோக்கி நின்றத் திருக்கோலத் தில் காட்சித் தருகின்றார். வலது கால் கதை மேல் தாங்கியுள்ளச் சொ-ரூபமாகக் காணப்படுகின்றது. வலது கையினை வலது தொடையின் மீது மேல் வைத்துள்ளார். இடது கை விஷ்மய ஹஸ்தத்துடன் உள்ளது. காதில் பத்திரக் குண்டலமும், தலையில் கரண்ட மகுடமும் கழுத்தில் ஆரமும் அணிந்துள்ளார். இரண்டு துவாரபாலகர்களுக்கு நந்தி மட்டுமே உள்ளார். காலர் இடம் பெறவில்லை. துவாரபாலகர் வந்ததை நோக்கும்போது பாண்டியர் காலத்தைச் சார்ந்தச் சிற்பம் என்று கூறலாம். காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டாகும்.இடைக்காலப் பாண்டியர்களால் தோற்றுவிக்கப்பட்டது.

## கன்னிமூல விநாயகர் :

கன்னிமூல விநாயகர், கோயிலின் திருச்சுற்றில் தென்மேற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி காணப்படுகின்றார். அமர்ந்தக் கோலத்தில்

வீற்றிருக்கின்றார். நான்கு கைகளுடன் உள்ளார். மேல் வலது கையில் பாசமும் மேல் இடது கையில் அங்குசமும் கீழ் இடது கையில் லட்டுகமும் கீழ் வலது கையில் தந்தமும் கொண்டுள்ளார். மூசீக வாகனத்துடன் காணப்படுகின்றார்.

## மீனாட்சி சுந்தரேச்சுவரர் :

திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி மீனாட்சி சுந்தரரேச்சுவரர் காட்சித் தருகின்றனர்.

1. சுந்தரேச்சுவரர் உருண்டையான (முட்டை) வடிவம் கொண்ட வானலிங்கமாக உள்ளார்.
2. மீனாட்சி அமர்ந்தத் திருக்கோலத்துடன் அர்த்தப் பத்மாசனத்தில் வீற்றிருக்கின்றாள். வலதுகை நீலோற்பலமும் இடதுகை லோல ஹஸ்தத்துடனும் காணப்படுகின்ற இரண்டு கைகளைக் கொண்டுள்ளாள்.

## ஆதிலிங்கம் :

திருவாலீச்சுவரரின் திருச்சுற்றில் மேற்குப்பகுதியில் ஆதி-லிங்கம் இடம்பெற்றுள்ளது. இரண்டு லிங்கங்கள் காணப்படுகின்றன.

1. ஆதிலிங்கம் 2. மூலலிங்கம்
   இக்கோயிலில் இரண்டுமே பிரதிஷ்டைச் செய்யப்பட்டுள்ளன.

## சாஸ்தா :

ஐயப்பன் என்று சொல்லப்படும் சாஸ்தா கமலப்பீடத்தில் உள்ளார்.

## தெட்சிணாமூர்த்தி :

திருவாலீச்சுவரரின் தென்பாகத்தில் யோகதெட்சிணாமூர்த்தி தெற்கு நோக்கி காணப்படுகின்றார். அர்த்தப் பத்மாசனத்துடன் அமர்ந்தக் கோலம் கொண்டுள்ளார். மேல் வலது கையில் அட்ஷ மாலையும் மேல் இடது கையில் சர்ப்பமும் முத்திரையும் கீழ் வலது கையில் வியாக்கியான முத்திரையும் கீழ் இடது கை கடி

அஸ்தத்துடனும் காணப்படுகின்றார். இடதுகாலை வலது கால் தொடைமேல் வைத்துள்ளார். ஜடாமகுடத்தினைத் தலையிலும் காதில் பத்திரக் குண்டலத்தினையும் அணிந்துள்ளார். இடது கால் லோல முத்திரையுடன் காண, வலதுகால் அசுரனான முயலகன் முதுகு மேல் வைத்துள்ளார். முயலகன் தவழ்ந்தக் கோலத்தில் தன் தலையை மேல் எழுப்பியவாறு இடது கையில் சர்ப்பத்தினைக் கொண்டுள்ளார். தெட்சிணாமூர்த்தி பீடத்தின் வலப் பக்கத்தில் சனகர், சனார்த்தனர் முனிவர்களும் இடது பக்கத்தில் சனந்தர் சனக்குமார் முனிவர்களும் வணங்கியக் கோலத்தில் காணப்படுகின்றனர்.

## சுப்பிரமணியன் :

கோயில் திருச்சுற்றின் வடமேற்குப் பகுதியில் சுப்பிரமணியன் நின்றக் கோலத்தில் மயில் வாகனத்துடன் கிழக்கு நோக்கி நான்கு திருக்கரங்களுடன் காட்சியளிக்கின்றான். மேல் வலது கையில் சக்கி ஆயுதமும் மேல் இடது கையில் வஜ்ரமும் கீழ் வலது கையில் அபயமும் கீழ் இடது கையில் விரதஹஸ்தமும் கொண்டுள்ளான்.

## விஷ்ணு துர்க்கை :

திருவாலீச்சுவரரின் வடக்குப் பகுதியில் வடக்கு நோக்கி விஷ்ணு துர்க்கை வீற்றிருக்கின்றாள். நின்றத் திருக்கோலத்துடன் கிரீடமகுடமும் தாடங்கக் குண்டலமும் அணிந்திருக்கின்றாள். நான்கு திருக்கரங்களுடன் காட்சித் தருகின்றாள். மேல் வலது கையில் சக்கரமும் மேல் இடது கையில் சங்கமும் (சங்கு) கீழ்வலதுகை அபய கரமாகவும், கீழ்இடதுகை சின்முத்திரையுடனும் காணப்படுகின்றன.

## சண்டேச்சுவரர் :

சண்டேச்சுவரர் கோயிலின் திருச்சுற்றில் திருவாலீச்சுவரர் மகாமண்டபத்தின் வடக்குப் பகுதியில் அமர்ந்தத் திருக்கோலத்துடன் காட்சித் தருகின்றார். அர்த்தப் பத்மாசனத்தில் உள்ளார். வலது கையில் பரசு என்று சொல்லப்படும் கோடாரியும், இடது கையில் ஏடும் கொண்டுள்ளார். காதில் பத்திரக் குண்டலமும் தலையில் கரண்ட மகுடமும் அணிந்துள்ளார். மார்பில் ஆரங்கம் என்று சொல்லப்படும்

புரிநூலும் கழுத்தில் மாலையும் அணிந்துள்ளார். நெற்றியில் திரிநேத்தரம் என்று சொல்லப்படும் சிவனைப்போல் மூன்று கண்களுடன் காணப்படுகின்றார்.

## ஸ்ரீகாலபைரவர் :

திருவாலீச்சுவரர் சன்னிதியின் வடக்குப் பகுதியில் நின்ற திருக்கோலத்தில் திருவாச்சியுடன் தெற்கு நோக்கி நிர்வாணத்துடன் தோற்றமளிக்கின்றார். இவர் நான்குக் கைகளை உடையவர். மேல் வலது கையில் உடுக்கையும் (தமரகம்) மேல் இடது கையில் சர்ப்பமும், கீழ் வலது கையில் சூலமும் கீழ் இடது கையில் உள்ள ஆய்தம் சிதைந்தும் காணப்படுகின்றன. தலையில் ஜடாமகுடமும் (விரிந்த மகுடம்) இடது காதில் பத்திர குண்டலமும் வலது காதில் நாகக் குண்டலமும் அணிந்துள்ளார். கழுத்தில் ஆரங்கள் அணிந்துள்ளார்.

## மகர தோரணச் சிற்பங்கள் :

## 1. வல்லப விநாயகர் :

தட்சிணாபாகத்தில் (தெற்கு) உச்சிஷ்ட விநாயகர் புடை சிற்ப மாகச் சித்தியாகிய வல்லபம்பாள் தேவியுடன் காட்சித் தருகின்றார். அமர்ந்தக் கோலத்தில் வீற்றிருக்கின்றார். விநாயகர் நான்குத் திருக்கரங்களுடன் காட்சித் தருகின்றார். மேல் இருகை களில் பாசாங்குசமும் கீழ் இடதுகை வல்லபையை அணைத்திருக்கும் திருக்கோலத்திலும் காணமுடிகின்றன. இச்சிற்பம் மகரத் தோரணத்தில் கூடு வளைவில் இருப்பதைக் காணமுடிகின்றது.

## 2. அஷ்டபுஜ துர்க்கை :

உத்திரபாகத்தில் (வடக்கு) நின்றக் கோலத்தில் புடை சிற்பமாக அஸ்டபுஜ துர்க்கை சிற்பம் உள்ளது. துர்க்கை அனிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈரத்துவம், வசித்துவம் போன்ற எட்டு சக்திகளை விளக்கும் அட்டமா சித்தி களாகக் காட்சித் தருகின்றாள்.

அஷ்டபுஜ துர்க்கை நின்றத் திருக்கோலத்தில் திரிபங்க நிலையில் காணப்படுகின்றாள். ஆறு கரங்களில் ஆயுதங்களும் ஒரு

கையில் அபயமுத்திரையும் மற்றொரு கையில் கடிஅஸ்தத்துடனும் சித்தரிக்கப்படுகின்றாள். கூடுவில் அமைந்துள்ளச் சிற்பங்களில் இச்சிற்பம் மிகவும் அழகானதாக உள்ளது.

மற்றொரு தேவகோஷ்ட கூடுவில் லிங்கம் அமைந்துள்ள தனைக் காணமுடிகின்றது.

## தூண் சிற்பங்கள் :

### 1. ஆஞ்சநேயர் :

மண்டபத் தூணில் ஆஞ்சநேயர் நின்றத் திருக்கோலத்தில் காணப்படுகின்றார். வலதுகை லோல ஹஸ்தத்துடனும் இடதுகை மலையைத் தாங்கியுள்ள திருக்கோலத்துடனும் காணப்படுகின்றார். இவர் கரண்ட மகுடமும் பத்திர குண்டலமும் அணிந்துள்ளார்.

### 2. நாயக்க மன்னர் :

மண்டபத் தூணில் நின்றக் கோலத்தில் அஞ்சலி ஹஸ்தமாக நாயக்க மன்னர் சிலை ஒன்று புடை சிற்பமாகக் காணப்படுகின்றது. இச்சிற்பம் நாயக்கமன்னர்களும் இக்கோவிலுக்குத் திருப்பணிச் செய்ததனை எடுத்துக் கூறுகின்றது. திருமலை நாயக்கர் இக் கோவிலுக்கு வந்துள்ளார் என்றும் திருப்பணி செய்துள்ளார் என்றும் செவிவழிச் செய்திகள் தெரிவிக்கின்றன.

### யாளி சிற்பம் :

மண்டபத்திலுள்ள ஒரு தூணின் பீடத்தின் அடிப்பகுதியில் கோவையாக யாளிகளின் பட்டையுள்ளச் சிற்பம் காணப்படுகின்றது. யாளிகளின் துதிக்கைகள் அவற்றின் கீழ்ப்பகுதியிலுள்ள மகரங்களின் துதிக்கைகளோடு பின்னிப்பிணைந்தவாறு மற்றொரு தூணில் காணப்படுகின்றது.

### சிவகாமி அம்பாள் பூசை செய்யும் சிற்பம் :

மண்டபத்தின் ஒரு தூணில் சிவகாமி அம்பாள் சிவலிங்கத் திற்குப் பூசை செய்யும் காட்சி இடம்பெற்றுள்ளது. இருகைகளிலும்

தாமரைப் பூவினைக் கையிலேந்தி, நின்று கொண்டுப் பூசை செய் கின்றக் காட்சிக் காணப்படுகின்றது.

## பணிப்பெண் சிற்பம் :

மண்டபத்திலுள்ள ஒரு தூணில் பணிப்பெண் சிற்பம் காணப் படுகின்றது. வடக்கு நோக்கியுள்ளது. இப்பெண்ணின் மார்பகத்தில் கயிற்றில் கோர்த்தத் திருமாங்கல்யம் காணப்படுகின்றது. வலக்கால் ஊன்றி இடக்கால் தூக்கி பாதம் வெளிப்புறம் தெரியுமாறு அமைக்கப் பட்டுள்ளது. இப்பெண்ணின் தலை அலங்காரமும் கவனிக்கத் தக்க தாகும். வலப்பக்கத்தில் கொண்டை உருண்டை வடிவத்தில் மேல் நோக்கி அலங்காரத்துடன் உள்ளது. இடதுப் பக்கத்தில் நுனி சுருட்டி விடப்பட்டுள்ளது. இது புடைசிற்பமாகக் காணப்படுகின்றது.

## குரங்கு சிற்பம் :

மண்டபத்திலுள்ள தூணில் குரங்கு நின்றக் கோலத்திலுள்ளச் சிற்பம் காணப்படுகின்றது. தன் கைகளைப் பின்னிப் பிணைந்துப் பெருக்கல் குறியீடு போல் வைத்துள்ளது. கீழப்பாவூர் முன்னொரு காலத்தில் குரங்குகள் வாழும் குறுங்காவனமாக இருந்ததை இச் சிற்பம் குறிப்பிடுகின்றது. இச்சிற்பம் புடை சிற்பமாகக் காணப்படு கின்றது.

## மன்மதன் கலை சிற்பம் :

மண்டபத்தூணில் மன்மதன் புடை சிற்பம் ஒன்று உள்ளது. காமக்கடவுள் கரும்பு வில்லையும் மலர்க்கணையையும் கைகளில் ஏந்தி அன்னத்தின் மீது நின்றக் கோலத்தில் காட்சியளிக்கின்றான். த்ரை புருஷசிற்பமாகக் காணப்படுகின்றது. கைகள் கீழ்நோக்கியவாறு உள்ளன. மன்மதனின் வலப்பக்கத்தில் ஒரு பெண் உருவச் சிற்பமும் இடப்பக்கத்தில் ஆண் உருவச்சிற்பமும் காணப்படுகின்றன. மன்மதன் அன்னத்தின் மேல் நின்றுக் கொண்டுப் பறந்து வருவதைப் போலவும் ஆணும் பெண்ணும் கலந்து நிற்றல் காட்சியும் இச்சிற்பத்தில் இடம்பெற்றுள்ளன. இச்சிற்பம் மண்டபத்தில் வடக்குப்புறமுள்ளத் தூணில் தெற்கு நோக்கிக் காணப்படுகின்றது.

## வாலி பூசை செய்யும் சிற்பம் :

சிவகாமி அம்பாள் சன்னிதானத்தில் மகாமண்டபத்தில் வாலி சிவனுக்குப் பூசை செய்யும் புடைசிற்பம் காணப்படுகின்றது. வாலி நின்றக் கோலத்தில் சிவலிங்கத்திற்குப் பூசை செய்கின்றான்.

## மிதுனா சிற்பம் :

கோவிலின் நுழை வாயிலில் உள்ள இருதூண்களில் வலப்புறத் தூணில் மிதுனாசிற்பம் பொறிக்கப்பட்டுள்ளது.

கோயில் மண்டபத் தூண்களில் காமரூபத்தைக் காட்டும் பெண்களின் சிற்பங்கள், கையில் கத்தியுடன் காணப்படும் வீரர்களின் சிற்பங்கள், சங்குமுத்திரைகள், திருநாமம், உத்திராட்சமாலை, தாமரை மலர்கள், விநாயகர், லிங்கங்கள் போன்றச் சிற்பங்களும், ஒரு தூணில் இரண்டு ஆமைகள் எதிர் எதிராகவும், நடுவில் தாமரை மலரும் உள்ள சிற்பமும், மற்றொரு தூணில் இரண்டு ஆமைகள் எதி ரெதிர் பக்கங்களில் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டும் நடுவில் தாமரை மலரும் அதற்குமேல் இரண்டு வாத்துகளின் சிற்பங்களும் தூண்களில் இடம்பெற்றுள்ளன. மற்றும் தூண்களில் யானை, காமதேனு(பசு) சிற்பங்களும் காணப்படுகின்றன. இன்னும் சில சிற்பங்கள் சிதைந்து காணப்படுவதால் அதைப் பற்றியக் குறிப்புகள் புலப்படவில்லை.

## மண்டபத்தின் அடிக்கூரை புடைசிற்பங்கள் :

மீன்கள் சிற்பமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இது பாண்டியர் களின் சின்னத்தைக் குறிக்கின்றது. மீன்கள் ஆங்காங்கே தனித் தனியாகவும், வரிசையாகவும் எதிரெதிராகவும், மூன்று மீன்கள் முக்கோண வடிவத்தில் இணைந்து இருக்கும் காட்சியும், இரண்டு மீன்கள் இணைந்திருக்கும் காட்சியும், நடுவில் தாமரை அதன் இடப்பக்கத்தில் மிகச் சிறிய மீனும், அதனையொட்டிப் பெரிய மீனும், வலப்பக்கத்தில் பாம்புப் பலகையில் வளைந்திருக்கும் தோற்றமும் அதனையொட்டி இருக்கும் பெரிய மீனும் இடம்பெற்றுள்ளச் சிற்பக்

காட்சிகளும் உள்ளன. மற்றொரு பகுதியில் நடுவில் பலகையில் தாமரையும் அதன் வலப்பக்கத்தில் மீன் உருவமும் அதனையடுத்து தாமரை மலரும் இடப்பக்கத்தில் ஒரு சிறிய விளக்கும் அதனையடுத்து பலகையில் தொங்கிக் கொண்டிருக்கும் பாம்பின் தோற்ற உருவச் சிற்பமும் காணப்படுகின்றன. மற்றொரு பகுதியில் நடுவில் தாமரை மலரும் அதன் இடப்பக்கத்தில் பாம்பும் இடம்பெற்றுள்ளது. வலப்பக்கச் சிற்பம் தெளிவாகத் தெரியவில்லை.

மற்றொரு பகுதியில் இரண்டு முதலைகள் இணைந்திருக்கும் காட்சியும் ஒரு முதலை வட்டவடிவத் தாமரை மலரினை வாயில் பிடித்துக் கொண்டிருக்கும் காட்சியும், மற்றொரு தூணில் மீன் பிறைச் சந்திரனைப் பார்த்துக் கொண்டிருக்கும் சிற்பக் காட்சியும் மற்றொரு பகுதியில் ஆமையின் பின்னால் முதலை பின்தொடரும் காட்சியும் ஒரு பெரிய முதலை சிறிய முதலையுடன் இணைந்திருக்கும் காட்சியும் முதலையும் ஆமையும் எதிரெதிர் திசைகளில் திரும்பிக் கொண் டிருக்கும் காட்சியும் முதலை, ஆமை, சந்திரன் சிற்பங்கள் தனித்தனி யாக இடம்பெற்றுள்ளன.

## செப்புப் படிமங்கள் :

திருவாலீச்சுவரர் கோயிலுக்குப் 1.பிரியாவிடை திருவாலீச்சு-வரர் 2. சிவகாமி நடராசர் ஆகிய இரு சிலைகள் செப்புப்படிமங்களாக உள்ளன. இவை செப்புத் திருமேனிகளாகவும் பஞ்சலோகச் சிலைகளாகவும் உள்ளன. இங்குள்ள நடராஜர் தத்ரூபதாண்ட வத்துடன் காட்சித் தருகின்றார். ஆனால் இடது காலினைத் தூக்கி வைத்தவாறு உள்ளார். உற்சவமூர்த்தியாக இருக்கும் நடராஜருக்கு ஆனிமாதம் உத்தரம் நட்சத்திரத்தில் திருமஞ்சன மண்டபத்தில் வைத்து அபிஷேகம் ஆராதனை நடைபெறுகின்றது. ஐப்பசி மாதம் உத்திர நட்சத்திரத்தில் திருவாலீச்சுவரர் சிவகாமி அம்பாள் திருக் கல்யாணம் நடைபெறுகின்றது. செப்புச் சிலைகள் தற்போது கோயிலில் இல்லை. இவ்விரண்டு சிலைகளும் பாதுகாப்புக்கருதித் தென்காசி காசிவிசுவநாதர் கோயில் அலுவலகப் பொறுப்பில் வைக்கப் பட்டுள்ளன. விழாக்களின் போது இச்சிலைகள் கொண்டுவரப்பட்டு பூசைகள் முடித்துக் கொண்டுச் செல்லப்படுகின்றன.

## ஸ்ரீவெங்கடாசலபதி :

ஸ்ரீவெங்கடாசலபதி நின்றத் திருக்கோலத்தில் வீற்றிருக்கின்றார். இவர் கீழ் இடதுகை கடிஹஸ்தமும் கீழ் வலதுகை வரஹஸ்தமும் மேல் வலது கையில் சக்கரமும் மேல் இடது கையில் சங்கும் வைத்துள்ளார். கீழ்இரண்டு கைகளும் அவரது பாதத்தை நோக்கி இருக்கின்றன. அவரது பாதங்கள் புறத்தில் தெரியும் வண்ணம் உள்ளன. இவர் காதில் மகரக் குண்டலங்களையும் மார்பில் ஆபரணங்களையும் தலையில் கிரீட மகுடத்தையும் அணிந்துள்ளார்.

## ஸ்ரீதேவி :

நின்றத் திருக்கோலம். இடது கையில் பூச்செண்டாகியத் தாமரை மலரினை வைத்துக் கொண்டும் வலதுகை லோல ஹஸ்தத்துடனும் காணப்படுகின்றன. ஸ்ரீதேவி கரண்ட மகுடம் அணிந்துள்ளாள்.

## பூதேவி :

நின்றத் திருக்கோலம். வலது கையில் தாமரைப் பூச்செண்டும், இடதுகை லோல ஹஸ்தத்துடனும் காணப்படுகின்றன. பூதேவி கரண்ட மகுடம் அணிந்துள்ளாள்.

வெங்கடாசலபதி துணைவிப் பத்மாவதி தாயார் என்று அழைக்கப்படுகின்றாள்.

## ஸ்ரீஉக்ரநரசிம்மர் புடை சிற்பம் :

கருவறையில் அமர்ந்தக் கோலத்தில் நரசிம்மரது புடைசிற்பம் இடம்பெற்றுள்ளது. இவரது தலையிலுள்ள மகுடத்தை ஒட்டி வெண் கொற்றக்குடை அமைக்கப்பட்டுள்ளது. அவரது வலம், இடம் ஆகிய இரு மருங்கிலும் வெண்சாமரங்கள் இடம்பெற்று உள்ளன. கிரீட மகுடம் அணிந்துள்ளார். அகல விரிந்த வாயும், பிதுங்கியக் கண்களும்

குருதியுடன் காணப்படும் நாக்கும், சிங்கமுகத் தோற்றமும் அச்சத்தினை ஊட்டுவனவாகத் திகழ்கின்றன. இரணியகசிபுவை வதம் செய்து, ஸ்ரீநரசிம்ம பெருமாள் பதினாறு திருக்கரங்களுடன் காட்சித் தருகின்றார். சிங்கமுகமும் மனித உடலும் கூடிய நரசிம்மர் அமர்ந்தக் கோலத்தில் வீற்றிருக்கின்றார். ஆறு கைகளில் சங்கு, சக்கரம், கேடயம், கட்கம் (கத்தி), அம்பு, வில் போன்ற ஆயுதங்களை ஏந்தியுள்ளார். மேலுள்ள முதல் இரண்டு கைகள் இரணியகசிபுவின் குடரினை மாலையாக அணிந்து அதனை பிடித்துக் கொண்டும், இரணியகசிபுவின் தலையினை ஒரு கையும் காலினை ஒரு கை பிடித்துக் கொண்டும் நான்கு கைகள் இரணியகசிபுவை வதம் செய்து வயிற்றைக் கிழித்துக் குடரினை எடுப்பதனைச் செய்கின்றன. அவரது வலப்பக்கக் கையில் ஒன்று அசுரனை பிடித்துக் கொண்டும் இன்னொரு கை ஒன்றுமில்லாமலும் காணப்படுகின்றன. ஸ்ரீநரசிம்மர், இரணியகசிபுவை தன் மடியில் கிடத்திக் கொண்டு வதம் செய்துள்ளார். ஏனென்றால் அவன் நிலத்தின் மீது நிற்கின்றபோது எவராலும் அவனது உயிரைப் பறிக்க இயலாது என்ற வரத்தினைப் பெற்றிருந்தமையால் அவனை நிலத்தில் படாதவாறு தன் மடியில் கிடத்தி வதம் செய்துள்ளார். இரணியகசிபு கிரீட மகுடத்துடனும் அவனது இடது கை கேடயத்துடன் தொங்கிக் கொண்டும் உள்ள காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இடது காலினை நீட்டியவாறு கிடக்கின்றான். ஸ்ரீநரசிம்மர் வலதுகால் கீழே முயலகன் முதுகின்மேல் அழுத்தியத் திருக்கோலமும் இடதுகால் வலது தொடை மீது வைத்து காட்சியளிக்கின்றார். அவரது வலப்பக்கக் கீழ் மருங்கில் உள்ள உருவம் அசுரன் ஆவான். அவன் கையில் கேடகமும் கட்கமும் பிடித்துள்ளான். இடப்பக்கக்கீழ் மருங்கில் மூவர் ஸ்ரீநரசிம்மரை வணங்கியவாறு உள்ள சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. முதலாவதாக ஒரு பெண் அஞ்சலி அஸ்தத்துடன் கைகளை ஏந்தியுள்ளத் திருக்கோலம் உள்ளது. அவள், தன் மகனைக் காப்பாற்றிக் கொடுத்த ஸ்ரீநரசிம்மருக்கு நன்றிச் செலுத்தும் வகையில் பிரகலாதனின் தாயாகியக் கயாது என்பவள். மற்றொருவர் பிரகலாதன், இன்னொருவர் காசிபமகரிஷி ஆவார்.



சிவகாமி அம்பாள் திருவாலீச்சுவரருக்குப் பூசை செய்யும் சிற்பம்



வாலி சிவனுக்குப் பூசை செய்யும் சிற்பம்



சுப்பிரமணியன்



துவார பாலகா



ஒரு போர் வீரன் கத்தியுடன்
நிற்கும் சிற்பக் காட்சி



கால பைரவர்



நரசிம்மர் சிற்பம்

# 7. பூசைகளும் விழாக்களும்

## திருவாலீச்சுவரர் கோயில் :

திருவாலீச்சுவரர் கோயிலில் வைதீக பிரதிஷ்டை முறைப்படி பூசைகள் நடைபெறுகின்றன. திருவாலீச்சுவரர் கோயிலில் பூசைளும் விழாக்களும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. இருவகை பூசைகள் உண்டு. 1. ஆன்மார்த்தம் 2. பரார்த்தம். தனக்காக பூசை செய்வது ஆன்மார்த்தம் ஆகும். உலக நன்மைக்காக (அல்லது) நாட்டின் நன்மைக்காக செய்வது பரார்த்தப் பூசை எனப்படும்.

கோயிலுக்குள் இருக்கும் சிவலிங்கம் மக்கள் வழிபாட்டுக்காக ஏற்படுத்தப்பட்டப் பரார்த்த லிங்கமாக உள்ளது. சைவசமயம் சிவாலய வழிபாட்டிற்கும் சமய ஒழுக்கத்தைப் பாதுகாத்து வழிகாட்டுவதற்கும் திகழ்கின்றது.

அபிடேகம், நைவேத்தியம், பலி, தீபம், விபூதி போன்றவை முறையாகப் படைப்பு, காத்தல், அழித்தல், மறைத்தல், அருள் போன்ற ஐவகைக் காரியங்களை விளக்கும் நித்திய பூசை செய்யப்படுகின்றது.

உஷத்காலம், காலைச்சந்தி, உச்சிக்காலம், பிரதோஷக் காலம், மாலைச் சந்தி, அர்த்தயாமம் ஆகிய ஆறு பூசைகள் நடைபெற்று இருந் துள்ளன. ஆனால் தற்சமயம் கோவிலில் காலை, மாலை ஆகிய இரு வேளைகளில் மட்டுமே பூசைகள் நாள்தோறும் நடைபெறுகின்றன (சிறுகால் சந்தி, சாயராட்சை).

பிரதோஷம் ஒவ்வொரு மாதமும் நடைபெற்று வருகின்றது. சித்திரை விசு, வைகாசி விசாகம், ஆனி உத்திரம், ஆடிப்பூரம், ஆவணி மூலம், ஆவணி அவிட்டம், விநாயக சதுர்த்தி, புரட்டாசியில் நவராத்திரி விழா, ஐப்பசியில் திருக்கல்யாணத் திருவிழா, கார்த்தி கையில் சோமவார விழா, மார்கழியில் திருவாதிரை விழா, தைப் பூசத் திருவிழா, மாசி சிவராத்திரி விழா, பங்குனியில் பங்குனி உத்திரம் விழா போன்றவை மாதந்தோறும் சிறப்பாகக் கோவில் நிர்வாத் தாராலும் கட்டளைத்தாரர்களாலும் நடத்தப்பட்டு வருகின்றன.

கோவில் பூசைகளும் விழாக்களும் அந்தந்தக் கோவிலுக்குரியப் பொருளாதாரத்தைப் பொறுத்து நடைபெறுகின்றன.

1. ஆனி மாதம் உத்திரம் நட்சத்திரத்தில் சிவகாமி நடராசருக்குச் சிறப்பு அபிஷேகம் ஆராதனை, திருவிடங்க மண்டபமாகியத் திருமஞ்சன மண்டபத்தில் வைத்து நடைபெற்று வருகின்றது. உற்சவமூர்த்தியை எழுந்தருளச் செய்து பூசைகள் நடக்கின்றன.
2. ஐப்பசி உத்திரம் நட்சத்திரத்தில் திருவாலீச்சுவரர் சிவகாமி அம்பாளின் திருக்கல்யாணம் ஒவ்வொரு ஆண்டும் நிகழ்த்தப் பெறுகின்றது. திருக்கல்யாண மண்டபத்தில் வைத்து நடத்தப் படுகின்றது. உற்சவ மூர்த்தியை இந்நாளில் எழுந்தருளச் செய்து இந்நிகழ்வு நடைபெறுகின்றது.
3. தை மாதம் வரும் உத்திரத்தில் வருஷாபிஷேகமும் சிறப்பு ஆராதனையும் ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்று வருகின்றது.
4. செவ்வாய், வெள்ளி, பௌர்ணமி தினத்தன்று சிவகாமி அம்பாளுக்குச் சிறப்பு அபிடேகமும் ஆராதனையும் நடைபெறு கின்றன.
5. தேய்பிறை அஷ்டமியில் பைரவருக்கு ஒவ்வொரு மாதமும் அபிடேகமும் சிறப்பு ஆராதனையும் நடைபெறுகின்றது.

## ஸ்ரீவெங்கடாசலபதி கோயில் :

ஸ்ரீவெங்கடாசலபதி கோயிலில், வேதோக்தமான (வைகானஸ) முறைப்படி பூசைகள் நடைபெற்று வருகின்றன.

1. காலை (சிறுகால சந்தி), மாலை (சாயராட்ஷை) ஆகிய இரு வேளைகளிலும் பூசைகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு மாதமும் விசேசமான நாட்களுக்குச் சிறப்புப் பூசைகளும் ஆராதனைகளும் நடைபெற்று வருகின்றன.

2. சித்திரை மாதம் ஒன்றாந் தேதி ஸ்ரீவெங்கடாசலபதிக்கு திருமஞ்சனக்காப்புத் திருவிழா நடைபெறுகின்றது. விசேச அபிஷேகங்களும் ஆராதனைகளும் நடைபெறுகின்றன.

3. ஸ்ரீவெங்கடாசலபதிக்கு ஒவ்வொரு மாதமும் திருவோண நட்சத்திரத்தன்று திருமஞ்சனக் காப்பும் அபிஷேகமும்

ஆராதனையும் நடைபெறுகின்றன. திருவோண நட்சத்திரம் ஸ்ரீமகாவிஷ்ணுவின் நட்சத்திரம். 27 நட்சத்திரங்களில் 'திரு' என்ற சிறப்பு அடைமொழியுடன் அழைக்கப்படுவது திருவோணம் மற்றும் திருவாதிரையே ஆகும். திருவோண நட்சத்திரம் சந்திரனுடையது. சந்திரன் மனோகாரன். ஜோதிட சாஸ்திரத்தில் ரோஹிணி, ஹஸ்தம், திருவோணம், ரிஷபம் கடகம் ஆகியவை சந்திரனுக் குரியவை. ஜாதகத்தில் சந்திரனால் ஏற்படும் பிரச்சினைகளுக்கு அதாவது மனநிலைப் பாதிப்பு, திருமணத்தில் தடை, புத்திரப் பாக்கியம் மற்றும் கண் மார்பு வயிற்றுவலி போன்ற நோய்களுக்கு திருவோண நட்சத்திரத்தில் ஸ்ரீவெங்கடாசலபதியை வழிபாடு செய்வதன் மூலமாக மேன்மை அடைய முடியும். ஆழ்வார்களும் ஆச்சார்யர்களும் ஸ்ரீவெங்கடாசலபதியினிடமே சரணடைந் தார்கள் என்பதால் அவர்களைப்போல் முக்திநிலை அடைய ஸ்ரீவெங்கடாசலபதியினை வழிபாடு செய்ய வேண்டும். ஸ்ரீவெங்கடாசலபதிக்குத் திங்கள், புதன், சனிக்கிழமைகளில் வழிபாடு செய்வது உத்தமமானப் பலனைத் தரும். புதன் கிரகத்தின் அதிபதி ஸ்ரீமகாவிஷ்ணுவே ஆவார். ஜாதகத்தில் புதனால் ஏற்படும் கல்வி, ஞானம் சம்பந்தமானத் தடைகள் நீங்க ஸ்ரீவெங்கடாசல பதியை வழிபாடு செய்வதன் மூலமாகச் சிறப்புப் பலனை அடையலாம் என்பது நம்பிக்கையாக உள்ளது.

4. புரட்டாசி மாதம் ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீவெங்கடாசலபதிக்கு திருவோண நட்சத்திரத்தன்று காலையில் விசேஷஹோமங்களும் அகண்ட நாம ஜெபம் விசேச அபிஷேக ஆராதனைகளும் நடை பெறுகின்றன. மாலையில் ஆயிரத்தெட்டு அர்ச்சனைகளுடன் சிறப்புப் பூசைகள் செய்யப்படுகின்றன. புரட்டாசி மாதம் முழுவது மே விசேஷமானப் பூசைகளும் விரதங்களும் அனுஷ்டிக்கப் படுகின்றன. ஏனென்றால் புரட்டாசி மாதத்தில் முதல் பதினைந்து தினங்களும் மஹாளயபக்ஷம் எனப்படும் பித்ருக்களின் முன்னோடியாய் விசயங்களை ஆராயும் பொருட்டு பூசைகள் நடை பெறுகின்றன. பின்னர் வரும் பத்துத் தினங்களும் ப்ரஹமோற்-சவமும், நவராத்திரி எனப்படும் அம்பாள் விசயமானப் பூசைகள் நடைபெறுகின்றன. புரட்டாசி மாதத்தில் பூமியின் தட்பவெப்ப சீதோஷ்ண நிலையானது சூரியனுக்கு மிக அருகில் புதன்

இருப்பதால் தட்பவெப்பநிலை மிக குளிர்ச்சியாக இருக்கின்றது. ஆதலால்தான் புரட்டாசியில் பயிர்கள் அனைத்தும் தளிர்விட்டு பச்சை நிறமாகக் காணப்படுகின்றன. இம்மாதத்தின் அதிபதியாக ஸ்ரீமாகவிஷ்ணுவே உள்ளார். அவருடைய நட்சத்திரம் திருவோணம். புதனின் நிறம் பச்சை. அதனால் தான் ஸ்ரீமகாவிஷ்ணுவை பச்சைமால் மலைபோல் மேனி உடையவர் என்று பாடியுள்ளனர். இம்மாதத்தில் திருவோண நட்சத்திரத்தில் அர்ச்சாவதார மூர்த்தியாகத் திருக்கோயிலில் எழுந்தருளி யுள்ளார். இவ்வதாரத்தின் நோக்கம் மானிடர்களுக்கு அனுக் கிரகம் செய்வதே ஆகும். புரட்டாசியில் பரஹ்மானவர் ப்ரஹ்ம லோகத்திலிருந்துப் பூலோகத்தில் வந்துத் திருப்பதி ஏழுமலை ஸ்ரீவெங்கடாசலபதிக்கு உற்சவம் நடத்துவதானாலேயே ப்ரஹ்மோற்சவம் எனப்பட்டது.

5. மார்கழியில் வைகுண்ட ஏகாதேசி அன்று காலையில் அபிஷேக ஆராதனையும் சிறப்புத் திருமஞ்சனக் காப்பும் செய்யப்படு கின்றன. மாலையில் அகண்ட நாம தீப ஜெபமும் ஆயிரத்தெட்டு தீபங்களும் ஏற்றப்படுகின்றன. இத்தீபங்களில் ஒரு தீபம் ஏற்றினாலே நோய் மற்றும் எதிரி தொல்லைகள் நீங்கும். மாபெரும் யாகம் செய்தப் பலன் கிடைக்கும் என்று 18 புராணங்களும் தர்ம சாத்திரங்களும் கூறுகின்றன. இப்பூசை மாலை 5.45-க்கு நடத்தப் பெறுகின்றது. ஸ்ரீகிருஷ்ணர் மாதங்களில் மார்கழியாக இருப்பவர். அந்த மார்கழி மாதமே தேவர்களுக்கு அதிகாலைப் பொழுதாக அதாவது ப்ரஹ்ம முகூர்த்தமாக உள்ளது. மனிதர்களுக்கு அதுவே தட்சிணாயத்தின் கடைசி மாதமாக அமைந்துள்ளது. இம்மாதத்தில் தான் ஸ்ரீமகாவிஷ்ணு சயனத்திலிருந்து கண் விழித்துப் பார்ப்பதாகப் புராணங்கள் கூறுகின்றது. அன்றையத் தினமே ஸ்ரீவைகுண்ட ஏகாதசியாக அனுஷ்டிக்கப்படுகின்றது. இதன் மகிமை பத்மபுராணத்தில் காணப்படுகின்றது. தேவர்கள் அமிர்தம் கடைந்த நன்னாளாகக் கொண்டாடப்படுகின்றது.

6. தை மாதம் ஒன்றாம் தேதி பெருமாளுக்குத் திருமஞ்சனக் காப்புத் திருவிழா நடைபெறுகின்றது. விசேச அபிடேகங்களும் ஆராதனைகளும் நடைபெறுகின்றன.

## ஸ்ரீநரசிம்மர் :

1. ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் வளர்பிறையில் சதுர்த்தசியில் நரசிம்ம ஜெயந்தி விழா நடைபெறுகின்றது. காலையில் ஹோமங்களும், அபிஷேக ஆராதனைகளும் நடைபெறுகின்றன. மாலையில் ஸ்ரீநரசிம்மர் அவதாரம் எடுத்தப் பிரதோஷ காலத்தில் விசேசமாக பால் இளநீர் அபிஷேகமும் சந்தனக் காப்பு அலங்காரமும் ஆயிரத்தெட்டு (சகத்திரநாம) அர்ச்சனைகளும் நடைபெறுகின்றன.

2. புரட்டாசி மாதம் நான்கு சனிக்கிழமைகளிலும் அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. கும்பம் வைத்து பூசைசெய்து வேதங்கள் ஓதி அபிஷேக ஆராதனைகள் நடக்கின்றன. மாலையில் சந்தனக்காப்பும் ஆயிரத்தெட்டு அர்ச்சனைகளும் நடைபெறுகின்றன.

3. ஒவ்வொரு மாதமும் சுவாதி நட்சத்திரத்தன்று மாலை 4.30 மணிக்கு விசேச அபிஷேகங்களும் பூசைகளும் செய்யப்படுகின்றன.

4. சுவாதி நட்சத்திரத்தில் நரசிம்மரை தொடர்ந்து வழிபாடு செய்தால் ருணவிமோசனம் என்று கூறக்கூடியக் கடன் தொல்லைகள் நீங்கி செல்வச் செழிப்பும் வியாபார அபிவிருத்தியும் ஏற்படும் போன்ற நம்பிக்கைகள் மக்களிடத்தில் காணப்படுகின்றன.

5. நரசிம்மர் அவதாரம் எடுத்த காலம் மாலைப்பொழுது (பிரதோஷகாலம்) ஆதலால் சுவாதி நட்சத்திரத்தில் மாலை வேளையில் நரசிம்மரை வழிபாடு செய்வது நல்ல பலனைக் கொடுக்கும்.

6. மந்திர சாஸ்திரத்தில் பஞ்சமஹா மந்திரங்களின் (காயத்ரி பஞ்தசி) வரிசையில் நரசிம்மருடைய மந்திரம் மிக முக்கிய இடத்தை வகிக்கின்றது. மந்திரங்களுக்கெல்லாம் இராஜாவாக நரசிம்மருடைய மந்திரம் இருப்பதால் மந்த்ரராஜன் என்ற பெயரும் உண்டு.

7. ஜோதிட சாஸ்திரத்தில் 27 நட்சத்திரங்களில் மகா நட்சத்திரம் என்று கூறக்கூடிய நான்கு நட்சத்திரங்கள் மிருகசீர்ஷம், மகம், ஸ்வாதி, அனுசம் போன்றவை ஆகும். அதில் சுவாதி நட்சத்திரத்திற்குத் தோசம் கிடையாது என்பது நம்பிக்கையாகும்.

8. ஜாதகத்தில் இராகுவினால் ஏற்படும் தடைகள், பிரச்சினைகள் நீங்கி நன்மைகள் உண்டாகும். பில்லிசூன்யம், எதிரிகளின் தொல்லையிலிருந்து விடுபடலாம்.

9. நரசிம்மரை வழிபாடு செய்வதற்குச் செவ்வாய், புதன், சனிக் கிழமை ஆகிய நாட்கள் உகந்த நாட்களாகக் கூறப்பட்டுள்ளன.

10. கீழப்பாவூரில் உள்ள உக்ர நரசிம்மரை வழிபாடு செய்தால் 9 நரசிம்மரை வழிபட்டதற்குச் சமமானப் பலனை அடையலாம் என்று கூறப்படுகின்றது.

11. நரசிம்மரை வழிபாடு செய்தால் பரமேஸ்வர பார்வதியை வழிபாடு செய்த பலன் கிடைக்கின்றது. தமிழகத்தில் எங்கும் காண இயலாத அபூர்வமாக மேற்குப் பார்த்தத் திருமுகத்துடன் பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகின்றார்.

12. நரசிம்மர் தீர்த்தக் குளமாகியத் தெப்பக்குளத்தினை நோக்கி அமர்ந்திருக்கின்றார். அங்கு நீராடச் செல்லும் பொதுமக்கள் பகல் 12 மணிக்கும் மாலை 6 மணிக்கும் நீராடச்செல்லமாட்டார். ஏனென்றால் அவ்வேளைகளில் சிங்கம் கர்ஜிக்கும் சத்தம் கேட்கும் என்பது மக்கள் நம்பிக்கையாக உள்ளது.

பிரகலாதன், பராசரர், நாரதர், புண்டரீகர், ராகவேந்திரர் போன்ற மகான்களுக்கு ஞானசக்தி ஸ்ரீநரசிம்மர் அருளினால்தான் கிடைத்திருக்கின்றது. திருமங்கை ஆழ்வாருக்கு பல இடங்களில் சுவாமி நரசிம்மராகவே அருளிச் செய்துள்ளார். ஸ்ரீவைஷ்ணவ ஜோதிட சம்பிரதாயத்தில் ஞானகாரகன் கோதுவுக்கு அதிதேவதையே ஸ்ரீநரசிம்மர்தான். பில்லி, சூன்யம், ஏவல், ஆபிசாரம் போன்ற மனிதர் களின் மறைமுக சத்ரு உபாதைகளும் நேர்முகமான எதிரிகளினால் ஏற்படும் வாழ்வின் ஏற்றத் தாழ்வுகளை நிவர்த்தி செய்து இயங்கச் செய்வதும் ஸ்ரீநரசிம்மரே ஆவார்.

## ஸ்ரீநரசிம்ஹ புஷ்கரணி (தெப்பக்குள தீர்த்தமகிமை) :

ஒவ்வொரு திருக்கோவிலும் ஷேத்திரம் வருஷம், தீர்த்தம் போன்ற மூன்று விதத்திலும் சிறப்புப் பெறும். ஸ்ரீவைகானஸ பகவத் சாஸ்திரத்தில் ஒரு விஷ்ணு ஆலயத்தின் நான்கு திக்குகளிலும் நான்கு நதிகள் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அதன்படி ஒரு திருக்கோவிலின் கிழக்கே கங்கையாகவும் தெற்கே யமுனையாகவும், மேற்கே நர்மதையாகவும் வடக்கே சிந்து நதியாகவும் சொல்லப் பட்டுள்ளது. அவைகளுக்கு தியான ஸ்லோகம், மந்திரம், நான்கு நாமாக்களும் உள்ளன.

அதன்படி நமது ஸ்ரீவெங்கடாசலபதி திருக்கோவிலின் சன்னி தியில் மேற்குத் திசையில் தெப்பக்குளம் அமைந்துள்ளது. இதை நர்மதை என்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீநரசிம்மஹ புஷ்கரணியில நீராடினால் எந்த நோயும் வராது என்பது நம்பிக்கையாக உள்ளது. நாம் செய்யும் தீவினைகள் மறைந்து பாவத்திலிருந்து விடுபடலாம் என்பது ஐதீகமாக உள்ளது.

திருவாலீச்சுவரர், ஸ்ரீவெங்கடாசலபதி கோவிலில் தீர்த்தங் களாக கிணறுகளும் காணப்படுகின்றன. இவ்விரு கோயில்களுக்கும் சுரங்கப்பாதை ஒன்றும் உள்ளது.



தெப்பக்குளம்

# 8. அரசாங்க வரிகளும் நிலங்களும்

மக்கள் சமுதாயத்தை நல்வாழ்வு பெறச் செய்யும் அரசாங்கத்திற்கும் பொருள் மிகமிகத்தேவை என்பது சொல்லாமலேயே புரியும். குடிமக்களின் நன்மைக்கே அரசாங்கமெனில் அவ்வரசாங்கம் நடைபெறுவதற்கானச் செலவினங்களுக்கு அக்குடிகளிடமிருந்தே பொருள் பெறுதல் முறையேயாகும். குடிமக்களிடமிருந்து பெறும் பொருள் அரசாங்க வரி எனப்படும். இவ்வரி நிலவரி என்றும் பிறவரி என்றும் இருவகைக்குள் அடக்கலாம். ஓர் அரசன் தனக்குக் கீழ்ப்பட்டு ஆட்சி நடத்தும் அரசரிடம் ஆண்டுதோறும் வாங்கும் வரியே திரைப்பொருள் எனப்படும். இவற்றுள் நிலவரியே அரசாங்கத்தின் பெரும்பகுதி வருவாயாக இருந்துள்ளது. நிலவரி போன்றே தொழில் வரியும் வாங்கப்பட்டு வந்துள்ளது. வரிகள் மக்களின் சம்மதம் பெற்றே மன்னர்கள் வரிகளை விதித்திருக்கின்றார்கள். நிலவரி, கடமை, காணிக்கடன், இறை, தண்டி, வாரம், தந்திரவினியோகம் போன்ற வரிகள் வசூலிக்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் சோழர் பாண்டியர் காலத்தில் விதிக்கப்பட்ட வரிகளாகும். அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய நிலவரி, நிலத்திலிருந்து கிடைக்கும் தானியமாகவோ, பணமாகவோ அல்லது இரண்டுமாகவோ கொடுக்கப்பட்டிருகின்றன. இவற்றையெல்லாம் கிராம சபையைச் சேர்ந்தப் பஞ்சவார வாரியர் மூலமாக வசூல் செய்து அரசாங்கக் கருவூலத்திற்கு அனுப்புவது வழக்கமாக இருந்துள்ளது. தமிழ்நாட்டில் விளைபொருளை, தானியத்தை ஆறு பங்காக்கி, அதில் ஒரு பங்கே அரசாங்க வரியாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது என்பது தெரிகின்றது. மிகத் தொன்றுதொட்டு வரும் முறையாக இருந்து வந்துள்ளது. தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என ஐந்து பகுதிகளாகப் பொருள் செலவிடுவது பற்றியும் பேசப்படுவதால் ஆறாவது பகுதி அரசனுக்கு உரியதாக இருந்திருக்க வேண்டும். அரசாங்கம் வரிவசூல் செய்தது போலவே கிராம சபைகளும், வணிகர்குழுவும் வரி வசூலித்துள்ளன. கல்வெட்டுக்களில் 'தந்திர வினியோகம்', 'பேராயிரம்' போன்றச் சொற்கள் கல்வெட்டுச் சான்றுகளாக உள்ளன. வசூலிக்கப்பட்டப் பகுதிப் படைத் தலைவருக்கும் அரசாங்க அலுவலர்களுக்கும் தந்திரக்காரர்களுக்கும் ஆச்சாரியார்

களுக்கும் கோயில் பணிமக்களுக்கும் காரணத்தவர் களுக்கும் இறைவனின் நித்தல் நிமந்தத்துக்கும் பெரும்பான்மையாகக் கோயிலுக்கு மட்டுமே செலவு செய்யப்படுவதுமுண்டு.

## வரிகள் :

திருவாலீச்சுவரர், ஸ்ரீவெங்கடாசலபதி கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளில்.

1. கடமை
2. காணி (அ) காணிக்கடன்
3. தந்திர வினியோகம்
4. கடமை தண்டி (தண்டலில் கடமை)
5. தண்டம்
6. தண்டற்கடமை
7. இறை
8. பொதுவரி
9. குடி - குடிமை
10. ஆயம்
11. காராண்மை
12. அந்தராயம்
13. புரவு
14. தறியிறை
15. அச்சு
16. இறையிலி
17. மெய்யாட்சி

போன்ற 17 வகையான வரிகள் காணப்படுகின்றன. இதில் மெய்யாட்சி மட்டும் நிலத்தில் உரிமைப்பெறுவோரைக் குறிப்பிடுகின்றது.

## 1. கடமை :

ஊர்க்கணக்கிலும் நாட்டுக்கணக்கிலும் உள்ளபடி அரசு பெற்றுக்கொள்ளும் வரி. அரசு ஊர்நிலங்களை அளந்து அதன் விளை விற்கேற்ப உரிமையாளரிடம் வசூலிக்கும் வரியாகும். பேர்க்கடமை

என்றால் பிராமணர்கள் விவசாயிகளிடம் பெறும் உரிமை. புதிதாய்க் குடியேறுபவர்கள் தம் பெயரால் அரசர்க்குச் செலுத்தும் வரியாகும்.

"நிலங்களில் வந்த கடமை நாங்கள் இட்ட இரப்பேராயிரம்"
(வெங்.கோ.க.எண். 2)

"அமுதுபடி சாத்துப்படிக்கு எங்கள் சிவிதமாய்க் கடமை தண்டி"
(வெங்.கோ.க.எண். 7)

"கடமை ஆக இரண்டு மாக்காணி"
(வெங்.கோ.க.எண். 37(1)

"இன்நாயநாற்கு கடமையும்"
(திருவா.கோ.க.எண். 4)

"காசும் கடமையும் ----ன்று பாதி கடமை"
(திருவா.கோ.க.எண். 6)

"இன்நாயனாற்கு கடமையுமாக நாங்கள் குடுத்தமை"
(திருவா.கோ.க.எண். 12)

"லகாத்திலெய் கடமை யிறுப்பாராகவும்"
(திருவா.கோ.க.எண். 12)

"இந்நாயனாற்கு இவர் கடமை பயிறுக்கு
பயிறுக்கு, னு பொவித்து இந்நாயனாற்கு இக்கடமை"
(திருவா.கோ.க.எண். 12)

"----கு க்கடமையும் நாங்கள் -
----க் கடமை பரிதகால் விலை"
(திருவா.கோ.க.எண். 13)

## 2. காணி (காணிக்கடன்)

காணியாட்சி பெற்ற நிலங்களுக்குரிய நிலவரி. நிலத்தின் தரம் விளைவு ஆகியவற்றிற்கேற்ப அரசு விதிக்கும் வரி. இவ்வரி நெல்லாகவும் காசாகவும் அமையும். நிலவுரிமையாளர் அரசுக்குச் செலுத்தும் வரியாகும்.

## 3. தந்திர வினியோகம் :

தந்திரம் - படை காலாட்கள் கொண்டது. காலாட்படை, காலாட் படைக்குக் கொடுக்க வேண்டிய வர்த்தனைக் கட்டணம். இதற்கான வரி தந்திர வினியோகம் ஆகும். காலாட்படைக்காக மக்களிடம் வரி என்ற பெயரால் வரி விதித்துப் பெறுவர்.

"தலைவர் கூடநின்று இவள் வஸ்து வாங்கி
ஒடுக்கினமையில் இப்பொருள் தந்திர வினியொக"
(வெங்.கோ.க.எண். 9)

"பொருள் தந்திரவினியொகமாக வாங்கி"
(வெங்.கோ.க.எண். 34)

## 4. கடமை தண்டி (தண்டலில் கடமை)

அதிகாரிகள் வசூல் செய்யாமல் மக்கள் தாமே செலுத்தும் வரி (அந்தராயம்). அந்தராயம் என்பது உள்வரி. அரசுக்குத் தனிப்பட்ட முறைகளில் வரியாக வரும் வருமானம்.

"அமுதுபடி சாத்துப்படிக்கு எங்கள் சிதவிதமாய் கடமை தாண்டி" (வெங்.கோ.க.எண். 7)

## 5. தண்டம் :

அபராதமாக விதிக்கப்பட்ட வரி.
"ஸ்ரீபண்டாரத்துக்குத் தண்டத்துக்கு வாங்கி"
(வெங்.கோ.க.எண். 25)

## 6. தண்டற் கடமை :

வரி தண்டுவோர்க்கு இறுக்கும் கடமை. வரி தண்டுவோர் இறுக்கும் வரியாகவும் கொள்வர்.

"உட்பட்ட நிலங்களுக்கு நாங்கள் தண்டின தண்டற படியிலே" (வெங்.கோ.க.எண். 10)

## 7. இறை :

அரசாங்கத்திற்கு கொடுக்கும் வரி.
" - க்கு இறைப்படி நிலமொரு மாவுக்கு மாத்தா"
(திருவா.கோ.க.எண். 12)

## 8. பொதுவரி :

பொதுக்காரியங்களுக்காக ஊர்ச்சபையால் (அ) நாட்டுச் சபையால் விதிக்கப்படும் வரிகளும் உண்டு.

'பாகூர் நாட்டைச் சேர்ந்த இடையர்கள் அவர்களில் யாருக் கேனும் திருமணம் நடந்தால் அப்போது பெருமாள் கோயிலுக்கு ஓர் ஆடு கொடுப்பது என்றும், யாரேனும் அப்படிச் செய்யத் தவறினால் கோயில் அதிகாரிகள் அத்தவறு செய்தவரிடமிருந்து பலவந்தமாக இரண்டு ஆடுகளை எடுத்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய் தார்கள். இந்த விதி வெளியூரிலிருந்து வந்து புதிதாகக் குடியேறு வோருக்கும் பொருந்தும்' என்று சோழர்கால வரலாறு எனும் நூலில் ப. 471-ல் கூறப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## 9. குடி - குடிமை :

குடிமக்கள் அரசுக்குச் செலுத்தும் வரி.
"-----ாதித்தவரை குடி காராண்மை ஆ"
(திருவா.கோ.க.எண். 6)

## 10. ஆயம் :

நீர்நிலைப் பாசனத்திற்காகப் பயன்படுத்தச் செலுத்தும் வரி. ஆயன் மடைக்காகச் செலுத்தப்பட்ட வரியாகும். இம்மடையே இதற்குச் சான்றாகும்.

## 11. காராண்மை :

நிலத்தினை உழுது, பயிர் செய்து அரசுக்கு இறை செலுத்தும் வேளாண்மை குடிமை காராண்மை எனப்படும். பயிரிடும் உரிமை அதற்கான வரி.

"விலைப்பிரமாணம் பண்ணிக்குடுகுக் காராண்மையும்"
(திருவா.கோ.க.எண். 1)

"கினக்கு காராண்மையும் ஆகத்தர கல்லகநாடாழ்வாற்கு காராண்மையும்" (திருவா.கோ.க.எண். 4)

"க---- நாடாழ்வாற்கு காராணமை"
(திருவா.கோ.க.எண். 13)

"பட்டனிலம் இறைசுருக்கி பழம்பெர்தவித்து

இன்னாயனாற்கு காராண்மை மெய்யாச்சி"
(திருவா.கோ.க.எண். 1)

"இரண்டு மாவும் சந்திராதித்தவற் செல்வதாக காராண்மை மெய்யாட்சி உட்பட்ட"
(திருவா.கோ.க.எண். 3)

## 12. அந்தராயம் :

உள்வரி, அரசுக்குத் தனிப்பட்ட முறைகளில் வரியாக வரும் வருமானம் ஆகும்.

"அன்தராயம் உட்பட இறையிலி தெவதானமாக்கி"
(திருவா.கோ.க.எண். 1)

## 13. புரவு :

இறையெனும் காணிக்கடன் நீங்கிய ஊர்களில் அரசு பெறும் பிறவரிகள். புரவில் கார் என்று கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. குறுவையும் சம்பாவும் ஆகிய பருவக்கால நெற்பயிர்கள் விளையும்

இருபோகநிலம். இதனை கார்மறுநிலம் என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுவதனைக் காணலாம்.

"நாங்களிட்ட நிலனாவது எங்களூற் புரவில்கார் ஒரு பூவுக்கு"
(திருவா.கோ.க.எண். 9)

என்று கூறப்பட்டுள்ளது.

## 14. தறியிறை :

நெசவாளர் ஆடை நெய்யும் தறி ஒன்றிற்கு இந்த அளவொன்று அதிகாரிகள் இட்டும்பெறும் வரித்தொகை ஆகும்.

"ஒடுக்குவெனெனப்படை---- ளுக்
கண்டத்தறிவித்துதில்குறுங்க -"
(வெங்.கோ.க.எண். 36)

என்று சொல்லப்பட்டுள்ளது.

"நாடாழ்வார் கண்ட குளமும் பாவூம் காடும் இநாயநாற்கு
கடமை" (திருவா.கோ.க.எண். 4)

பாவூ என்பது தறியைக் காட்டுகின்றது.

## 15. அச்சு :

நிலத்தின் தரத்திற்கேற்ப விதிக்கப்பட்ட வரிக்காசு ஆகும்.

"அரைமா அச்சுந் தோட்டமாய்'..
மரம் உட்பட ஒருமா அச்சு இய்ப்பாராக"
(திருவா.கோ.க.எண். 8)

## 16. இறையிலி :

அரசுக்குக்குரிய இறைவரி நீக்கப் பெற்ற நிலம். நஞ்சை புஞ்சைகளின் விளைவுகளைக் கொண்டு பெறும் வரிகளையும் அப்பகுதிகளில் குடியிருப்போர் தரும் தேவை, குடிமை முதலிய வருவாய்களையும் அரசு நீக்குதல் இறையிலியாகும். இறையிலி, இறையிலி தன்மதானம், இறையிலி பிரமாணம், மடப்புற இறையிலி, பூவுக்கு இறையிலி, இறையிலி தேவதானம் என்றுப் பிரித்துக் கூறப்பட்டுள்ளதனைக் காண முடிகின்றது.

"-----மைதவளியும் மற்றும் எப்பேர்பட்டனவும்
அகப்பட இன் இன்னான்கெல்லைக்குள்ளு இறையிலி
தன்மதானமாக" (திருவா.கோ.க.எண். 5)

"சந்தான முதலியார் புஷ்பவனசிவற்கு
யநறான இறையிலி பிரமாணம் பண்ணிக்குடுத்த"
(திருவா.கோ.க.எண். 9)

"சைவப்பெருமாள் மடத்துக்கு மடப்புறவிறையிலியாக"
(திருவா.கோ.க.எண். 9)

"பசான ஒரு பூவுக்கு இறையிலி" (திருவா.கோ.க.எண். 9)

"மடப்புற இறையிலியாக" (திருவா.கோ.க.எண். 9)

"தர்மதான இறையிலி பிரமாணம் பண்ணிக் குடுத்த"
(திருவா.கோ.க.எண். 9)

"அன்தராயம் உட்பட இறையிலி தெவதானமக்கி"
(திருவா.கோ.க.எண். 1)

"அஞ்சுமாவும் இறையிலி தெவதானமாக"
(திருவா.கோ.க.எண். 1)

"காராண்மை மெய்யாட்சி உட்பட்ட இறையிலி தெவதானம்"
(திருவா.கோ.க.எண். 3)

## 17. மெய்யாட்சி :

மீயாட்சி என்பதன் வேறுவடிவம். நிலங்களின் குத்தகைப் பங்குரிமை நிலத்திற்கு உரிமையாளராகிய ஆட்சியாளர், தன்னிடம் குத்தகைக்குப் பெற்றுப் பயிரிடுபவரிடம் விளைவு போகத்தில் பங்குரிமை ஆட்சிப் பெறுதல் ஆட்சிமேல் ஆட்சி பெறுதலின் மீயாட்சி என்று கூறப்பட்டது.

"இரண்டு மாவும் சந்திராதித்தவர் செல்வதாக
காராண்மை மெய்யாட்சி உட்பட்ட" (திருவா.கோ.க.எண். (3)

## நில அளவைகள் :

அரசாங்க வருவாய்களுள் முதன்மையானது நிலவரியே யாகும். இவ்வரியை முறையாக வசூலிப்பதற்கு வரி செலுத்தப்படும் நிலத்தின் அளவு, நிலத்தின் தரம், நிலத்துக்கு உரியவர் எனும் இவை யாவும் தெளிவாகத் தெரிந்தால்தான் வரியை முறையாக வசூலித்து அரசாங்க வருவாயை கணக்கிட முடியும். விளைநிலங்கள், நன்செய் (நீர் நிலம்), புன்செய் (கொல்லை), நத்தம் (குடியிருப்புமனை), கரம்பு (தரிசு), காடு எனப்பிரித்து நில அளவைகள் கணக்கிடப்பட்டன. நிலத்தை அளந்து எல்லைகள் தெரியும்படி அவ்விடங்களில் கற்கள் நடுவது வழக்கம் என்பது பல கல்வெட்டுகளில் புலப்படுகின்றது. சிவன் கோயில் நிலங்களுக்குத் திரிசூலம் பொறிக்கப்பட்டக் கற்களும், திருமால் கோயில் நிலங்களுக்குத் திருவாழியாகியச் சக்கரம் பொறிக்கப்பெற்றக் கற்களும் சமண, பௌத்தப் பள்ளிகளைச் சேர்ந்த நிலங்களுக்கு முக்குடை குண்டிகை போன்றவைப் பொறிக்கப்பெற்ற கற்களும் எல்லைக் கற்களாக நடப்பட்டு இருந்தன என்பது புலப்படுகின்றது.

## 1. மா

மா - 1/20 வேலி அல்லது 1/20 பட்டி. ஒரு மா நிலம். இந்நில அளவு பதினாறு சாண் கோலால் நூறு கொண்டது. ஒரு மாவாகப் பெரும்பான்மையும் இருந்துள்ளதாயினும் நிலத்தின் தரம் விளைவு ஆகியவற்றிற்கேற்ப மாறுபட்டுள்ளது.

"இருமா வரையும் குற்றிம்மை ரு ஒரு மாவும்
ஆக நிலமும் நீர்வார்...." (வெங்.கோ.க.எண். 1)

"விலை கொண்ட நிலம் இரண்டு மா" (வெங்.கோ.க.எண். 2)

"குடபள்ள நிலம் ரூ ... ஒரு மாவும்" (வெங்.கோ.க.எண். 3)

"...ட நிலம் இரண்டு மா வரை" (வெங்.கோ.க.எண். 15)

"...லெ நிலம் இருமாவரையும் குற்றிமடைநிலம்..."
(வெங்.கோ.க.எண். 13)

"- லை கொண்டநிலமா காணியும்" (வெங்.கோ.க.எண். 18)

"பள்ளி நிலமொரு மா" (வெங்.கோ.க.எண். 22)

"- வராயன் மடைமுன் நிலம் இரண்டு மா"
(வெங்.கோ.க.எண். 4(1)

"மாவும் கோழித்தோட்டம் காட" (வெங்.கோ.க.எண். 31)

" - கடமை ஆக இரண்டுமா மாகாணியும்"
(வெங்.கோ.க.எண். 37(1)

" - இ நிலம் இரண்டு மாவும்"
(திருவா.கோ.க.எண். 3)

"பள்ளி கொண்டாழ்வாருக்கு இந்நிலத்தில் ஐஞ்சுமாவும்"
(திருவா.கோ.க.எண். 1)

"க்கு எல்லை கீழ்மேல் மூன்றுமாநிலம்"
(திருவா.கோ.க.எண். 6)

" - ங் கொண்டு தென்வடல் மூன்றுமா"
(திருவா.கோ.க.எண். 6)

"க்கு இறைப்படி நிலமொருமாவுக்கு மாத்தா"
(திருவா.கோ.க.எண்.12)

"நிலமுக்கல முக்காணி ஆறுமாவும் ஒருகூறும்"
(திருவா.கோ.க.எண்.12)

" - க்கலன் இருமா வரை" (திருவா.கோ.க.எண்.13)

## 2. கலம் :

மரக்கலம், ஒருகலம், முக்கலம் - முகத்தல் அளவு. கலவரை (கலம்அரை-ஒன்றரை) - ஒன்றரை கலம். மூன்று தூணி முகத்தல் அளவு கொண்டது ஒரு கலம்.

"முக்கலமும் ஆறு" (திருவா.கோ.க.எண். 6)

"நில முக்கல முக்காணி" (திருவா.கோ.க.எண்.12)
"இருகலமும்" (திருவா.கோ.க.எண். 12)

" - கல்கலன் இருமா வரை" (திருவா.கோ.க.எண். 13)

## 3. பூ :

பூ என்பது ஒரு பருவச் சாகுபடியாகும். இருபூ என்பது ஆண்டொன்றில் இரண்டு போக நெல் விளைவு ஆகும். கார், சம்பா இரண்டுமாகும்.

"…. ஒரு பூவுக்கு இட்ட நிலன்" (திருவா.கோ.க.எண். 9)

"பசான ஒரு பூவுக்கு இறையிலி" (திருவா.கோ.க.எண். 9)

## 4. மாத்தால் :

மா ஒன்றுக்கு இவ்வளவு என்று நெல் அளத்தல்.
" - சென்ற நிலம் பயிர்பாத்து முதற்கூடின் நிலத்துக்கு மாத்தாலி" (திருவா.கோ.க.எண். 12)

" - க்கு இறைப்படி நிலமொரு மாவுக்கு மாத்தா"
(திருவா.கோ.க.எண். 12)

## 5. குழி :

நில அளவை பன்னிரண்டடி சதுரப்பரப்புடைய நிலம் ஒரு குழியாகும். நூறு குழி கொண்டது ஒரு மா - நிலம். இக்குழியளவை நாடுகள்தோறும் நிலத்தின் தரத்திற்கேற்ப மாறுபட்டுள்ளது.

## 6. வேலி :

நிலத்தின் அளவைப் பெயராகும். ஒரு வேலி என்பது 20 மா ஆகும்.

## 7. குறுணி :

முகத்தளவையில் எட்டு நாழி கொண்டது, ஒரு குறுணி அளவையாகும். குறுணி, மரக்கால் என்றும் அழைக்கப்படும். எட்டு நாழி ஒரு குறுணி. பன்னிரண்டு குறுணி ஒரு கலம் ஆகும்.

## 8. காணி :

அளவைப் பெயராகும். 100 குழி அல்லது 1/80 வேலி.

" - லை கொண்ட நில மா காணியும்" (வெங்.கோ.க.எண். 18)

"காணியும் பொன்ன" (வெங்.கோ.க.எண். 19)

"மா காணியும்" (வெங்.கோ.க.எண்.37(1)

"நில முக்கல முக்காணி" (திருவா.கோ.க.எண்.12)

## 9. கூறு :

பாதி என்று பொருள். பங்கீட்டுக் கொடுத்தல் ஆகும்.

அளவைகளின் கலவையாகவும் கல்வெட்டுகள் காணப்படு கின்றன.

1. " - ண்ணாறு நாலாஞ் செய்க்குறெ நிலன்
   முக்காணி அரெக்காணி முந்திரிகையும் "'..
2. "....பசான ஒரு பூவுக்கு இட்டநிலன் தெற்கு கி -
3. ழக்கு முதல் கண்ணாற்று நாலாஞ் செய்யின் கிழக்குகடெய்
4. நிலன் அரெமா அரைக்காணி முந்திரிகெக் கிழரெயும்
5. அஞ்சாஞ்செய் நிலன் முக்காணி அரைக்காணி முந்திரிகெ -
6. ஆறாஞ் செய்நிலன் முக்காணி அரெக்காணி முந்திரிகெ -
7. - கயும் ஏழாஞ்செயி மெற்கடெயநிலன் காணி அரெக
8. காணி முந்திரிகெக் கிழரெயும் ஆகநிலன் மூன்றுமாமு -
9. முந்திரிகெயும் இத்தான... ப்பசானத்துக்குப் பயி ...
10. அரைக்காணி முந்திரிகெயு -

11. பசான ஒரு பூவுக்கு இறையிலி
12. நிலம் அஞ்சுமாவும் ஆக நிலம்
13. ஆறுமா முக்காணியும் அரெைகா -
14. ணிமுந்திரிகெயில் காருக்கிறெயிலும்
15. வே*லி நிலம் ஒரு மாமுக்காணி அரைக்காணி முந்திரிகெ -
16. பசானத்துக்கு இறையிலி நிலம் அஞ்சு மா
17. வும் ஆக நிலம் ஆறுமா முக்காணி அரெைக்காணி
18. முந்திரிகையும் மடபுறயிறெயிலியாக .... (திருவா.கோ.க.எண். 9)

என்று அளவைகளின் பெயர்களை அடுக்கிக் கூறிக் கணக்கீடு செய்யும் முறையினை மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 7-வது ஆண்டு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

திருவாலீச்சுவரர் கோவிலில் காணப்படும் மற்றொரு கல்வெட்டிலும்,

1. - ம்படி பயிர்பாத்து பயிர்கொண்ட நிலத்து
2. - க்கு இறைப்படி நிலமொரு மாவுக்கு மாத்தா
3. - நில முக்கலமுக்காணி ஆறு மாவும் ஒரு கூறும் இருகலமும்
4. - காசு நாலு மாவும் இரண்டு கூறுமாக இம்மூன்று கூற் -
5. - ல்காத்திலெய் கடமை யிறுப்பாராகவும் புன்செய்பயிற் -
6. - சென்ற நிலம் பயிர்பாத்து முதற்கூடின் நிலத்துக்கு மாத்தாய் -
7. -அரைமா அச்சுந் தொட்டமாய்ப்ப் பிரான் நிலத்துக்கு மெ -
8. - மரம் உட்பட ஒரு மா அச்சு இய்ப்பாராக இவூரும்மி -

(திருவா.கோ.க.எண். 12)

என்று அளவைகளின் கலவையாக அளவைகளை எடுத்துரைக்கின்றது.

## நில அளவு வாய்ப்பாடு :

| | | |
|---|---|---|
| முந்திரி | - | 1/320 வேலி (நிலம்) |
| 1 வேலி | - | 20 மா |
| 2 முந்திரி | - | ½ காணி (1/60) |
| 3 முந்திரி | - | ½ காணி 1 முந்திரி (3/320) |
| 4 முந்திரி + இரு அரைக்காணி | - | 1 காணி (1/80) |
| 2 காணி | - | ½ மா (1/40) |

| | |
|---|---|
| 3 காணி | - முக்காணி - ½ மா + காணி 1/40 |
| 4 காணி | - 1 மா (1/20) |
| 5 காணி | - மாகாணி (வீசம் 1/16) |
| 5 மா | - ¼ வேலி நிலம் ( ¼ ) |
| 10 மா | - ½ வேலி நிலம் ( ½ ) |
| 20 மா | - 1 வேலி |
| காணி | - 100 குழி (அ) 1/80 வேலி |
| குறுணி | - மரக்கால் |
| தூணி | - 4 மரக்கால் |
| 3 தூணி | - 1 கலம் |
| 8 நாழி | - 1 மரக்கால் |
| 100 குழி | - 1 மா |
| 8 காணி | - 2 மா |
| ஒரு மா | - ஒரு வேலி நிலத்தில் 1/20 பங்கான அளவுடைய நிலம். 100 குழி பரப்புடைய நிலம். |
| இருமா | - 2/40 ஒரு வேலி நிலத்தில் பங்கான அளவுடைய நிலம். 200 குழி பரப்புடைய நிலம். |
| இருபூ | - ஆண்டொன்றில் இரண்டு போக நெல் விளைவு. கார், சம்பா இரண்டுமாகும். |
| ஒருபூ | - ஒரு பருவச் சாகுபடி |
| காடு | - 4 அணைப்பு அளவுநிலம் |
| செய் | - 256 குழி அல்லது 1 ஏக்கர் |
| பட்டி | - 800 அல்லது 1000 குழி நிலம் |
| மா | - 1/20 வேலி அல்லது 1/20 பட்டி |
| கூறு | - பாதி |
| வேலி | - 1 |

## நிலங்கள் :

சோழர்காலத்தில் நிலங்களை தேவதானம், திருவிடையாட்டம், பள்ளிச்சந்தம், அகரப்பற்று, மடப்புறம், சிவிதப்பற்று, படைப்பற்று, அன்னியப்பற்று என்று நிலங்களைப் பிரித்து உள்ளனர்.

கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப்பெறும் நிலம் தேவதானம் என்றும், விஷ்ணு கோயில்களுக்கு அளிக்கப்பெறும் நிலம் திருவிடையாட்டம் என்றும் சமண, பௌத்த கோயில்களுக்கு அளிக்கப்படும் நிலம் பள்ளிச்சந்தம் என்றும் அரசர்களால் இறையிலி யாக மனையளிக்கப் பெற்றுக் குடியேறியப் பிராமணர்களுக்கு இறையிலியாக அளிக்கப்பெற்ற விளைநிலம் அகரப்பற்று, பிரம்மதேயம் என்றும் மடங்களுக்கும் சமயச் சார்புடைய யோகியர்க்கும் இறையிலி யாக விடப்பட்ட நிலம் மடப்புறம் என்றும் நிலையான வாழ்க்கைக்கு வருவாய் நிலத்தினை சீவிதப்பற்று என்றும் படைப்பற்றாகியப் படை வீரர் அனுபோகத்தால் நிலத்தினை வன்னியப்பற்று என்றும் படையின் அனுபோகத்திலுள்ள நிலம் நாட்டின் காவலுக்கானப் படைகள் தங்கியிருக்கும் இடத்தைப் படைப்பற்று என்றும் வழங்கப்பட்டுள்ளன.

பாண்டியரது ஆட்சிக்காலத்தில், சிவன் கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப்பட்ட நிலம் தேவதானம் என்றும் திருமால் கோயில்களுக்கு அளிக்கப் பெற்ற நிலம் திருவிடையாட்டம் என்றும் சைன பௌத்தக் கோயில்களுக்கு அளிக்கப் பெற்ற நிலம் பள்ளிச்சந்தம் என்றும் பார்ப்பனர்க்கு அளிக்கப்பெற்றது பிரமதேயம் பட்டவிருத்தி என்றும் மடங்களுக்கு விடப்பட்டது மடப்புறம் என்றும் புலவர்களுக்கு அளிக்கப்பட்டது புலவர் முற்றூட்டு என்றும் சோதிடர் கட்கு அளிக்கப்பெற்றது கணிமுற்றூட்டு என்றும் வழங்கப்பட்டுள்ளன.

## கல்வெட்டுக்கள் சுட்டும் நிலங்கள் :

திருவாலீச்சுவரர் மற்றும் ஸ்ரீவெங்கடசலபதி கோயில்களில் காணப்படும் கல்வெட்டுக்கள்

1. தண்டி நிலம்
2. மடப்புறம்
3. பள்ளி நிலம்
4. கரை நிலம்
5. புன்செய் நிலம்
6. நன்செய் நிலம்
7. பொலிவிழந்த நிலம்
8. காடேற்று நிலம்

9. காணி நிலம்
10. பற்று நிலம்
11. பட்டிநிலம்
12. நீர்நிலம்
13. பிரான் நிலம்
14. பயிர்பார்த்து பயிர் கொண்ட நிலம்
15. செய்நிலன்
16. கோழித்தோட்டம்
17. இறையிலி நிலம்
18. திருவிடையாட்டம்
19. தேவதானம்
20. பூதானம்
21. தன்மதானம்

போன்ற 21 வகையான நிலங்களைப் பற்றிப் பேசுகின்றன. இவற்றில் 15 நிலங்களின் பிரிவுகளையும் 5 தானவகைகளையும் எடுத்துக்காட்டு கின்றன.

## 1. தண்டி நிலம் :

பல்லக்குச் சுமப்பவர்களுக்காக வரியில்லாமல் விடப்பட்ட நிலம் ஆகும். ஸ்ரீ வேங்கடசலபதி கோயில்களுக்குப் பல்லக்குச் சுமப் பவர்களுக்கு ஊதியமாக வரியில்லாமல் கொடுத்த நிலமாகும்.

"நிலமும் அறிஞ்சிகைப் பிராட்டி சதுர்வேதி
காணியும் பொன்மைடத்தார் பலாமற்
கொண்டபடியெய் திருவாய்க்குலத்துப்பின்
ஒரு நறுங்காசுமி----ந்து வருவானக (ரூ)பய"

(வெங்.கோ.க. எ. 8)

என்று கூறப்பட்டுள்ளது. திருவாய்க்குலத்துப்பிள்ளைக்குப் பல்லக்குச் சுமந்து வருபவனுக்கு காசும், காணிநிலமும் கொடுக்கப்பட்டதாக உள்ளது. இந்நிலம் தண்டிநிலம் என்று அழைக்கப்படுகின்றது.

## 2. மடப்புறம் :

திருமால் கோயில் வழிப்பாட்டின்போது சேவிக்கும் அடிய ராகியத் தாதர்க்கு வாழ்விடமும் இறையிலி நிலமும் அளிப்பதாகும்.

இவ்வற நிவந்தமும் மடப்புறமென்றே குறிப்பதாகும். மடங்களுக்கும் சமயச் சார்புடைய யோகியர்க்கும் இறையிலியாக விடப்பெற்ற நிலங்களும் வருவாய்களும் ஆகும். மடங்களுக்கு விடப்பட்ட நிலம் மடப்புறம் ஆகும். குறுங்கானத்திலுள்ள, கீழப்பாவூர் குஞ்சிரியானத் திருமடத்திற்கு நிலம் கொடுக்கப்பட்டதைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

சமயச் சார்புடைய மடங்களுக்கும் அம்மடத்திலிருந்து சமயத் தலைமைப் புரியும் பெரியோர்கட்கும் அனுபோகமாக அளிக்கப்பெறும் இறையிலி நிலமாகும். கல்வெட்டுக்களில் மடப்புறம், மடப்புற இறையிலி என்று காணப்படுகின்றது.

"-வும் மெலை மடைப்புர" (வெங்.கோ.க.எண். 16)

"சைவ பெருமாள் மடத்துக்கு மடப்புறவிறையிலியாக"
(திருவா.கோ.க.எண். 9)

"ஆகநிலம் ஆறுமாமுக்காணி அரைக்காணி முந்திரிகையும்
மடப்புறயிறையிலியாக" (திருவா.கோ.க.எண். 9)

"- மும் இம்மடத்துக்குத் தெக்கு ... மடப்புற -"
(திருவா.கோ.க.எண்.10)

## 3. பள்ளி நிலம் :

சமண பௌத்தர் கோயில்களுக்காக வரியில்லாமல் விடப்பட்ட நிலம் அல்லது கிராமம். 'பள்ளநிலம்', 'பள்ளிச்சந்தம்', 'பள்ளிச்ச' என்று கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. கீழப்பாவூரில் சமண பௌத்தக் கோயில்கள் இருந்திருக்க வேண்டும். அது சமணம் சார்ந்ததா பௌத்தம் சார்ந்ததா என்பது பற்றியக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கவில்லை.

"நீர்வார்த்துக்குடுத்து குடபள்ளரு ஒரு
மாவும் பள்ளிச்ச செய்வொமும்" (வெங்.கோ.க.எண். 3)

"செய்வார்களொமிந்த......ன்...கெல்லையாவது கீழெ......ப்
பள்ளிநிலமொரு மா" (வெங்.கோ.க.எண். 22)

## 4. கரை நிலம் :

கரை நிலம் அவ்வப்போது ஊராரிடம் மாற்றி மாற்றி அணுபோகத்துக் கூறுபோட்டு ஒப்படைக்கப்படும் நிலம். தடிவழி வாரியமாக நிலக் கணக்கதிகாரிகளால் அளந்து பிரித்துக் கரையிடப் பட்ட விளைநிலமாகும். கல்வெட்டுகளில் 'கரைநிலம்' என்றே பயன் படுத்தப்பட்டுள்ளது. கரைநிலத்தினை எல்லையாகக் கொண்டு நிலதானம் செய்யப்பட்டதைக் கல்வெட்டுச் செய்திகள் தெரிவிக் கின்றன.

"எல்லை கரைநிலத்துக்கு வடக்கும்" (வெங்.கோ.க.எண். 3)

"ன் னெல்லை கரைநிலத்துக்கு வடக்குமெலெ"
(வெங்.கோ.க.எண். 14)

"றச்சி எல்லைக்கு வடக்கும் மெலெல்லை கரைநில"
(வெங்.கோ.க.எண். 14)

## 5. புன்செய் நிலம் :

கொல்லை நிலம்

"குளமும் நிர்நிலமும் புன்செயும் நத்தமும்"
(திருவா.கோ.க.எண். 5)

"நத்தப்பாரும் நன்செய் புன்செய்யும்"
(திருவா.கோ.க.எண். 12)

"புன்செய்பயிற் சென்ற நிலம்" (திருவா.கோ.க.எண். 12)

## 6. நன்செய் நிலம் :

நீர்ப்பாசனம் அமைந்த நன்செய்நிலம்.

"நத்தப்பாழும் நன்செய்புன்செய்யும்"
(திருவா.கோ.க.எண். 12)

## 7. பொலிவிழந்த நிலம் :

வட்டி முதல் கெடாமல் பெறும் வருவாய் வீதம். பொலியூட்டு-பொலிசையூட்டு அடிப்படையில் பார்த்தால் நிரந்தரமான வருவாயை அளிப்பதற்காக ஸ்தாவர சொத்துக்கள் மீது நீர்நிலைகளைச் செப்பனிட்டோ முதலை வட்டிக்கு விடுவது வீதம் 'பொளிவிழந்த விழுக்காடு' என்று கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. நிலத்தினை வட்டிக்கும் விட்டிருப்பது தெரிகின்றது.

"விலை பொளிவிழந்த விழுக்காட்டுக்கு வடக்கு"
(வெங்.கோ.க.எண். 9)

## 8. காடேற்று நிலம் :

காடுகளைப் பராபரிப்பதற்காக இருக்கும் நிலம். கார்மறு நிலமாகப் பார்த்தால் இருபோக சாகுபடிநிலம். காடு என்பது இடு காட்டையும் குறிக்கும். கல்வெட்டுகளில் 'காடேற்று' என்று குறிப்பிடப் பட்டுள்ளதனைக் காண முடிகின்றது.

"காடேற்றுக்கு பொருநா" (வெங்.கோ.க.எண். 11)

"காடேற்றுக்கு பெருநான்" (வெங்.கோ.க.எண். 1)

## 9. காணி நிலம் :

வாரிசு உரிமை நிலம். கோயில்களிலும் அறநிலையங்களிலும் பணி செய்வார்க்கு அரசோ கிராமசபையோ நிலையாக வழிவழித் தொடர்ந்து ஊழியம் செய்து பரம்பரை உரிமையாக அனுபவிக்கக் கொடுக்கும் நிலம். இதனைக் காணியாட்சி என்றும் கூறப்பெறும். கோயில் அலுவல்களைச் செய்வோருக்கும் கோயில் உபயோகத்திற் கானப் பொருள்களைக் கொடுப்போருக்கும் அவ்வூர்ச்சபை-யாருடையச் சம்மதத்துடன் சீவிதம் அல்லது காணியாக வழங்கப்பட்டு வந்துள்ளது.

'நிலமும் அறிஞ்சிகைப் பிராட்டி சதுர்வெதிகாணியும்'
(வெங்.கோ.க.எண். 8)

'.......லை கொண்ட நிலம் மா காணியும'
(வெங்.கோ.க.எண். 18)

'---- ராத்துக்குத் தன்மதானமாகப்ப -
---- வடக்கும் மேலெல்லை அருச்சுதபட் -
---- கடமை ஆக இரண்டு மாக்காணியு -
---- சாரியனென் - ' (வெங்.கோ.க.எண். 37)

## 10. பற்றுநிலம் :

உரிய நிலம். உரிமை நிலம். இச்சொல் அடுக்கு, சார்பு, உரிமைபெறும் ஊதியம், பதிந்தக் கணக்கு என்னும் பொருள்களிலும் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளது.

"யாரில் விலைகொண்ட நிலம் இரண்டு மாவும்"
(வெங்.கோ.க.எண். 2)

## 11. பட்டிநிலம் :

பட்டிநிலம் என்பது பதினாறு சாண்கோலால் (12அடி கோலால்) ஐம்பது குழிக் கொண்டது ஒரு மாவாக ஆயிரங்குழிக் கொண்டது ஒரு பட்டிநிலமாகும் (இக்கால அளவுப்படி அரைவேலிக்குரிய 10 மா நிலமாகும்). பட்டி நில அளவில் பல தடிகள் அடங்கும் (12 அடி சதுரம் - 1 குழி). கல்வெட்டுகளில் காடேற்று நிலத்திற்கு அருகில் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. காடேற்று நிலம் இடுகாட்டைக் குறிப்பதாகவும் உள்ளதால் இந்நிலத்திற்கு அருகில் பட்டி நிலத்தினைத் தானம் செய்துள்ளனர் என்பதனை அவ்விடத்திற்கு 'அபட்டி', 'அப்பட்டி', 'ஊருணி' என்றுஅழைப்பதிலிருந்து விளங்குகின்றது.

## 12. நீர்நிலம் :

நன்செய் நிலம். இயல்பாக ஆற்று நீர்ப்பாசனம் பெறும் நிலம்.

"இன்னான்கெல்லைக்குட்பட்ட குளமும் நீர்நிலமும்"
(திருவா.கோ.க.எண். 5)

## 13. பிரான்நிலம் :

பிரான் - தலைவன். சிவன், திருமால் என்று பொருள்படும். அவர்களுக்கான நிலம் பிரான்நிலம் என்று கல்வெட்டுக் கூறுகின்றது.

"அரைமா அச்சுந் தொட்டமாய்ப் பிரான்நிலத்துக்கு மெ"
(வெங்.கோ.க.எண். 3)

"பிறான் மெலூரில் விலைகொண் -" (வெங்.கோ.க.எண். 35)

## 14. பயிர்பார்த்து பயிர் கொண்ட நிலம் :

நெற்பயிரின் விளைவின் தரம் பார்த்து அதன் மகசூலின் அளவினை மதிப்பீடு செய்துக் கொண்ட நிலமாகும்.

"பயிர்...பாத்து" (திருவா.கோ.க.எண். 6)

"யில் இந்நாயனாற்று இவர்கடமை பயிறுக்கு...ம்படி பயிர்பாத்து பயிர்கொண்டநிலத்து" (திருவா.கோ.க.எண். 12)

## 15. செய்நிலம் :

திருத்தம் செய்தநிலம் நன்செய் நிலம். அஞ்சாஞ் செய்நிலன், ஆறாஞ் செய்நிலன், ஏழாஞ்செய்நிலன் என்று (திருவா.கோ.க.எண்.9) குறிப்பிடுகின்றது.

## 16. கோழித்தோட்டம் :

கோழிமன் - உறையூர்க்கு அரசன் சோழன் என்று பொருளாகும். தோட்டம் - மரங்கள் வளர்ப்பதற்குத் தகுதியான நிலமாகும். மா, பலா, வாழை முதலியப் பயன் தரும் மரங்கள் வளர்க்கப்பட்டத் தோட்டத்தின் ஒரு பகுதியாகும். கீழப்பாவூரில் உள்ள தோட்டத்தின் பெயர் கோழித் தோட்டமாகும். கோழி என்பது இராசஇராசனின் கோழிப்போரைக் குறிப்பதாகும்.

"பொழிக்கு கிழக்கு வடவெ......மாவும் கோழித்தோட்டம் காட....." (வெங்.கோ.க.எண். 31)

## 17. இறையிலி நிலம் :

ஊர்நத்தம், கோயில்கள், குளங்கள் இவற்றை சார்ந்து வழிகொண்டு சென்ற வாய்க்கால்கள், பறைச்சேரி, கம்மாளச்சேரி, சுடுகாடு இவைகள் நிலையான இறையிலி நிலங்களாகும். இதில் ஊர்நத்தம் என்பதனுள் பார்ப்பனச்சேரியும் அடங்கும். அரசுக்குரிய இறைவரி நீக்கப்பெற்ற நிலம். நஞ்சை புஞ்சைகளின் விளைவுகளைக் கொண்டு பெறும் வரிகளையும் அப்பகுதிகளில் குடியிருப்பார் தரும் தேவை, குடிமை முதலிய வருவாய்களையும் அரசு நீக்குதல் இறையிலியாகும்.

"பசானத்துக்கு இறையிலி நிலம் அஞ்சுமா"
(திருவா.கோ.க.எண். 9)

## 18. திருவிடையாட்டம் :

தேவதானமானியம் கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப் பெறும் நிலமாகும். இது சைவ வைணவ கோயில்களுக்குப் பொது வானதாகும். விஷ்ணு கோயில்களுக்கு அளிக்கப்பெறும் தேவதான மானியம் அல்லது கிராமம் ஆகும். கல்வெட்டுக்களில் 'திருவிடை யாட்டம்' 'திருவிடைநிலம்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

"திரு இடையாட்டம் இட்டுகுடுத்த நிலம்"
(வெங்.கோ.க.எண். 1)

"தண்டநாயகஞ்....டையாட்டமிட்டுக் குடுத்தநிலம்"
(வெங்.கோ.க.எண். 11)

"-யாட்டமுடைத்துக்கு" (வெங்.கோ.க.எண். 19)

"-மந்தத்துக்கு முன்பு திருவுடையா......"
(வெங்.கோ.க.எண். 31)

"ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகொச்ச -
- டையாட்டம் மரான்தில்லை - (வெங்.கோ.க.எண். 38)

- டி ஸம்மதித்து திருவிடை -" (வெங்.கோ.க.எண். 15)

## 19. தேவதானம் :

கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப்பெறும் நிலம். இது சைவ, வைணவக் கோயில்களுக்குப் பொதுவானது.

'- நாயனாற்கு தெவதானமாகவிற் விலைபிரமாணம் பண்ணி'
(திருவா.கோ.க.எண். 6)

'அன்தராயம் உட்பட இறையிலி தெவதானமாக்கி'
(திருவா.கோ.க.எண். 1)

'அஞ்சுமாவும் இறையிலி தெவதானமாக'
(திருவா.கோ.க.எண். 1)

'காராண்மை மெய்யாட்சி உட்பட்ட இறையிலி தெவதானம்'
(திருவா.கோ.க.எண். 3)

'மேற்கெல்லை திருக்குற்றால உடைய நாயநார் தெவதானம் ஆன' (திருவா.கோ.க.எண். 4)

## 20. பூதானம் :

வேதம் ஓதும் பிராமணர்களுக்குத் தானம் கொடுப்பதில் அதிலும் பூதானம் கொடுப்பதில் அக்கால மக்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அதனால் நாட்டில் பல பகுதிகளிலும் பிராமணர்கள் குடியிருப்புகள் ஏற்பட்டு அந்தந்த ஊரிலிருந்த ஸ்தல அரசாங்க அமைப்பு அதிகாரிகளின் மூலம் தங்கள் செல்வாக்கை அதிகரித்துக் கொண்டனர். பூதானம் கொடுக்கும்போது நிலத்தை விலைக்கு வாங்கிக் கொடுப்பதுமுண்டு. அப்படி அடிக்கடி நிலம் வாங்கும் போது நிலத்தின் விலையும் அதிகரித்தது. விற்கப்பட்ட நிலம், ஊர்ப் பொது நிலமாக இருந்தால் அதில் வந்தப் பணத்தைக் கொண்டு மக்களின் பொது நன்மைக்கானக் காரியங்கள் செய்யப்பட்டன.

'நாங்களிட்ட நிலனாவது எங்கற் புரவில்கார்
ஒரு பூவுக்குப் பயிரெற்றி கொள்ள'

(திருவா.கோ.க.எண். 9)

## 21. தன்மதானம் :

உண்மைநெறித் தவறாமல் நியாயமான முறையில் நிலம் தானம் செய்தல் ஆகும்.

'- ராத்துக்குத் தன்மதானமாகப்ப -' (வெங்.கோ.க.எண். 37(1)

'இறையிலி தன்மதானமாக' (திருவா.கோ.க.எண். 5)

'தன்மதானமாக தண்டெஸ்வரவிலையாக'

(திருவா.கோ.க.எண். 5)

## நீர்நிலைகள் :

கீழப்பாவூர், திருநெல்வேலி மாவட்டத்தில் வேளாண்மைக்கு முதலிடம் பெற்ற ஊராகும். ஆற்றுவளம் இல்லாத இடத்தில் மன்னன் ஏரி, குளம் முதலியப் பெருநீர்நிலைகளை ஏற்படுத்தியுள்ளான். அதனைப் பாதுகாத்தும் அதிலிருந்து விளைநிலங்களுக்கு நீர்பாய்ச்சப்பட்டு வந்ததைப் பல கல்வெட்டுகள் கூறுகின்றன. உழவுத் தொழிலை வளர்க்க அக்காலத்தில் அமைக்கப்பட்ட நீர்நிலைகளை ஆண்டுதோறும் கோடைக்காலத்தில் இவற்றிலுள்ளச் சேற்றை நீக்கி ஆழப்படுத்திக் கரைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு ஊர்ச்சபைகளைச் சேர்ந்ததாக இருந்துள்ளது. இதன்பொருட்டு ஏரிஆயம் என்னும் சிறுவரியொன்றும் மாவுக்குப் பதக்கு நெல் (பதக்கு என்பது இரண்டு மரக்கால் கொண்ட ஓர் அளவாகும்) வீதம் வசூலிக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

## ஏரி :

கீழப்பாவூரின் வடக்குப்பகுதியில் ஏரி அமைந்துள்ளது. இவ்வேரி திருவாலீச்சுவரர், ஸ்ரீவெங்கடாசலபதி கோவில்களின் வடக்குப்புறத்தில் 'முனையெதிர் மோகப் பேரேரி' காணப்படுகின்றது.

இதன் பரப்பளவு 260 ஏக்கர் ஆகும். 1700 ஏக்கர் பரப்புக் கொண்ட நன்செய் நிலங்களை வளங்கொழிக்கச் செய்கின்றது. 'முனையெதிர் மோகப் பேரேரி' 'முனையெதிர் மோகர்' எனும் போர்ப்படையின் பெயரில் ஏற்பட்டுள்ளது. குறுங்கானத்தில் காணப்படும் சித்திரா நதியாற்றுக்கு மேற்கில் உள்ளது. ஏரியின் அருகில் குறும்பலா மரங்கள் அதிகமாக இருந்துள்ளன. அவற்றிற்கு அருகில் இருக்கும் ஊர் குறும்பலாயேரி என்று அழைக்கப்பட்டுள்ளது. பின்பு இவ்வூர் ஏரி, பேரியாகி குறும்பலாபேரி என்று அழைக்கப்பட்டு வருகின்றது.

## குளம் :

சோழர்காலத்தில் கீழப்பாவூரில் உள்ள பெரியக் குளம் 'பாகூர்ப் பெருங்குளம்' என்று அழைக்கப்பட்டுள்ளது. தற்சமயம் இக்குளம் பெரிய குளம் என்று அழைக்கப்படுகின்றது. பாவூரின் கிழக்குப் பகுதியில் அமைந்தக் குளம் கீழைக்குளம், கீழ்க்குளம் என்றும் அழைக்கப்படுகின்றது. மேற்குப் பக்கம் அமைந்த குளம் மேலைக்குளம், மேல்க்குளம் என்று அழைக்கப்பட்டுள்ளது. ஏரிக்கு அடுத்தப்படியாகக் குளம் அமைந்து வேளாண்மைக்கு உதவியிருக் கின்றது. தைச்சன் குளம் என்றக் குளமும் கல்வெட்டுக்களில் கூறப் பட்டுள்ளது. இது தச்சனால் தொட்டக்குளமாகும்.

"இப்படிக்குப் பெருநான்கெல்லை யாவங்க மெல்லை
தைச்சன்குள" (வெங்.கோ.க.எண். 11)

என்று குறிப்பிட்டுள்ளது.

"தைச்சன் குளத்துக்குப் பெருநான்கெல்லையாவது"
(திருவா.கோ.க.எண். 6)

## வாய்க்கால் :

நீரோடும் வாய்க்கால். கல்வெட்டில் கீழப்பாவூரில் உள்ள வாய்க்கால் 'வீரஇராஜேந்திரன் வாய்க்கால்' என்று அழைக்கப் பட்டுள்ளது. வீரராஜேந்திரன் சோழனின் பெயராகும். நில எல்லையைக் குறிக்க இவ்வாய்க்கால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"நாங்களிட்ட நிலனாவது எங்களூற் புரவில்கார்
ஒரு பூவுக்குப் பயிரெற்றி கொள்ளஇட்ட
வீரராஜேந்திர வாய்க்காலுக்குத் தெற்க்கு"
(திருவா.கோ.க.எண். 9)

என்று கூறப்பட்டுள்ளது.

## வதி :

வதி என்பது வழி அல்லது வீதி என்று பொருள்படும்.
"நாங்களிட்ட நிலனாவது எங்களூற் புரவில்கார்
ஒரு பூவுக்குப் பயிரெற்றி கொள்ளஇட்ட
வீரராஜேந்திர வாய்க்காலுக்குத் தெற்க்கு
உரிய பெருந்தேவி வதிக்கு மேற்கும்"
(திருவா.கோ.க.எண். 9)

என்று வதியின் பெயர் பெருந்தேவிவதி என்று திருவாலீச்சுவரர் கோயிலில் காணப்படும் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. பெருந்தேவி சோழனின் கோப்பெருந்தேவியைக் குறிப்பதாக இருக்க வேண்டும். அவளது பெயர் இடம்பெறவில்லை.

## ஊருணி :

உண்பதற்கு தண்ணீர் நிறைந்த குளம் ஊருணி எனப்படும். ஊரார் உண்ணும் நீரையுடையதாதலால் ஊருணி என்னும் பெயர் அதற்கு அமைந்தது என்பர். ஊரணி என்பது ஊருணியின் திரிபாகும். 'ஊருணி நீர்நிறைந்தற்றே' என்பது திருக்குறளாகும். ஊருக்கு அண்மையில் உள்ள நீர்நிலை ஊரணி எனப்படும் என்று இரா.பி. சேதுப்பிள்ளை கூறுகின்றார். கீழப்பாவூரின் தென்பகுதியிலுள்ளது 'தெற்குஊரணி', என்றும், வடக்குப் பகுதியில் இடுகாட்டை ஒட்டியுள்ள ஊருணி 'அப்பட்டி' ஊருணி என்றும் அழைக்கப்படுகின்றன. வாய்க்காலுக்குச் சற்றுத் தொலைவில் பெரிய ஓடையும் உள்ளது.

'அப்பட்டி ஊருணி'யில் பட்டி என்பது சோழர் காலத்தில் ஒரு குறிப்பிட்ட காரியங்களைச் செய்ததற்கு செய்வோருக்குக் கொடுக்கப பட்ட நிலங்களில் ஒன்று 'பட்டிஅளவு' ஆகும். பிற்காலத்தில் இவை மானியம் என்று அழைக்கப்பட்டன. ஜீவிதபோகம், விருத்தி, காணி,

புறம், பட்டி போன்றவை சோழர்காலத்தில் மானியமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களின் பெயர்களாகும்.

பட்டிநிலம் என்பது, பதினாறு காண் கோலால் (12 அடி கோலால்) ஐம்பது குழி கொண்டது ஒரு மாவாக ஆயிரங்குழி கொண்டது ஒரு பட்டி நிலமாகும் (இக்கால அளவுப்படி அரைவேலிக் குரிய 10 மா நிலமாகும். பட்டிநில அளவில பல தடிகள் அடங்கும் (12 அடி சதுரம் - 1 குழி).

## ஓடை :

கீழப்பாவூரில் ஓடை ஒன்றும் காணப்படுகின்றது.

## கிணறு :

விலைக்கோ, தானமாகவோ நிலம் கை மாறும்போது அதற் குரியத் தண்ணீர்ப் பாயாத இடங்களில் கிணறுகளிலிருந்து நீர் இறைத்துச் சாகுபடி செய்யப்பட்டது. இத்தகைய நிலங்களுக்கு அரசிறை மிகக் குறைவாகும். கோடைக்காலத்தில் குளத்தில் நீர் வற்றும் போது நீர்பற்றாக்குறையைத் தீர்க்கக் கிணறுகள் அமைக்கப்பட்டு உள்ளன. கல்வெட்டுக்களில் மேல்நோக்கிய மரமும் கீழ்நோக்கியக் கிணறும் என்று நில எல்லையைக் குறிக்கும் போது பயன்படுத்தப்பட்டுள்ளது. கிணற்றின் சிறப்பு என்னவென்றால் குளங்களுக்கு அருகிலும், குளங்களுக்கு உள்ளுக்குள்ளும் கிணறு தோண்டப்பட்டுள்ளன. கீழைக்குளத்திற்குள் கீழ்க்கிணறும் வீரஇராஜேந்திரன் வாய்க்காலுக்கு நடுவில் ஒரு கிணறும், பெரியக் குளத்திற்கு அருகில் வட்டக்கிணறும், வாய்க்காலின் கரைநிலத்திற்கு வடக்குப்பக்கம் பிள்ளையார் கோயிலுக்கு முன் பிள்ளையார் கிணறும் அமைக்கப்பட்டுள்ளன. இன்றும் இக்கிணறுகள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். பிள்ளையார் கிணறு மட்டும் மூடப்பட்டுள்ளது. பிள்ளையார் என்ற பெயர் ஸ்ரீவல்லபன் மகனைக் குறிப்பதாகும்.

"பிள்ளையார் சுந்தரபாண்டிய தேவர் ஆண்மார்நாட்டு அருகைக்" (A.R.E. 257/1912)

என்று குறிப்பிடுகின்றது. நிலத்திற்குச் சுந்தரபாண்டியன் விளாகம் என்று வைத்ததுபோல் கிணற்றுக்கு இவனது பெயர் இருந்திருக்கின்றது என்பது தெரியவருகின்றது.

## மடைகள் :

நீர் நிலைகளிலிருந்து நன்செய் நிலங்களுக்கு நீர்ப்பாய்கின்றத் திறப்பு மடை எனப்படும். கழகத் தமிழ் அகராதி மடை என்றச் சொல்லுக்கு, துவாரம், சமையல் வேலை, மதகுப்பலகை, நீர் பாயும் மடை, மதகு வாய்க்கால், நீரணை என்று பொருள் கூறுகின்றது. குளமோ, ஏரியோ நிரம்பியப்பின் வேறோர் இடத்திற்கு நீரைத் திறந்து விடப் பயன்படுவது மதகுமடை ஆகும். கால்வாய்களிலும் குளங் களிலும் கட்டப்பட்ட மதகுகள் மடையென்று பெயர் பெறும். மடையின் வழியாகவே தண்ணீர் வயல்களில் சென்று பாயும் என்று இரா.பி.சேதுப்பிள்ளை கூறுகின்றார். வடமலை நிகண்டு,

> "மடையெனும் பெயர் மணிப்பணிப் பூண்டும்
> புனலின் மடையும் அடிசிலும் என்பர்"

என்று மடை என்ற சொல்லைக் குறிக்கின்றது. கீழப்பாவூரில் மடைகளை வைத்தும் ஊர்ப் பெயர்கள் அமைந்துள்ளன. குளத் திலிருந்து பிரிந்து நிலங்களுக்குச் சென்று நீர்பாய அமைக்கப் பட்டுள்ளக் கீழப்பாவூரில் கருமடை இருக்கும் ஊர் கருமடையூர் என்றும், ஆயன்மடை இருக்கும் ஊர் ஆயன்மடையூர் என்றும் அழைக் கப்படுகின்றன. பாகூரில் மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் ஏழுமடை களை நீர்ப்பாசனத்திற்காகப் பாதுகாத்து வந்துள்ளனர் என்பதும் தெரி கின்றது. சோழர், பாண்டியர்களில் யாரால் அமைக்கப்பட்டது என்ற விபரம் இல்லை.

விளைநிலத்திற்குரிய எல்லைகளாக வரப்பிட்டு அதில் வாய்க் கால், வடிகால் மடைகளை இன்ன இடத்தில் இன்னவாறு அமைத்துக் கொள்ள வேண்டும் என்று அதிகாரிகள் நேரில் திட்டப்படுத்துதல் உண்டு. இச்செயலைக் கிராமசபைக்கு உட்பட்ட தடிவழி வாரியம் நிகழ்த்தும். மடைகளை அமைக்கும்போது ஏரிக்கும் மடைக்கும் நடுவே

கரைப் பொந்திட்டு நீர்பாயும்படி வடிவமைக்கப்பட்டுள்ளது. மடைகளிலிருந்து நீர்பாய்ச்சுவதற்காகவும், மடை அடைக்கவும், திறக்கவும் "குடும்பன்" என்பவனை நியமனம் செய்துள்ளதாகவும் தெரிகின்றது. ஏழு மடைகள் காணப்படுகின்றன. அவைகள்:

1. கீர்த்தி மடை
2. பிராமடை
3. குற்றி மடை
4. கருமடை
5. ஆயிரமடை
6. புதுமடை
7. ஆயன்மடை

போன்ற ஏழு மடைகள் சோழர், பாண்டிய மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் பராமரிக்கப்பட்டு நீர்ப்பாசனத்திற்குப் பாதுகாக்கப் பட்டுள்ளன. இம்மடைகள் பாம்புகள் அதிகம் தங்கும்பொருட்டு உள்ளக் கற்களை வைத்துக் கட்டப்பட்டுள்ளன என்று மக்கள் தகவல் கூறுகின்றார்கள்.

கல்வெட்டுக்களில் 'குற்றிமடை நிலம்' 'ஆயன் மடைப்பொக்ல' (ஆயன் மடைப்போக்கி) என்று குறிப்பிடப்பட்டுள்ளன. இரண்டு மடைகளும் நில எல்லையைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

1. கீர்த்தி என்றால் புகழ், சீர்த்தி என்று பொருள். மன்னன் (அல்லது) சிவன் (அ) பெருமாள் புகழைக் குறிக்கும். எனவே இம்மடை கீர்த்தி மடை என்று அழைக்கப்பட்டிருக்கின்றது. கீர்த்தி என்பது விஷ்ணுவைக் குறிக்கும் சொல்லாகும்.
2. பிரான் என்றால் தலைவன். எப்பொருட்கும் இறைவன், கடவுள், சிவன், திருமால் என்று கழகத் தமிழ் அகராதி பொருள் கூறுகின்றது. பிரான்மடை என்று அழைக்கப்பட்டு காலப் போக்கில் 'பிராமடையாக' மாறியிருக்கின்றது.
3. குற்றி - மரக்கட்டை. ஆறு, பெருங்கால், குளம், ஏரி ஆகியவற்றின் கரையில் குத்திட்டு நிறுத்திய மரத்தின்வழி நீர்இறைக்கப் பயன்படுத்திய மடை எனுபதால் குற்றிமடை என்று பெயர் வந்துள்ளது.

"குற்றிமடைநிலம் ஒரு றச்சி எல்லைக்கு வடக்கும்"
(வெங்.கோ.க.எண். 14)

என்று குறிப்பிட்டுள்ளது.

4. கருமடை - கருக்கு என்பதிலிருந்து கரு தோன்றியிருக்க வேண்டும். கம்மியர் தாம் செய்யும் உலோகப் பாத்திரங்களில் கிண்ணம் போன்ற அமைப்புடைய வட்டில்களின் வாய் விளிம்பில் நேர்எதிராகவும், சற்று நீண்டதாகவும் அமைக்கும் விளிம்புக் காது போன்று அமைந்த மடையாகும். கரு-மண்மேடு என்றும் பொருளாகும். எனவே இம்மடை கருமடை என்றும் இவ்வூர் கருமடையூர் என்றும் அழைக்கப்படுகின்றது.
5. அயிரமடை - அயிர மீன்கள் அதிகமாக இருப்பதால் இம்மடைக்கு அயிரமடை என்று இப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.
6. புதுமடை (அ) ஆலங்கா மடை - ஆலமரம் நிற்பதால் இம்மடைக்கு ஆலங்காய் மடை என்று பெயர் வந்திருக்கக் கூடும். புதுப்பிக்கப் பட்டதால் புதுமடை என்றும் அழைக்கப்படுகின்றது.
7. ஆயன்மடை-ஆயம்-சுங்கரி. ஊர் எல்லைக்குள் வணிகத்திற் குரியப் பொருள்கள் வரவும் போகவும் பெறும் வரி ஆயம் எனப்படும். ஆயம் பெறும் இடம் சுங்கச் சாவடி எனப்படும். குறித்த இடத்தில் வியாபாரி கடையிட்டு விற்பனைச் செய்யும் சரக்குகட்குப் பெறும் காசும் பொருளும் ஆயமெனப்படும். இவ்வரிப் பெயரால் இம்மடை தோன்றியுள்ளது. ஒரு குறிப்பிட்ட நீர்நிலையைப் பாசனத்திற்காக பயன்படுத்தச் செலுத்தும் வரியும் ஆயக்கடமையாகும். ஆகவே இம்மடை ஆயன்மடை என்று வழங்கப்படுகின்றது.

"கி ணோக்கின கிணறும்ம -
- ல ஆயன்மடை பொக்லகாடு" (வெங்.கோ.க.எண். 17)

என்று காணப்படுகின்றது.

ஆயன்மடைக்கு மேல் கரை நிலத்தில் திரிசூலக்கல்லும், 'குடும்பன்' நினைவுக் கல்லும் காணப்படுகின்றன. திரிசூலக்கல் தென்கீழ் எல்லையில் உடைந்து குடும்பனோடு சேர்த்து மூன்று கற்களையும் மக்கள் வழிபட்டு வருகின்றனர். 'குடும்பன்' என்பது ஒரு பகுதியைக் குறிக்கும் சொல்லாகும். அப்பகுதியைக் கண்காணித்து வந்தவனை இச்சொல்லால் 'குடும்பன்' என்று அழைக்கப்படுவதும் உண்டு.



கருமடை



அயிரமடை



புதுமடை (அ)
ஆலங்காமடை



ஆயன்மடை

# கல்வெட்டுக் கலைச்சொற்கள்

## அச்சு :

நிலத்தின் தரத்திற்கேற்ப விதிக்கப்பட்ட வரிக்காசு.

## அச்சுத்தறி :

நெய்த ஆடைகளில் வண்ண அச்சிடும் ஒரு வகைத்தறிக்குரிய வரியின் பெயர்.

## அதிஷ்டானம் :

கலை. கருங்கல்லால் கட்டப்பெறும் திருக்கோயிலின் அடிப்படை வரிசை. இருக்கையமைப்பு, ஆசனவரிசை, கோயில் விமானத்தின் கருங்கல் சிற்ப வேலைப்பாட்டுப் பகுதியில் தளக்கல் முதலாகப் பீடக்கல் வரையிலுள்ளச் சிற்பகக் கட்டுக் கோப்புப் பகுதி. கோயில் விமானத்தின் அடிப்பகுதி. விமானத்தின் பீடம். கல்லிருக்கை. கற்பாறையில் மழ மழப்பாகவும் பரப்பிடமாகவும் குழிக்கப்பெறும் கற்படுக்கை. கருங்கல்லால் அமைக்கப் பெறும் கட்டட அடிப்படை வரிசை.

## அந்திர விநியோகம் :

உள்வரி வகையில் நீக்கப் பெற்றது போக எஞ்சியதில் பங்காகப் பெற்றது.

## அமுதுபடி :

அமுது படைத்தல் நைவேத்தியம்

## அமுதுபடி சாத்துப்படி :

இறைவனுக்குப் படைக்கும் பிரசாதமாகிய நிவேதன உணவுக் குரிய வருவாய். கோயிலில் இறைவனுக்குரிய நிவேதனம் அலங்காரம்

உட்பட்டவைகளுக்குரியச் சிறப்புப் பொருள்களுடன் கறிவகைகளும் உள்ளிட்ட நாள் வழிபாட்டுத் தேவைகள்.

## அர்த்த மண்டபம் :

கோயிலில் கருவறைக்கும் முக மண்டபத்திற்கும் இடைப்பட்ட மண்படம். கருவறை முகப்புடன் ஒட்டுக் கோப்பான மண்டபம் அந்தராள மண்டபம். கருவறைக்கு முன்புள்ள மண்டபம்

## அரைத்தூண் :

விமானச் சுவர்ப்பகுதியில் பாதி மட்டுமே வெளியே தெரிவது போல் அமைத்திருத்தல்.

## அறிஞ்சிகைப் பிராட்டி :

சோழன் மகள் பெயர்

## அன்தராயம் :

உள்வரி. அரசுக்குத் தனிப்பட்ட முறைகளில் வரியாக வரும் வருவாய்.

## ஆசாரியன் :

ஆச்சார்யன் - வேதவேதாந்தங்கள் சாத்திரங்கள் ஆகிய வற்றைப் பழுதறக் கற்று ஓதுதலோடு பிறரை ஓதுவித்து சீர்திருத்தும் திறனமைந்தவர். ஆசார்யராக விளங்கும் அரசகுரு அனுபவிக்க வேண்டிய அரசன் செய்யும் நிவந்தம். இவ்வாசாரியர் சிவன் கோயில் களில் ஆகமவிதிப்படி வழிபாடுகள் நிகழ்வதற்கும் தலைமையாளராக இருப்பர். இவர்கள் தேவகன்மிகர் என்றும் பெயர் பெறுவர்.

## இரப்பேராயிரம் :

குழு - வணிகர்குழு.

## இருபூ :

ஆண்டொன்றில் இரண்டு போக நெல்விளைவு. கார், சம்பா இரண்டுமாகும்.

## இறைசுருக்கி :

இறை - அரசாங்கத்துக்கு இறுக்கும் வரியைப் பொதுவாக உணர்த்தும் சொல். இதனைக் குறைத்துப் பெறும் வரி அல்லது வரி நீக்கிப் பெறுதல் என்று கூறலாம்.

## இறையிலி :

அரசுக்குரிய இறைவரி நீக்கப்பெற்ற நிலம். நஞ்சை, புஞ்சை களின் விளைவுகளைக் கொண்டு பெறும் வரிகளையும் அப்பகுதி களில் குடியிருப்பார் தரும் தேவை, குடிமை முதலிய வருவாய்களையும் அரசு நீக்குதல் இறையிலியாகும்.

## உடும்பொடாமை தவளியும் :

உடும்போடு ஆமை தவழ்புற்றும் - காடு கரம்பு பொருந்திய பகுதியும், நீரும் நிலமும் சேர்ந்து பொருந்தியப் பகுதியும் ஆகிய நிலம்.

## உபபீடம் :

பெருங்கோயில்களில் அதிட்டானத்தின் கீழே அமைக்கப்படும் பீடம்.

## உபானம் :

கோபுர விமானத்தின் அதிஷ்டானத்தின் அடிப்படை. கோயில் கட்டட அடிப்படை. சிற்ப வேலைப்பாட்டுடன் அமைக்கப் பெறும் பீடத்தின் அடிப்படை.

## உறுப்புட்டூற் :

ஆந்திராவில் உள்ள ஒரு கிராமம். அந்தணர்கள் வாழ்ந்த கிராமம்.

## ஊர்க்குச் சமைந்து :

ஊர் நிர்வாகப் பொறுப்பிற்கு அமைக்கப் பெற்று பணிபுரியும் சபையார்.

## ஏகபோகம் :

தனிமனிதன் வழிவழியாக அனுபவிக்கும் நிலம் அல்லது வருவாய்.

## ஒரு பூ

ஒரு பருவச் சாகுபடி

## க்ரீவம்

கழுத்து, விமானத்தில் சிகரத்துக்குக் கீழுள்ள பகுதி.

## கண்டம்

முகமண்டபப்பகுதி, அதிஷ்டானத்தின் ஒரு பாகம்.

## கண்ணாறு

பாசன வாய்க்கால்

## கட்டுமானக் கோயில்

கற்களால் கட்டப்படுதல்.

## கடமை

ஊர்க்கணக்கிலும் நாட்டுக் கணக்கிலும் உள்ளபடி அரசு பெற்றுக் கொள்ளும் வரி. அரசு ஊர்நிலைங்களை அளந்து அதன் விளைவிற்கேற்ப உரிமையாளரிடம் வசூலிக்கும் வரி.

**கபோதம் :**

மழைநீர் சுவர்ப்பகுதியில் விழாமல் இருப்பதற்காக அதிட் டானத்தில் அமைக்கப்படுவது. உத்திரத்துக்கு மேலே வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் கூரையின் விளிம்பு.

**கரம்பு :**

செடிகொடிகள் மண்டிக் காடாக எழுந்து நிற்கும் சமனில்லாத நிலப்பரப்பு. கல்வெட்டில் நுரம்பு என்று உள்ளது.

**கருவறை :**

மூலவர் எழுந்தருளியிருப்பது.

**கரைநிலம் :**

அவ்வப்போது ஊராரிடம் மாற்றி மாற்றி அனுபோகத்து கூறுபோட்டு ஒப்படைக்கப்படும் நிலம், தடிவழி வாரியமாக நிலக்கணக்கதிகாரிகளால் அளந்து பிரித்துக் கரையிடப்பட்ட விளைநிலம்.

**கல்லும் கள்ளியும் நாட்டி :**

அரசனால் அறமாகச் செய்யப்பட்ட நிலம், கிராமம், ஊர் ஆகியவற்றில் ஒன்றின் எல்லைகளைக் கண்டு உறுதி செய்வதற்கு ஊர்ப் பொதுமக்களும் அதிகாரிகளும் பிடிசூழ்ந்து படாகை நடந்து, எல்லைகட்குரிய இடங்களில் எல்லைக்கற்களும் எக்காலத்தும் அழியாது கிளைக்கும் நெடுங்கள்ளியும் நாட்டிச் செல்வதாகும்.

**கலசம் :**

உலோகச் செம்பு

**கலம் :**

பத்திரம், ஆதரவுச்சீட்டு, வில்லங்கம், சாப்பிடும் பாத்திரம்.

**காசு :**

சின்னம். சோழபாண்டியர் ஆட்சியில் உயர்ந்த முதல்மதிப்பு நாணயம் காசு என்பதாகும். கடைசியாகக் கொள்ளப்பட்டபின்ன மதிப்புச் சின்ன நாணயம் - சின்னம் என்பதாகும். ரூபா, பைசா போன்ற தாகும். சோழ அரசில் நாட்டில் நடைமுறையில் இருந்த நாணய மதிப் பீட்டு முறை இதுவேயாகும் - அணிகலன்களையும் நிலங்களையும் மதிப்பீடு செய்து விற்கவும் கொடுக்கவும் குறிக்கும் காசு பொற்கா சாகும். வரி, இறை, ஆயம், அந்தராயம் ஆகிய அரசு பெறும் வரிக் காசுகள். செம்பு, பித்தளை ஆகிய வேறு உலோகங்களால் செய்யப் பெற்ற நாணயங்களாகவே அமைக்கப்பட்டிருந்தன.

**காடேற்றம் :**

ஆறு, பெருங்கால்வாய், குளம், ஏரி ஆகியவற்றின் கரையில் குத்திட்டு நிறுத்திய மரத்தின் வழிநீர் இறைக்க அமைக்கப்பெறும் ஏற்றம்.

**காடேற்று நிலம் :**

காடேற்று நிலம் என்றால் இருபோக சாகுபடி உள்ள நிலம். காடுகளைப் பராமரிப்பதற்காக இறுக்கும் நிலம். காடு என்னும் சொல் இடுகாட்டையும் குறிக்கும்.

**கார்பசானம் :**

குறுவையும் சம்பாவும் ஆகியப் பருவகால நெற்பயிர்கள் விளையும் இருபோக நிலம்.

**காரணவர் :**

கரணம் - வழக்குகளை விசாரிக்கும் நியாய சபைகளுள் ஒருவகை. இச்சபையின் உறுப்பினர் கணக்கர். கோயில் நிர்வாகம் அல்லது கிராம சபையின் நிறைவேற்றுக் கழகத்தார் செய்யும் முடிவுகளையெல்லாம் செயற்படுத்துவதற்கென்று ஊழியம் பெறும் பணிமக்களுள் ஒருவர்.

## காரணவன் :

கணக்கன். காரணிகன், கரணத்தான் எனவும் பெறுவான். கரணம்-பத்திரம் சீட்டு என்றும் பொருள்படும்.

## காராண்மை :

நிலத்தினை உழுது பயிர் செய்து அரசுக்கு இறைசெலுத்தும் வேளாண் குடிமை காராண்மை எனப்படும். பயிரிடும் உரிமை, அதற்கான வரி.

## கால் :

பாசானத்திற்குரிய நீரோடும் வாய்க்கால். தானியங்கள் அளக்கும் மரக்கால்.

## கீழ் :

கீழ் - கீழ்நிலம்

## கீழ்க்கு :

கிழக்கு

## கீழ்க்கொம்பு :

கிழக்குப் பகுதியிலுள்ள ஏரிக்கோடி.

## கீழ்வரம்பெல்லை :

கிழக்குப் பகுதியிலுள்ள, அளந்து எல்லையிட்டுப் பிரித்த நன்செய் நிலம். வரம்பு எல்லை - வயல் நிலத்தை எல்லையாக உடையது.

## குட :

மேற்குத்திசை

**குடநாடு :**

குடமலை நாடு / மேற்கு

**குமுதப்படை :**

கருங்கற்களால் கோயில் அமைக்கப்பெறும். கட்டடப் பகுதிகளுள் அடிப்படைத் தள வரிசை. மட்டத்தின் மேல், கீழ் நோக்கிய இதழ்களாக அமைக்கப் பெறுவது தாமரை இதழ் வரியாகும். அதற்குமேல் உள்பத்தியாக அமைவது கண்டம். கண்டத்திற்கு மேல் நோக்கிய இதழ்களாகத் தொடரும் சிற்பவரியே குமுதப்படை ஆகும்.

**குமுதம் :**

அதிட்டானத்தில் அழகியப் பகுதிகளுள் ஒன்று.

**குளம் :**

ஏரி

**குற்றிம்மை :**

நெல் விதைப்பாடுள்ள நிலம். ஆறு, பெருங்கால்வாய், குளம், ஏரி ஆகியவற்றில் கரையின் அருகே உள்ள நிலம் என்று கொள்ளலாம்.

**கூடம் :**

சதுரமான அடித்தளமுள்ள விமானம்

**கூடு :**

கபோதங்களில் புடைப்பாகச் செதுக்கப்படும் வளைவு.

**கூறிடு :**

பாகுபடுத்திப் பிரித்து பங்கீடு - பங்கீடு செய்தபடி நிலம்.

## கை(ப்)பிடி :

கையில் பெற்றுக் கொண்ட பொருள்.

## கைவிலை :

அப்போதை விலை

## கொடுங்கை :

கபோதத்தைத் தாங்கும் வளைந்த கைகள்

## கொள்ள பெரியான் :

பற்றுதலுடைய அரசன் / இறைவன்

## கோபுரம் :

நுழைவாயிலுக்கு மேல் அமைக்கப்படும் பிரமிடு போன்ற பகுதி

## கோமாற பன்மர் திரிபுவனச் சக்கரவர்த்தி :

சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்குப் பேரரசன், சக்கரவர்த்தி என்றச் சிறப்புப் பெயருடன் விளங்குதல். முதற்குலோத்துங்கனுக்குரிய விருதுப் பெயர்களுள் திரிபுவனவீரன் என்பது ஒன்றாகும். பாண்டிய மன்னர்களும் இவ்விருதுப் பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர்.

## சதுர்வேதி மங்கலம் :

நான்மறையிலும் ஆறு அங்கங்களிலும் வல்ல பிராமணர்களின் வாழ்தற்கேற்ற வண்ணம் அரசர்களால் இறையிலியாகக் கொடுக்கப்பட்ட தனியூரோ சிலவூர்கள் சேர்ந்த பகுதியோ "சதுர்வேதி மங்கலம்" எனப்படும். இதற்கமைந்த ஊர்ச்சபையின் உறுப்பினர் யாவரும் பிராமணர்களாகவே இருப்பர். சதுர்வேதி மங்கலங்கள் இறையிலியாகத் தானம் செய்த அரசன் பெயராலும் அரசுவழி அரசியர் பெயராலும் அமைக்கப்பட்டிருப்பதைச் செப்பேடுகளிலும் கல்வெட்டுக்களும் கூறுகின்றன.

**சமபங்க நிலை :**

இரண்டு கால்களும் நேராகக் காணப்படுதல்

**சமைந்த (சமைந்து) :**

உடன்பட்ட நிர்வாகம் செய்ய அமைக்கப்பெற்றத் திட்டப்படி அமைந்த.

**சமைந்து (அடைப்பு) :**

ஒப்புக் கொண்டோம் / ஒப்புக்கொண்டவர்கள் உடன்பட்ட, நிர்வாகம் செய்ய அமைக்கப்பெற்றத் திட்டப்படி அமைந்தத் தகுதிவாய்ந்த சான்று. சாசனங்களில் சான்றாகக் கையொப்பமிடு வதற்குத் தகுதியுடையாராகச் சபையோரால் குறிக்கப்பட்ட ஊர்ப்பெரு மக்கள்.

**சாத்துப்படி :**

கோயில் விக்கிரங்களுக்குச் செய்யும் அலங்காரம்.

**சாலை :**

நீண்ட சதுர அடிப்பகுதியும் வண்டிக் கூடு போன்றக் கூரையுமுடைய விமானம்.

**சிகரம் :**

கோபுர விமானங்களின் உச்சி அல்லது விமானத்தின் தலைப்பகுதி.

**சிவிதமாய் :**

வாழ்கின்ற ஊரில் நிலையாக வாழ்ந்து வருகின்ற வாழ்க்கைக் குரிய வருவாய் குடியிருப்புமனை, உணவுக்குரிய நிலம், ஆடைக் குரியக்காசு ஆகியவை மக்கள் வாழ்க்கைக்கு அமைந்த தேவைகளா தலின் இம்மூன்றும் பெறுதல் சிவிதம் எனப் பெறும். ஒரு குறிப்பிட்ட

ஊழியங்களுக்குச் சம்பளத்துக்குப் பதில் அனுபோகப் பாத்தியத்தை மட்டும் உள்ளதாக அளிக்கப் பெற்ற நிலம். ஜிவியம் எனவும் பெறும்.

**சுமந்து வருவானக :**

பல்லக்கு சுமத்தல்

**சுவர் :**

மதில்

**சூலஸ்தாபனம் :**

சூலவடிவினைப் பொறித்தக் கற்களை நிலையாக நடுதல். சிவன் கோயில்களுக்கு இறையிலி செய்யப்பட்ட நிலங்கட்குரிய எல்லைகளில் திரிசூலக்குறி பொறிக்கப்பட்ட கற்களை நிறுவுதல் வழக்காகும். ஸ்தாபனம் - நிலைபெறச் செய்தல்.

**சூளக்கல் :**

சிவன் கோயிலின் நிலத்து எல்லையைக் குறிக்க நடும் சூல உருவம் பொறித்த கல்.

**செய்நிலம் :**

திருத்தம் செய்தநிலம், நன்செய்

**தண்டத்துக்கு :**

அபராதமாக விதிக்கப்பட்ட வரி

**தண்டநாயகன் :**

படைத்தலைவன், சேனாதிபதி, தண்டுபடை

**தண்டப்படுதல் :**

அபராதம் விதிக்கப்படுதல்

**தண்டம் :**

தண்டனை விதிப்பு - அபராதம்.

**தண்ட(ல்) நாயகம்**

அரசுக்குரிய இறைவரி முதலிய வருவாய்களை உரிய முறைகளில் நாட்டில் வசூல் செய்யும் குழுவினருக்குத் தலைமை அதிகாரி. இவர்கட்கென்று பாதுகாப்புப் படையொன்றும் நிறுவப்பட்டிருந்தது. படைத்தலைமையாகிய உத்தியோகம், அந்தப் பதவி வகிப்பவன் தண்ட நாயகன்.

**தண்டலில் கடமை**

அதிகாரிகள் வசூல் செய்யாமல் மக்கள் தாமே செலுத்தும் வரி.
தண்டலை

**தண்டற**

தண்டேறுதல் - பல்லக்கில் ஏறுதல்.

**தண்டி**

வசூலித்து (தண்டல், தண்டுதல்).

**தண்டிக் கொள்ளல்**

வசூலித்துக் கொள்ளல், ஊர்ச்சபையரோ, உரிமைப் பெற்றவரோ நேரில் பொருளை வசூலித்துக் கொள்ளல் என்னும் பொருளில் அமைந்துள்ளது.

**தண்டின**

வசூலித்து (தண்டல், தண்டுதல்)

**தண்டு**

படை, போர்ப்படை, படையெடுத்துச் செல்லல்.

## தந்திரக்காரன்

கோவில் அர்ச்சகர் / வீரர்கள்

## தந்திரத்தோம்

படை

## தந்திரவினியோகம்

தந்திரம் - படை - காலாட்கள் கொண்டது. வினியோகம் - உபயோகம். செலவு அதற்கானக் கட்டணம். காலாட்படைக்காக மக்களிடம் வரி என்ற பெயரால் வரி விதித்துப் பெறுவர்.

## தம்பிராட்டி

தலைவி, அரசன்தேவி

## தர்ம தானம்

விரும்பிச் செய்யும் அறம்

## தன்மதானம்

உண்மைநெறி தவறாமல் நியாயமான முறையில் நிலம் தானம் செய்தல்

## தானம்

தேவஸ்தானத்தின் சுருக்கமான ஸ்தானம். கோயில்.

## திரிபங்கநிலை

ஒரு கால் நேராகவும், மற்றொரு கால் சிறிது சாய்த்தும் காணப்படுதல்

## திருக்களிற்றுப்படி

கல்லினால் செதுக்கப்பட்ட களிறு கொண்டப் படியாகும். இது கோயில் வாயிலில் இரு பக்கத்திலும் காணப்படும் - படி - முகத்தலளவை. அளவைப் பெயராகவும் கொள்ளப்படும்.

## திருப்படிமாற்று

கோயில் மூர்த்திகளுக்கு நிவேதிப்பதற்கானப் பொருளைத் தயாரிக்க வேண்டிய அரிசி முதலியப் பண்டங்கள்.

## திருப்புகை

கோயிலில் இடும் தூபம். சோழர்காலத்தில் திருக்கோயில் களில் இறைவனுக்கு நாளும் நிகழும் வழிபாட்டின்போது தணலில் சந்தன மரத்துகள், அகில்துகள், குங்கிலிய துகள் ஆகியவற்றை இட்டுப் புகையெடுத்தல் வழக்கமாகும். வழிபாட்டிற்குரிய நறும்புகையே திருப்புகை எனப்பட்டது.

## திருப்போனகம்

சுவாமிக்கு நிவேதனம் செய்யும் அமுது.

## திருமதில்

கோயிலின் சுற்றுமதில்

## திருவமுது

நிவேதன உணவு

## திருவாச்சி

புரைகளுக்கு மேலே உள்ள கொடி போன்ற அமைப்பு

## திருவாய்ப்பாடி (குலம்)

கிருஷ்ணன் கோயில் கோகுலம் எனவும் காணப்பெறும். திருவாய்க்குலத்துப்பிள்ளை நாயகன். கிருஷ்ணன் கோயிலையும் அரசன் செய்வித்தலையும் குறிக்கும்.

## திருவாலி

திருவாதிரைக்காரன்

## திருவிடையாட்டம்

தேவதானமானியம் - கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப் பெறும் நிலம். இது சைவ வைணவ கோயில்களுக்குப் பொதுவானது.

விஷ்ணு கோயில்களுக்கு அளிக்கப்பெற்றத் தேவதானநிலம் அல்லது கிராமம். விஷ்ணு கோயில் ஸ்ரீகாரியம்.

## தெக்கு

தெற்கு

## தென்படு பொதும்பு

தேன் பயில் பொதும்பு - தேன்கூடுகள் நிலவும் வளமமைந்த சோலை.

## தென்னவன் (அரையன், பேரரையன்)

பட்டங்கள், அரசியல் அதிகாரி

## தென்னவன் ஆபத்துதவிகள்

பாண்டியர் படையின் பெயர்.

## தேவகன்மி

கோயிலில் சுவாமி காரியம் பார்ப்போர் - கன்மிகள் - கோயிலில் தெய்வ வழிபாட்டுக்குரியப் பணிகளைச் செய்பவர். இவர்கள் சண்டேசுவரர், அர்ச்சகர், தேவரடியார், ஆண்டோர்கள் முதலியோர் உள்ளிட்டவர்களாகக் கூறப்பெறுதல் வழக்கு.

## தேவகோஷ்டம் (அல்லது) தேவகோட்டம்

தெய்வ உருவங்கள் வைப்பதற்காக விமானச் சுவரில் வைக்கப்படும் மாடக்குழி.

## தேவதானம்

கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கப்பெறும் நிலம். இது சைவ வைணவ கோயில்களுக்குப் பொதுவானது.

## தோட்டம்

மரங்கள் வளர்ப்பதற்குத் தகுதியான நிலப்பகுதி. மா, பலா, வாழை முதலிய பயன்தரு மரங்க்ள வளர்க்கப்பட்ட இடமாகும்.

## தோரணம்

மாடக்குழி மேல் அமைக்கப்பட்டிருக்கும் அலங்கார வளைவாகும்.

## நத்தப்பாழ்

கிராமத்தின் ஒரு பகுதியாகும். நத்தத்தில் மக்கள் குடியிருப்பும் விளைவும் இல்லாத தரிசுநிலம்.

## நத்தம்

ஊரையோ கிராமத்தையோ சார்ந்துள்ள குடியிருப்புப் பகுதி. இப்பகுதி நீர்நிலைகளைச் சார்ந்ததாகவே அமையும். பார்ப்பனரும்

சமுதாயத் தொழிலாளரும் உழவர்களும் வாழும் குடியிருப்பாகவும் நன்செய், புன்செய் நிலங்களும் திடலும் சூழ்ந்ததாகவும் அமைந்திருக்கும்.

## நற்காசு

நற்காசு - காசு - அணிகலன்களையும் நிலங்களையும் மதிப்பீடு செய்து விற்கவும் கொடுக்கவும் குறிக்கும் காசு பொற்காசாகும். வரி, இளை, ஆயம், அந்தராயம் ஆகிய அரசு பெறும் வரிக்காசுகள். செம்பு, பித்தளை ஆகிய வேறு உலோகங்களால் செய்யப் பெற்ற நாணயங்களாகவே அமைக்கப்பட்டிருந்தன. நற்காசு - உரையும் துளையும் எடையும் குறையாத பொற்காசு, குற்றமற்றகாசு.

## நன்செய்

நெல் விளையும் புலம்

## நாயனார்

விநாயகர்

## நான்கெல்லை

இந்த நான்கெல்லை (இ + நான்கு + எல்லை).

## நித்தல் நிவந்தம்

நாள் வழிபாட்டிற்குரியதாக அமைக்கப்பட்ட கட்டளை.

## நிபந்தம்

திருக்கோயில்களில் வேதாகம விதிப்படி வழிபாடு முதலானச் செயல்கள் தான் நியமித்தவாறு நிகழ்தற்குரியக் கட்டளைச் செலவினங்கட்கமைந்த வருவாயாகவும், மூலதனமாகவும் நிறுவப்பெறும். அறச்செயல். இச்சொல் கல்வெட்டில் நிமந்தம், நிமிந்தம் என்றுக் குறிக்கப் பெறுகின்றது. நிலமாகவும் வருவாயாகவும்

வரியாகவும் காசாகவும் இருக்கும். கடமையைச் செய்தார் கூலியும் நிபந்தம் என்று குறிக்கப்பெறும்.

## நிமந்தம்

நிபந்தம் குறிப்பிட்ட மூலதனத்தினைக் கொண்டு அதன் வழிபெறும் வட்டி, வருவாய் ஆகியவற்றால் நிலையாகச் செயல்பெறும் திட்டமுடன் செய்து வைக்கப்பெறும் அறச் செயல்.

## நிவந்தம்

திருக்கோயிலில் வழிபாட்டினங்களுக்கும் பல பணி செய்வார்க்கும் நிலையாக வைக்கப்பட்டுள்ள மூலப் பண்டாரங் களாகியக் கருவூலங்களிலிருந்து அரசு ஆணையிட்ட அளவுப்படி அளிக்கப்பெறும் கூலி. ஊதியம், நாட்கூலி ஆகியத் திட்ட அறக்கொடை நிவந்தம் எனப்படும்.

## நீர் நிலம்

நன்செய் நிலம்

## நீர்வார்த்துக் கொடுத்தல்

தானதர்மம் செய்ததை உறுதிசெய்ய உரியவர் கையில், தர்மத்தை விபரமாகச் சொல்லி நீர் தாரைவார்த்துக் கொடுத்தல்.

## நுந்தா விளக்கு

இறைவன் சன்னிதியில் நாள் முழுவதும் தொடர்ந்து தூண்டா விளக்காக எரியும் விளக்காகும். விளக்கின் வடிவம் பலவாக அமையினும் அதன் நிவந்தச் செயல் தூண்டாது தொடர்ந்தெரியுமாறு செய்யப்பெறும் விளக்கென்பதேயாகும். கல்வெட்டுக்களில் நொந்தா விளக்கு நந்தா விளக்கு என்றெல்லாம் கூறப்பெறுவது இவ்விளக்கே ஆகும்.

## ப்ரஸ்தரம்

விமானக்கூரையும் அதில் அமைக்கப்பட்ட அழகுப் பணிகளுள் ஒன்று.

## பசானம்

சம்பா போக நெற்பயிர். ஆறுமாத விளைவுள்ள நெற்பயிர்.

## பஞ்சரம்

கோயில் விமானத்திற்கமைந்த நான்கு பக்க முனைப் பகுதிகளில் கிளிக்கூண்டு போன்று அமைப்பில் அமைக்கப் பெறும் சிற்ப வேலைப்பாடு மிகுந்த பகுதி. விமானத்தின் சுவரில் காணும் மாடம். கூடு.

## படி

சோழர்காலத்தில் வழக்கில் படி, அளவு, முகத்தலளவை இருந்தமையைக் காட்டுகின்றது. சான்றாக - முகத்தலளவை.

## படைத்தலைவர்

போர்ப்படைத்தலைவர்

## பண்டாரத்தார்

நாட்டிலோ ஊரிலோ கோயிலிலோ அமைக்கப்பெறும் கருவூலமாகிய பண்டாரத்தினைப் பொறுப்புடன் நடத்தும் தலைமை அதிகாரி. பண்டாரி என்றும் பெயர் பெறுவர்.

## பண்ணிக் குடுத்தோம்

சாசனம் செய்துக் குடுத்தோம்.

## பரிசு

வகை, விவரம், பரிது எனவும் பெறும். முறைமை. கல்வெட்டுக்களில் மிகுதியாக இடம்பெற்றுள்ள இச்சொல் செய்த முடிபு, தீர்மானம், அனுமதித்த செயல், அளித்த முறைமை, பெறும் கூலி, உரிய வருவாய் அமைந்த அறம், நிவந்தம் என்பன போன்ற நிலைகளில் செய்திகட்கேற்ப பொருள் தருவதாக அமைந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். இதனையே "வியவஸ்தை" அல்லது வியவஸ்தையாவது என்றும் கூறும் வழக்குண்டு. இதன் தொடர்பாகவே செய்யப்பட்ட அறச்செயல் விளக்கம் தரப் பெறும் (பரிசாவது - நிவந்தமாவது).

## பரிதக்கால்

கால்பரிந்து - காலால் விரைந்து ஓடி.

## பலாமற (அமுதுபலா)

பலாமரம் - அமுதுபலா கோயில் நிவேதனத்திற்குரியதாகச் சாசனத்தில் குறித்து எழுதப்பட்ட பலாமரம். பல பலாமரங்களுள் ஒன்றினை நிவேதனத்திற்கென்று ஒதுக்கி வைப்பது.

## பள்ளி

சமணர் / பௌத்தர் கோயில்.

## பள்ளிச்சந்தம்

சமண, பௌத்த கோயில்களுக்கு விடப்பட்ட இறையிலி நிலநிபந்தம். காசு, முதலீடு ஆகியவை பள்ளிச்சந்தம் என்ற பெயரால் வழங்கப்பெறும்.

## பள்ளிநிலம்

சமண, பௌத்தர் கோயில்களுக்காக வரியில்லாமல் விடப்பட்ட நிலம அல்லது கிராமம்.

## பற்று

நிலம். உரியநிலம், உரிமை நிலம். இச்சொல் அடுக்கு, சார்பு, உரிமை பெறும் ஊதியம், பதிந்தக் கணக்கு என்னும் பொருள்களிலும் கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ளது.

## பாழி

மலைகளில் இயற்கையாக அமைந்த குகைத் தடங்கள் பாழி எனப்படும். இப்பாழிகளிலேயே சமண முனிவர்கள் தங்கி வாழ்ந்தனர்.

## பிரநாளம்

கருவறையில் உள்ள திருமஞ்சனநீர் வெளியேறும் உறுப்பு

## பிரான் நிலம்

சிவன், திருமால், தலைவன் நிலம்.

## புறத்தார் (புறம்பாடி)

கோட்டைச் சூழ்ந்த நகரத்தின் புறத்தே சார்ந்துள்ள ஊர். விடப்பட்ட நிலம் (அ) கிராமம்.

## புறம்

ஒரு குறிப்பிட்ட தர்மத்துக்காகப் பெரும்பாலும் வரியில்லாமல்.

## புறமடை

வெளிவாய்க்கால்

## புன்செய்

கொல்லை நிலம்.

## பூதானம்

வேதம் ஓதும் பிராமணர்களுக்குக் கொடுப்பது. அடிக்கடி நிலங்களை வாங்கிக் கொடுக்கும் நிலம். நிலதானம்.

## பெருநான்கெல்லை

பெரிய பரப்பாக அமைந்த நிலத்திற்கோ, கிராமத்திற்கோ நான்கு பக்கங்களையும் சார்ந்துள்ள எல்லைப் பகுதிகளை விளக்கமாகக் குறித்தல். இச்செயல் நாட்டாரும் ஊராரும் அதிகாரிகளும் கூடி நிலத்தை அளந்து எல்லைகளைக் கண்டு உறுதிச் செய்யும் செயலாகும்.

## பேர்க்கடமை

பிராமணர்கள் விவசாயிகளிடம் பெறும் உரிமை. புதிதாய்க் குடியேறுபவர்கள் தம் பெயரால் அரசர்க்குச் செலுத்தும் வரி.

ஊரில் பழமையானக் குழமக்களாய் நிலையிருப்புடனும் உரிமை நிலங்களுடனும் வாழும் குடும்பத் தலைவர்களும் பல இன வியாபாரிகளும் அரசின் சமுதாயக் கணக்கில் தன் பேரினைப் பதியச் செய்வித்துக் கொள்ளுதற்குரிய வரி.

## பொலிவிழந்த விழுக்காடு

வட்டி, முதல் கெடாமல் பெறும் வருவாய் வீதம். பொலியூட்டு பொலிசையூட்டு அடிப்படையில் பார்த்தால் நிரந்தரமான வருவாயை அளிப்பதற்காக ஸ்தாவர சொத்துக்கள் மீது கடன் கொடுத்தோ வாய்க்கால் குளம் போன்ற நீர்நிலைகளைச் செப்பனிட்டோ முதலை வட்டிக்கு விடுவது வீதம்.

## பொழிப்பு

தொகைப் பொருள்

## பொன்னமடம்

மடத்தின் பெயர்

## பொன்னமடத்தார்

மடத்தில் தங்கியிருப்போர், உரிமையாளர்.

## போதிகை

தூணின் தலைப்பகுதி

## போனகம்

கடவுளுக்குப் படைக்கும் உணவு. போசனம் - உணவு, நிவேதன உணவினைக் குறிக்கும்.

## மகரதோரணம்

மகரமீன் வடிவமைந்தத் தொங்கல்களாகச் செய்து கோவை செய்யப்பெற்ற அணிகலன். கோட்டைவாயில், மாளிகை வாயில் ஆகியவற்றுக்கு ஒப்பனையாக மகரமீன்கள் எதிரீட்டு இணைந்து நிற்கும் பாங்கில் அழகு செய்யப்பெறும் வளைவு.

## மகாமண்டபம்

கோயிலில் அர்த்த மண்டபத்தை அடுத்தப் பெரிய மண்டபம்.

## மங்கலம்

சதுர்வேதிமங்கலம் என்பதன் குறுகிய வடிவம். பிராமணர் குடியிருப்புக்காகப் பெரும்பாலும் வரியில்லாமல் விடப்பெற்றக் கிராமம்.

## மடப்புற இறையிலி

சமயச் சார்புடைய மடங்களுக்கும் அம்மடத்திலிருந்து சமயத் தலைமைப்புரியும் பெரியோர்கட்கும் அனுபோகமாக அளிக்கப்பெறும் இறையிலி நிலம்.

## மடப்புறம்

திருமால் கோயில்களில் வழிபாட்டின் போது சேவிக்கும் அடியராகிய தாதர்க்கு வாழ்விடமும் இறையிலி நிலமும் அளிப்பதாகும். இவ்வித நிவந்தமும் மடப்புறமென்றே குறிப்பதாகும். மடங்களுக்கும் சமயச் சார்புடைய யோகியர்க்கும் இறையிலியாக விடப்பெற்ற நிலங்களும் வருவாய்களும்.

## மடைப்பள்ளி

கோயிலில் சமையல் செய்யும் இடம்.

## மடைப்பள்ளிபுறம்

கோயில் அடுக்களைச் செலவுக்காக விடப்பெற்ற நிலம் அல்லது கிராமம்.

## மடைப்போக்கு(கி)

மதகிலிருந்து நீர் பாய்வது. கல்வெட்டில் மடைப்போக்கி என்று உள்ளது.

## மறுவாய்

வடிகால் மதகு

## மாத்தால்

மா ஒன்றுக்கு இவ்வளவு என்று நெல் அளத்தல்.

## மின்படுபள்ளம்

மீன்கள் தங்குவதற்குரியதாக இயற்கையாக அமைந்த பள்ளம். விலையாவணம் அல்லது இறையிலி செய்யும் நிலங்களின் உள்ளகப்பட்ட நில நிலைகளைக் கூறும் சாசனப் பகுதியில் இடம்பெறும் குறிப்பாகும்.

## முதலியார்

தலைவன், பெரியோர்.

## முன் மண்டபம்

முகப்பில் உள்ள மண்டபம்

## முனையெதிர் மோகர்

பாண்டியர் படையின் பெயர்.

## மெல்க்கு

மேற்கு

## மே

மேல் - மேல்நோக்கி வளர்ந்துள்ள, மரம் போன்றவற்றைக் குறிப்பது. கீழ், மேல் இரண்டுமே நிலக்குறியீடு (விக்கிரம சோழன் நிலக்குறியீடு-கி.பி.120-1150).

## மேல் எல்லை

மேற்குப் பக்கத்து எல்லை.

## மேலெழுத்து

சாசனங்களில் ஊர்ப் பெருமக்கள் இடும் சான்றுக் கை யெழுத்து.

## மேற்படி

மேலே குறித்தபடி

## மேனோக்கின மரமும் கீனோக்கின கிணறும்

வானை நோக்கி எழுந்துள்ள எழும் பயன்தரும் மரங்களும் பூமியின் கீழ் அகழ்ந்துள்ள கிணறும் நீர்நிலைகளும்.

**வசம்**

இடம், இடத்து

**வரி**

அதிட்டானத்தில் உள்ள பெரிய நீண்ட சதுரமான அமைப்பு

**வாங்கி**

வாங்குதல் - இடித்தெடுத்து, இடித்து வாங்கி. கல்வெட்டுச் செய்திகளுள் இவ்வெச்சச் சொல் பழமை மிகுந்ததனால் பழுதுப்பட்டிருந்தக் கட்டடங்களை இடித்தெடுக்கும் கருத்திற் கமைந்தப் பொருளமைதியுடன் கையாளப் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கது.

**வாரம்**

விளைவில், பெருக்கத்தில் தொடர்ந்து பெறும் பங்கு - குறைத்துப் பெறும் வரி. வேதத்தை ஓதும் வகை தீர்வை, விளைவில் பங்கு.

**விடங்கன்**

உளியால் செதுக்கப்படாதவர். சிவன் கோயில்களில் மூலவராகவும் அருவுருவாகவும் அமைக்கப்பெறும் சிவலிங்கத் திருமேனியாகும். இலிங்கம் உளியால் செதுக்கப்படாமல் இயல்பாக அமைந்த கற்களில் அமைக்கப் பெறுமாயின் 'விடங்கம்' என்று பெயர்பெறும். இயற்கையாக இரேகையும் ஒளியும் திரட்சியும் நீட்சியும் ஒருங்கே பொருந்திய கற்கள். கங்கை, நருமதை, கோதாவரி ஆகிய தெய்வ நதிகளினின்றும் எடுக்கப்பெற்று சிவ மூர்த்த லிங்கங்களாக அமைக்கப் பெறுவது காமிக ஆகம விதியாகும். அத்தகைய இலிங்கங்களே விடங்கத் திருமேனியாகும். இதனைச் சுயம்பு என்றும் கூறுவர்.

## விண்ணகரம்

விஷ்ணுகிரகம், விஷ்ணு ஆலயம் (விண்ணகர்)

## விண்ணப்பஞ் செய்ய

இறைவன், அரசன், திருமுன்னர் அறிவித்துக் கொள்ளளூ முன்னர் நின்று முறையாகப் பாட.

## விண்ணப்பம்

அரசன் செய்ய விரும்பிய அறச் செயல்களைக் காலமும் இடமும் அறிந்து நினைவுப்படுத்துவது, விண்ணப்பமாகும். அரசன் ஆணையினைக் குறிப்பிட்டபடி நிறைவேற்றி அறச் செயலாக்குவது ஆணைத்தியாகும்.

## வியஞ்சனங்கள் (வஞ்சனம்)

திருக்கோயில்களில் நாளும் நிகழும் வழிபாட்டிற்கு அமைந்த நியதிப் பொருட்கள். உணவு.

## விலை

ஏலம் கூறுதல். கிரயம் செய்வதாக விலையைப் பகிரங்கமாகத் தெரிவித்தல்.

## விலைப்பிரமாணம்

கிரையப்பத்திரம், எத்தகைய குற்றமும் இல்லாத நிலையில் விற்பனை செய்த செய்தியுடைய உறுதிச்சீட்டு.

## விலையுற

நிலத்திற்குரிய விலை மதிப்பினைக் குறைவின்றி உறுதிப்பாடு செய்து அதற்கமைந்தப் பொருளினை மிச்சமின்றி விற்பானிடம் கொடுத்து.

## விலையறக் கொண்டு பொருளறக் கொடுத்து

நிலத்திற்குரிய விலை மதிப்பினைக் குறையின்றி உறுதிப்பாடு செய்து, அதற்கமைந்த பொருளினை மிச்சமின்றி விற்பானிடம் கொடுத்து.

## விழுக்காடு

வீதம் / பங்கு

## விளாகம்

வளாகம் பரந்த நன்செய் நிலம்.

## விஜயாபிஷேகம்

வெளிநாடுகளைக் கைப்பற்றி அடக்கப் படையெடுத்துச் சென்ற மன்னன் வெற்றியோடு தலைநகர் திரும்பியவுடன் செய்து கொள்ளும் வெற்றித் திருமுழுக்கு.

## வீரர் அபிஷேகம்

வீராபிடேகம். தன்னோடு பகைத்து நின்ற நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, நேரில் போரில் பகைவரையும் அவரது நாட்டினையும் அழித்து வெற்றிக்களிப்புடன் தலைநகர்க்கு மீண்ட அரசன், தன் வீரச் செயலைப் பிறவரசரும் அறியுமாறு செய்து கொள்ளும் அபிடேகப் பெருவிழா வீராபிஷேகம் என்பதாகும்.

## ஸம்மதித்து

உடன்பட்டு

## ஸ்தூபி (தூபி)

கோயில் விமானத்தின் உச்சிக் கோயில் விமானத்தின் தலைப்பில் கலசம் பொருந்தும் உலோகத்தாலானக் கம்பம் அல்லது விமானச் சிகரத்தின் மீதுள்ள கலசம்.

## ஸ்தூபிக்குடம்

விமானத்தின் உச்சியில் வைக்கும் கலசம்.

## ஸ்வஸ்திஸ்ரீ

சாசனங்களின் துவக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர். ஸ்வஸ்தி என்றும் சில சாசனங்களில் பொறிக்கப்பட்டிருக்கும். ஸ்வஸ்தி - "மங்கலம் உண்டாகுக" என்பதும் "நலம் வளர்க்க" என்பதும் இதன் பொருள்.

## ஜகதி

கோயில் கருங்கல் கட்டடத்தில் அஸ்திவாரத்தின் மேற்பகுதி. கற்றளிகளின் அடிப்படையிலிருந்து பீட வரிசையாகத் தொடர்ந்து எழும் சிற்ப அடுக்குகளில் பலகை முகப்பாக அமையும் பகுதி ஜகதிப் படையாகும். அதிட்டானத்தில் அழகுப் பணிகளில் ஒன்று.

## ஸ்ரீகாரியம்

கோயிலின் தலைமை அதிகாரி.

## ஸ்ரீஹஸ்தம்

திருக்கைத் தெய்வத் திருமேனியின் கை

## ஸ்ரீபண்டாரம்

கோயில் பொக்கிஷம்

## ஸ்ரீபண்டார அறை

கோயில் பொக்கிஷத்தைப் பாதுகாக்கும் அறை. சொத்து, நகை முதலியவற்றைப் பாதுகாக்கும் அறை. கோயில் சொத்துக்களைப் பாதுகாக்கும் அறை. கோயிலுக்கான மூலதனமாகும் பொன்னையும் மணிகளையும் பிற மதிப்புடையப் பொருள்களையும் சேமித்துப் பாதுகாக்கும் அறை.

## ஸ்ரீமாயேசுரிகள்

சிவனடியார்கள். கோயில் நிர்வாகத்தில் பங்கு உள்ள குழுவினர்.

## ஸ்ரீவிமானம்

கோயில் இறையகத்தின் மீது எழுப்பப்பெறும் ஒப்பனைப்பகுதி. இது கொடுங்கை மேலமையும் வரிநிலை பீடம் முதலாக கும்பம் அளவினதாக அமைக்கப் பெறும். இதனை அடிப்படை முதலாக ஸ்தூபி வரையிலென்றும் அளவிடுவர்.

# துணைநூற்பட்டியல்


1. அருள்மனோகரி.பா., பொதிகையடிவார ஊர்ப்பெயர்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 2008, முதற்பதிப்பு.
2. உமாமகேசுவரி.பு.பா., நெல்லையப்பர் கோயில், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1990, முதற்பதிப்பு.
3. கணபதிராமன்.ச., தென்காசி அருள்மிகு காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில் தலவரலாறு, அருள்மிகு காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில் வெளியீடு, 2011, முதற்பதிப்பு.
4. கழகத்தமிழ் அகராதி, கழக வெளியீடு, 2004, பத்தொன்பதாம் பதிப்பு.
5. கஸ்தூரி நாகராசன், திருக்குற்றால தல வரலாறு, திருவாவடுதுறை ஆதினம், 1996, முதற்பதிப்பு.
6. காசிநாதன்.நடன., கல்வெட்டு ஓர் அறிமுகம், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1976
7. காசிநாதன்.நடன., தமிழர் நாகரிகம், முதல் தொகுதி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1994, முதற் பதிப்பு.
8. கோபாலன்.தே., காசிநாதன்.நடன., (பொ.ஆ), நெல்லை மாவட்டம் கையேடு, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, சென்னை, 1997, முதற்பதிப்பு.
9. கோவிந்தராசனார்.சி., (உ.ஆ), அடிகளாசிரியர் (உ.ஆ), தமிழகக் கல்வெட்டுக்கள் ஆராய்ச்சிக் குறிப்புரைகளுடன், மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சை.
10. கோவிந்தராசன்.சி., கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1987, முதற்பதிப்பு.
11. சதாசிவ பண்டாரத்தார்.டி.வி., பாண்டியர் வரலாறு, அப்பர் அச்சகம், சென்னை, 1996, ஐந்தாம் பதிப்பு
12. சதாசிவ பண்டாரத்தார்.டி.வி., பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதிI, நாம்தமிழர் பதிப்பகம், சென்னை, 2008, முதற்பதிப்பு.
13. சதாசிவ பண்டாரத்தார்.டி.வி., பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி-II, நாம்தமிழர் பதிப்பகம், சென்னை, 2010, இரண்டாம் பதிப்பு.

14. சுப்பிரமணியன்.ச.வே., (ப.ஆ), நெல்லை மாவட்டம், உலகத்தமிழ்க் கல்வி இயக்கம், தமிழூர், 2002, முதற்பதிப்பு.
15. சுப்பிரமணியன்.தி.நா., ஸ்ரீதர்.தி.ஸ்ரீ., (பொ.ப.ஆ), கல்வெட்டுச் சொல்லகராதி, தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சென்னை, 2011, முதற்பதிப்பு.)
16. செல்லம்.வே.தி., தமிழக வரலாறும் பண்பாடும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.
17. சேதுப்பிள்ளை.ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2005, ஏழாம் பதிப்பு.
18. சேதுராமன், என்., பாண்டியர் வரலாறு, சந்திரா பிரிண்டர்ஸ், கும்பகோணம், 1989.
19. தர்மராஜ்.ஜே., தமிழக வரலாறு, டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, 2010, இரண்டாம் பதிப்பு
20. தர்மராஜ்.ஜே., கல்வெட்டியல், டென்சி பப்ளிகேஷன்ஸ், சிவகாசி, 2011, நான்காம் பதிப்பு.
21. நாகாசாமி.இரா., சந்திரமூர்த்தி.மா., ஸ்ரீதர் (ப.ஆ), தமிழக் கோயிற்கலைகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு, 2009, நான்காம் பதிப்பு.
22. திருநாவுக்கரசு.க.த., முதலாம் இராசஇராசன், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1975, முதற்பதிப்பு.
23. நீலகண்ட சாஸ்திரி.கே.ஏ., ராமன்.கே.வி., (த.ஆ) சோழர்கள், புத்தகம் I, இந்தியன் கவுன்ஸில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச், நியூதில்லி, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்., சென்னை, 2009, மூன்றாம் பதிப்பு.
24. நீலகண்ட சாஸ்திரி.கே.ஏ., ராமன்.கே.வி., (த.ஆ) சோழர்கள், புத்தகம் II, இந்தியன் கவுன்ஸில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச், நியூதில்லி, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்., சென்னை, 2009, மூன்றாம் பதிப்பு.
25. பிள்ளை.கே.கே., தமிழக வரலாறும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977, முதற்பதிப்பு.
26. மனோன்மணி.தி., செல்வநாயகி.தி., தொல்லியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2010, முதற்பதிப்பு.

27. முத்துசாமிபிள்ளை.கோ.மு., (சி.ஆ), கோயிற்களஞ்சியம் அறிமுகம், தஞ்சைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991, முதற்பதிப்பு.

28. முத்துசாமிபிள்ளை (சி.ஆ), கோயிற்களஞ்சியம் அறிமுகம், தஞ்சை பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991, முதற்பதிப்பு.

29. Thirumalai.R., Rajendra Vinnagar, Tamil Nadu State Department of Archaeology, 1980, First Edition.

30. ஸ்ரீதர்.தி.ஸ்ரீ., திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுக்கள் தொகுதி-I, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை, 2009, முதற் பதிப்பு.

31. Annual Report of Epigraphy, 1917.

1. திருவாலிச்சுவரர் கோயில் கல்வெட்டுக்கள் 1 - 20
2. ஸ்ரீ வெங்கடாசலபதி கோயில் கல்வெட்டுக்கள் 1 - 41
3. மடை கல்வெட்டுக்கள் - 2













